சிவபெருமானால் ராமருக்கு உபதேசிக்கப்பட்ட

# சிவ கீதை



# சித்தம் சிவமயம்

ஞானதான அறக்கட்டளை

கீதாரத்தினமும் சகல சாஸ்திரஸாரமுமாகிய

# ஸ்ரீ சிவகீதை

## மூல ஸ்லோகமும்

மருவூர் - பிரம்மஸ்ரீ

**கணேச சாஸ்திரியார்** அவர்கள்

**இயற்றிவரும் தமிழ் வியாக்கியானமும்**

இவை

**மதுரைத் தமிழ்ச் சங்கத்து வித்துவான்**

சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

**பூவை-கலியாணசுந்தர யதீந்தரர்** அவர்கள்

பார்வையிட்டுத்தர,

சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவர்
பாததூளியாகிய

**கா. ஐம்புலிங்கமுதலியாரால்**


சென்னை

**பிரஸிடென்ஸி அச்சியந்திரசாலையிற்**
பதிப்பிக்கப்பட்டன.

**112 ஆண்டுகளுக்குப் பிறகு மறுபதிப்பு**

**மறுபதிப்பும், இலவச வெளியீடும்**

**சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளை**

மதுரை

# நூல் விபரங்கள்

நூல் பெயர் : ஸ்ரீ சிவகீதை

நூல் உரையாசிரியர் : மருவூர் பிரம்மஸ்ரீ கணேச சாஸ்திரியார்

நூலின் வகை : சைவசமயம் / சித்தாந்த சாஸ்திரம்

மறு பதிப்பு : ஹேவிளம்பி வருடம், தைத்திங்கள்
பிப்ரவரி 2018

நூலின் அளவு : 1/8 டெம்மி

பக்கங்கள் : 240

தாள் : 18.6 கி.கி. மேப்லித்தோ

எழுத்து : 12 புள்ளிகள்

படிகள் : 1000

விலை : (ரூ.200/-) இந்நூலைப் படித்து உணர்வதும், கைவல்யமுத்தி காண, தக்க குருவினைத் தேடி, அவர் சொல்லும் வழிமுறைகளைக் கடைப் பிடித்து, அதன்படி நடப்பதுவுமே நூலின் உண்மை விலை.

வெளியீடு
கிடைக்குமிடம் : சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளை,
மூவேந்தர் நகர் 2-வது வீதி,
மதுரை - 625 014
செல்லிடப்பேசி : 98423 35085.
99521 58359, 98431 31353
Email ID : gnanathaanam@gmail.com

நூல் அமைப்பு : ஸ்ரீகணநாத நாயனார் நூலகம்,
மு.ஜயக்குமார்,
39/22, கிருஷ்ணாபுரம் முதல்தெரு,
திருச்சிராப்பள்ளி-620 008.
99528 06121-Airtel 89037 06120-BSNL
Email ID : gnanam.tcy@gmail.com

அச்சாக்கம் : ஆர்.ஜி.பிரிண்டர்ஸ்
சின்னக்கடைத்தெரு, திருச்சிராப்பள்ளி-2.
போன் : 0431-2700417, 98949 08437.

# பொருளடக்கம்



---

முதற் பதிப்பின் முதல் பக்கம்

கீதாரத்தினமும் சகல சாஸ்திரஸாரமுமாகிய

# ஸ்ரீ சிவ கீதை

மூலஸ்லோகமும்

மருவூர் - பிரம்மஸ்ரீ
கணேசசாஸ்திரியாரவர்கள்
இயற்றிவரும் தமிழ் வியாக்கியானமும்,

இவை

மதுரைத் தமிழ்ச் சங்கத்து வித்வானான
சித்தாந்தசரபம் அஷ்டாவதானம்
பூவை - கலியாணசுந்தர யதீந்திரரவர்கள்
பார்வையிட்டுத்தர,

சுத்தாத்துவித சித்தாந்த வைதிக சைவர்
பாததூளியாகிய
கா - ஜம்புலிங்கசுந்தரய்யரால்

சென்னை
பிரஸிடென்ஸி அச்சியந்திரசாலையிற்
பதிப்பிக்கப்பட்டன.



நன்றி : மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்
அடையாறு, சென்னை-20.



श्रीमत्पद्मपुराणान्तर्गता

# शिवगीता ।



## बालानन्दिन्याख्यव्याख्यया

विद्वद्वरश्रीमल्लक्ष्मीनरहरिसूनुविरचितया समलंकृता

सेयं

पणशीकरोपाह्वलक्ष्मणशर्मतनुजनुषा वासुदेवशर्मणा

पदच्छेदपरसवर्णाद्याधुनिकरीत्या परिष्कृता ।



मुम्बय्यां

पाण्डुरङ्ग जावजी

इत्येतैः स्वीये निर्णयसागराख्यमुद्रणयन्त्रालये

आयसाक्षरैरङ्कयित्वा प्रकाश्यं नीता ।

शाकः १८५०, सन १९२९.

சிவ கீதை ஆங்கில மொழியாக்கமும் – உரையும்

# SIVA - GITA

## PREFACE

I am beholden to Dr. K. Venkatasubramanian, Trustee and Chief Editor, Centenarian Trust for not only asking me to give an English translation of *S'iva-gïtä* but supplied the text in Sanskrit with the very valuable commentary called *Bälänandinï* by Hari Pandita, son of S'rï Lakshmï Narahari. I have followed his commentary in my translation. Hari Pandita seems to be an Advaitin of great scholarship. No wonder he is free from narrow prejudices and sectarianism. *S'iva-gïtä* itself is free from any kind of bigotry as is evident from some verses in it (see particularly XVIth Chapter, Verse 6).

I wish I were able to give more elaborate notes on the *S'iva-gïtä* sections, particularly dealing with the esoteric *mantras*. Scholars more competent than I will be fulfilling that need in the future.

I congratulate the Cee Gee Graphics for the neat print and get-up of the work. The readers, I hope, will welcome this work forgiving the shortcomings found therein.

– ***P.K. Sundaram***

Publisher :

**THE CENTENARIAN TRUST**
11, Rajachar Street,
T. Nagar, Chennai - 600 017.
Tel : 044 - 8281938

*Sole Distributor:*
**Variant Communications,**
11, Rajachar Street,
T. Nagar, Chennai - 600 017 (India)
EMail : allinnov@giasmd01.vsnl.net.in
Fax : 91-44-8256971 ATTN 277



உ

திருச்சிற்றம்பலம்

''பிரதிஷ்டா பாஸ்கர'' ''சிவநெறி செம்மல்''

''சித்தாந்த ரத்தினம்'' ''சிவாகம வாசஸ்பதி''

**S.கண்ணப்ப சிவாசாரியார், M.A.,(S)**

(சா. பசுபதி குருக்கள்)

முதல்வர்,
வேதசிவாகம திருமுறைப் பாடசாலை
''கௌசிகராஸ்ரமம்''
திருஞானசம்பந்தர் அவதார இல்லம்.
எண். 6, திருஞானசம்பந்தர் தெரு,
சீர்காழி-609 110. போன் : 04364-272116.

இல்லம் :
''ஸ்ரீமருதாலயம்''
64, தெற்கு மடவளாகம்,
திருவிடைமருதூர்-612 104.

# ஆசியுரை

''சிவமஸ்து ஸர்வ ஜகதாம்''

சிவமதாம் தன்மை வந்தெய்திட ஏகனாகி இறைபணி நிற்கவும். அவனருட் கொடை நூற்கடலுள் ''சிவகீதை'' சிறப்பிடம் பெற்றது. ஆம், கீதை என்றால் ''பகவத் கீதை'' தான் நினைவில் வருவதாக உலக வழக்கு. ஆனால் 26 கீதைகள் உள்ளன. அவற்றுள் பிரபலமான சிலவும் உண்டு. அவை குருகீதை, கபிலகீதை, உத்தவகீதை, வியாசகீதை, ஹம்ஸகீதை முதலியனவாம். இதிகாசங்கள் இரண்டிலும் ஸ்ரீ மஹாவிஷ்ணு-இராமராக, கிருஷ்ணராக அவதரித்து, முறையே அகஸ்தியர், உபமன்யு ஆகியவர்களிடம் சிவதீக்ஷையும், அனுக்கிரஹமும் பெற்று உய்வடைகிறார்கள். ஸ்ரீராமருக்கு சிவபெருமான் உபதேசித்த இச்சிவகீதை பற்பல சித்தாந்த உண்மைகளை நமக்கு உணர்த்துகிறது. குறிப்பாக,

''யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி
ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவார்''

என்ற சாத்திர உண்மையை சிவபிரான் இராமருக்கு அருளிச் செய்கிறார்.

𑌯𑍇𑌪𑍍𑌯𑌨𑍍𑌯𑌦𑍇𑌵𑌤𑌾𑌭𑌕𑍍𑌤𑌾 𑌯𑌜𑌨𑍍𑌤𑍇 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 ।
𑌤𑍇𑌪𑌿𑌮𑌾𑌮𑍇𑌵𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌯𑌜𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌮𑍍 ॥ ௩.

*(சிவகீதை-அத்-12 பாடல் 3)*

எவரெவர் தாம் தேவதைகளிடம் பக்திகொண்டு சிரத்தையுடன் பூஜிக்கிறார்களோ, அவரவர்களும் விதிப்படி என்னையே பூஜிக்கிறவராவார்கள்.

𑌯𑍇𑌨𑌰𑍂𑌪𑍇𑌣𑌯𑍇𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌾 𑌮𑌾𑌮𑍇𑌕𑌂𑌸𑌮𑍁𑌪𑌾𑌸𑌤𑍇 ।
𑌤𑍇𑌨𑌰𑍂𑌪𑍇𑌣𑌤𑍇𑌭𑍍𑌯𑍋𑌹𑌂 𑌪𑍍𑌰𑌸𑌨𑍍𑌨𑍋𑌵𑌾𑌞𑍍𑌛𑌿𑌤𑌂𑌦𑌦𑍇 ॥

*(சிவகீதை-அத்-12 பாடல் 5)*

எந்த மனிதர் எந்த வடிவமாக "ஒருவனேயான" என்னை பூஜித்தாலும் அந்த வடிவுடன் அவர் விரும்பியதை நானே அளிக்கிறேன்.

வேதாகம வடமொழி நூல்கள் மீதும் வடமொழி மீதும் சில சைவர்கள் கொண்ட பிணக்கு நீங்கிடவும், சைவ-வைணவ சமயப் பிணக்குகளைக் களையவும், இந்நூல் மிகப் பயனுள்ளதாகும். மிகப் பழமை வாய்ந்த பல 'நன்னூல்களைத் தேடி புதியதாய் பதிப்பித்து வரும் நமது திருச்சி ஸ்ரீகணநாதர் நூலகமும், மு.ஜயக்குமாரும் செய்யும் சைவத் திருப்பணி காலத்தில் சிறந்த கனி போன்றது. இந்த நூலை இலவசமாக வெளியிடும் மதுரை, சித்தம்சிவமயம் ஞானதான அறக்கட்டளையினருக்கு, இன்று போல் என்றும்! என்றும்!! இறையருள் துணை நிற்க! இருநல புகழ் நல்கும் இடைமருதீசரை வணங்கி உளமார வாழ்த்துகிறோம்.

வாழ்க! வளர்க! ஆசீர்வாதம்!

*மழை வழங்குக; மன்னவன் ஓங்குக;*
*பிழையில் பல்வளம் எங்கும் பெருகுக;*
*தழைக அஞ்செழுத்து ஓசை தரையெலாம்*
*பழைய வைதிக சைவம் பரக்கவே.* — கோயிற் புராணம்



உ
சிவ சிவ
அழகிய திருச்சிற்றம்பலமுடையார் துணை
திருக்கயிலாய பரம்பரை, செங்கோல் ஆதீனம்
103-வது குருமகா சந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக சத்தியஞான**
**பரமாச்சார்ய சுவாமிகள்**
ஆதீன கர்த்தர், செங்கோல் ஆதீனம்
பெருங்குளம்-628 752. தூத்துக்குடி மாவட்டம்.
தொலைபேசி : 04630-27411, 7598271411.



---

# அருள் வாழ்த்துரை

*"சிவமான ஞானந் தெளியவொண் சித்தி*
*சிவமான ஞானந் தெளியவொண் முத்தி*
*சிவமான ஞானஞ் சிவபரத்தே யேகச்*
*சிவஞான ஞானஞ் சிவானந்த நல்குமே."* - திருமந்திரம்

பரம கருணாமூர்த்தியான சிவபரம்பொருள் ஆன்மாக்கள் உய்யும் பொருட்டு தனு, கரண, புவன போகங்களைப் படைத்து, இன்ப துன்பங்களில் அனுபவிக்கச் செய்து முக்திப் பேற்றினை அருளுகின்றார். வீடுபேறு அடைய விரும்பும் ஆன்மாக்கள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்கிற நான்கு நெறிகளில் சோபான முறையிலே (படிமுறை) ஞான நெறியிலே நின்றே சிவத்தை அடைந்து திருவடிப்பேற்றினை அடைய முடியும் என்று நமது வேதங்களும் ஆகமங்களும் கூறுகிறது.

ஞானநூலாகிய சிவகீதை என்ற இந்த நூலானது வனவாசத்தின்பொழுது ஸ்ரீராமருக்கு சிவபெருமான் உபதேசிக்கும்போது கேட்டுக்கொண்டிருந்த ஸ்கந்தபிரான் அதை சனத்குமாரருக்கும், சனத்குமாரர் அதை வியாசருக்கும், வியாசர் அதை சூதமுனிவருக்கும், உபதேசிக்க இவ்வாறு குரு பரம்பரையாக மட்டுமே உபதேசிக்கப்பட்டு வந்த காரணத்தினால் இந்நூல் அநேகர் அறியமுடியாத நூலாகவே

அமைந்துவிட்டது. மஹாபாரத்தில் சிவகீதை இருப்பது போன்று பதினெண்புராணங்களில் ஒன்றான பத்ம புராணத்தில் சிவகீதை இருக்கிறது. **பகவத்கீதைக்கு முதல் நூல் சிவகீதையே ஆகும்.** சிவபெருமான் சிவகீதையை ஸ்ரீராமருக்கு உபதேசித்தார். ஸ்ரீராமர் தமது அடுத்தடுத்த அவதாரமான கிருஷ்ணாவதாரத்தில் சிவகீதையை அர்ஜுனருக்கு பகவத்கீதையாக உபதேசித்தார்.

உயரிய ஞானநூலாகிய இந்த சிவகீதையை அடியார் பெருமக்கள் பொருள் உணர்ந்து படித்து இன்புற வேண்டும் என்ற உயர்ந்த நோக்கத்துடன் மருவூர், பிரம்மஸ்ரீ கணேச சாஸ்திரியார் அவர்களால் உரை எழுதி 1906-ஆம் ஆண்டு புத்தகமாக வெளியிடப்பட்டதை "சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளையின்" திரு. R.செந்தில்குமார் அவர்களின் பெருமுயற்சியால் மீண்டும் பதிப்பிக்கப் பெறுவது குறித்து மிக்க மகிழ்ச்சி. அவர்களுக்கு நமது வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்வதுடன் அடியார் பெருமக்கள் இந்நூலைப் படித்து சிவபக்தியில் உறுதியுடன் நின்று சிவஞானப் பேற்றினை அடைய நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய அழகிய திருச்சிற்றம்பலமுடையார் திருவருளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

சிவ சிவ



உ
சிவமயம்

# சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளை

மூவேந்தர் நகர் 2-வது வீதி, விஸ்வநாதபுரம், மதுரை-14.
e-mail id : gnanathanam@gmail.com

## அறிமுகமும் - பணிகளும்



**அறக்கட்டளையின் பணிகள்:**

சிவாலயங்களுக்கு அபிஷேக பொருட்கள், பூஜைப்பொருட்கள், வஸ்திரங்கள், நைவேத்தியப் பொருட்கள் கொடுத்து வழிபடல், உழவாரப்பணி செய்தல், சைவசமயம் சம்பந்தமான பழைய நூல்களை சிவபுண்ணியச் செல்வர்களின் உதவியுடன் மறுபதிப்புச் செய்து இலவசமாக வழங்குதல்.

*எங்களது இலவச வெளியீடுகளைப்பெற எமது முகநூல் பக்கத்தினை* (https//www.facebook.com / siththamsivamayam - like *செய்து தங்களது முகவரியை* Pin-Code & Mobile Number-வுடன் Comment-டில்- *பதிவு செய்திடவேண்டுகிறோம்.*

# முன்னுரை

இறைவனால் அருளப்பட்ட சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளை மேன்மையான சிவஞானத்தை எளிய முறையில் மக்கள் அறியும் வகையில் புத்தகங்களை வண்ணப் படங்களுடனும், தமிழ் விளக்கத்துடனும் ஞானதானமாக வெளியிடுவதை முழுமுதல் நோக்கமாக கொண்டுள்ளது.

''எம்மை எதுவாக கருதி வழிபடுகின்றீர்களோ, யாம் அதுவாகவே இருந்து அனைத்து நன்மைகளையும் வழங்குகிறோம்'' (அப்படியே ஆகட்டும்) என்ற ரிபு கீதையின் வாக்கியத்திற்கு நிலைப்பாடாக வாழ்ந்தவர் **''சாந்நித்யகுரு'', கார்வார், பூஜ்யஸ்ரீ ''புஷ்பவன நாயகம் ஆண்டவர்''** அடியேனது முதல் குரு. சிந்தையில் சிவத்தை ஊற்றி வளர்த்த அவரது உபதேசங்களில் சிவகீதை, குருகீதை, ரிபுகீதை, திருமூலரின் திருமந்திரம் ஆகியன முக்கிய இடம் வகித்தன. அவரே அடியேனை குகானந்த குருபீடத்தில் ஞானதான அறக்கட்டளைக்கு ஸ்ரீ குருவாக பயிற்சி கொடுத்தவர். அடியேனது வாழ்வில் ஆன்மீக அருள் அனுபவங்களை ஏற்படுத்திய அனைத்து குருமார்களுக்கும் அடியேனது வணக்கங்கள்.

சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளையின் முதல் வெளியீடான இந்த சிவகீதையானது, பதினெண்புராணங்களில் ஒன்றான பத்மம் எனும் மகாபுராணத்தில் உத்தரபாகத்தில் 4-ஆவது பாதாள கண்டத்தில் 23-ஆம் சூசியில் சிவகீதை என்ற உபநிடதத்தில் உள்ளது. 1906ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட கிரந்தத்தில் உள்ள இந்த சிவகீதைக்கு **மருவூர் - ''பிரம்மஸ்ரீ'' கணேச சாஸ்திரியார்** அவர்கள் எழுதிய விளக்க உரையே தொன்மையானதாக அறிய முடிகிறது. அவரின் விளக்க உரையையே புதுப்பித்து வெளியீடாக வெளியிடப்படுகிறது.

எங்களது பணியையும் நோக்கத்தையும் அறிந்து ஆசியுரை வழங்கிய **திருவிடைமருதூர், சிவஸ்ரீ சா. கண்ணப்ப சிவாசாரியார் ஐயா அவர்களுக்கு தாள் பணிந்த வணக்கங்கள்.** மேலும், இந்த சிவகீதை மலரை தம் பொற்கரங்களாலேயே வெளியிட ஒப்புதலும், ஆசிர்வதித்தும் அருளாசியுரையும் தந்த **பெருங்குளம், திருக்கைலாயபரம்பரை செங்கோல் ஆதீனம், 103வது குருமகா சன்னிதானம் ''ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக சத்திய ஞான பரமாச்சார்ய சுவாமிகள்''** அவர்களுக்கு தாள் பணிந்த வணக்கங்கள்.

சிவகீதை நூலை வெளியிட அதற்கான ஒப்புதலை அவர்தம் பெயரர்களிடம் பெற்றுக்கொடுத்தும், நூலினைப் பதிப்பித்துக் கொடுத்தும் உதவிய திருச்சிராப்பள்ளி, ஸ்ரீகணநாத நாயனார் நூலக போற்றுநர், சிவஸ்ரீ. மு.ஜயக்குமார் அவர்களுக்கும், எனது ஆன்மீக முகநூல் நண்பர்கள் வட்டத்தை விரிவுபடுத்த உதவியவரும், இந்த தமிழ் விளக்க மூலநூல் கொடுத்து தவியவருமான சென்னை வாழ் சிவஸ்ரீ ஜெ.கார்த்திக் அவர்களுக்கும் அறக்கட்டளை சார்பாக வணக்கத்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

பெருமதிப்புமிக்க இந்த சிவஞானப் பெட்டகம் நமது அறக்கட்டளையின் நோக்கத்தின்படி ஞானதானமாகவே வழங்கப் பட்டுள்ளது. முதல் பதிப்பான 1000 புத்தகங்களுக்கு தேவையான பொருளை வழங்கி இந்தச் சிவபுண்ணியத்தில் பங்குகொண்ட சிவபுண்ணியச்செல்வர்களுக்கும் என்றென்றும் சிவபெருமானின் அருளாசி உரித்தாக சிவசக்தியை பிரார்த்தனை செய்கிறோம். அந்த சிவபுண்ணியச் செல்வர்களுக்கும் நன்றி கலந்த வணக்கங்கள்.

## எமது அடுத்த வெளியீடுகள்

சிவகீதையின் அடுத்த பதிப்பில் சிவகீதையின் கருத்துக்களை தெளிவுபடுத்தத் தேவையான வண்ணப்படங்களுடனும், மூலம் கிரந்தம் + தேவநாகரி + தமிழ் எழுத்துக்களையும் அதற்கான தமிழ் உரையும், பத்ம புராணத்திலுள்ள வேதசார சிவ ஸஹஸ்ரநாமம். அகத்தியர் இராமருக்கு உபதேசம் செய்தது. (சிவகீதை- அத். 3 - சுலோ.-32) சேர்த்து வெளியிட முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டுள்ளன. கந்தபுராணத்திலுள்ள சிவபெருமானின் சிவபராக் கிரமம் என்னும் 64 வடிவங்கள் பற்றி விரிவான வரலாறுகளுடன் தனித்தனி நூல்களாக வெளியிடுதல்.

அடுத்து ரிபுகீதையை வெளியிட்டு சாநித்திய குருவிற்கு நன்றி காணிக்கையை செலுத்த விரும்புகின்றோம். ரிபுகீதை என்பது கைலாயத்தில் பரமசிவனால் உமாதேவிக்கு சம்பாவனையாக (உரைநடையாக) உபதேசிக்கப்பட்ட பதினாறு அம்சங்கள் கொண்டது. மஹா இதிகாசமான சிவரகசியத்தில் ஆறாவது அம்சமாக ரிபுகீதை உள்ளது. ரிபுகீதை பரமசிவனால் ரிபு முனிவருக்கும், ரிபு முனிவரால் கேதாரஸ்தலத்தில் நிதாகர் முதலியோருக்கும் உபதேசிக்கப்பட்டதாகும்.

ஐம்பது அத்தியாயங்களில் 2493 வடமொழி சுலோகங்களை கொண்டதாகும். இதன் வடமொழி மூல சுலோகத்திற்கான தமிழ் உரை தமிழ் போற்றும் சைவ உலகிற்கு கிடைக்கவில்லை. வடமொழி மூலத்தை உலகநாத ஸ்வாமிகள் என்னும் துறவு நாமம் பூண்ட திருவிடைமருதூர் பிரம்மஸ்ரீ பிக்ஷு சாஸ்திரிகள் தமிழில் 44 அத்தியாயங்களில் 1924 விருத்தப்பாக்களாக பாடியுள்ளார்.

இந்த அற்புதநூலை குறுகிய காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த ஆர்.ஜி. பிரிண்டர்ஸ் உரிமையாளர் உயர்திரு. ஆர். ஞானசேகரன் அவர்களுக்கும், அவர்தம் பணியாளர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவஅடியார்கள் அனைவரின் வேண்டுதலுக்கு இணங்க சிவபெருமானின் கருணையால் நிச்சயம் வழி கிடைக்கும். அது போலவே மற்ற சிவஞான விசயங்களும் வெளியிட உள்ளோம்.

> ''யான்பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
> வான்பற்றி நின்ற மறைபொருள் சொல்லிடின்
> ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
> தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே.''

என்ற திருமூலரின் வரிகளுக்கு ஏற்ப இறைத்தன்மையை பற்றி பேசப்பேச எழுத எழுத நினைக்க நினைக்க இறைவன் நம் மூலம் வெளிப்பட்டு நம் உயிர் இறைத்தன்மை பெற்று வருகிறது.

**வாரீர்! ஊர் கூடித் தேர் இழுப்போம் வாரீர்!!**
**வாரீர்! சிவனருள் பெறுவோம் வாரீர்!!**

ஆகவே, இந்த சிவபுண்ணியங்களை வழிநடத்திட, பெரியோர்கள் நல்லாசிகளையும், நல்ஆதரவையும் வழங்கிட வேண்டுகிறோம். இந்தச் சிவபுண்ணியங்களில் பங்கு பெற விருப்பம் உள்ள அன்பர்கள் எங்களைத் தொடர்பு கொள்ளலாம். இந்த சிவபுண்ணியங்களுக்கு (ஞானதானத்திற்கு) தேவையான பொருள்களை தானமாகத் தரலாம். வரைபடக் கலைஞர்கள், DTP டிசைனர்கள், தங்கள் திறமையை தானமாகத் தரலாம். புத்தக வெளியீட்டாளர்கள் எங்களோடு இணைந்து செயல்பட வேண்டுகிறோம். ஏற்போர் இணைந்து வாருங்கள், அதுவே இறைவனின் ஆசியைப் பெற எளிய வழியாம்.

S. ஆனந்த்
அறங்காவலர் - செயலர்

R. செந்தில்குமார்
நிறுவனர் - தலைவர்

# அனுமதியுரை

6/333 Valayapathi Street,
Mogappair East, Chennai-600037
Email: [illegible]@gmail.com
Cell: 9444003124
11 November 2017-11-11

Thiru M. Jayakumar
39/22 Krishnapuram,
Muslim Street,
Tiruchirapalli-620008.

Dear Thiru Jayakumar,

We are very glad that you are undertaking to reprint my grandfather's book SIVA GEETHAI.

On behalf of my two brothers, Thiru M.K. Sunderam and Thiru K. Ramachandran, and on my own behalf, we hereby give you, with Pleasure, permission to reprint my grandfather Marur Bramahashri Ganesa Sastriar's Tamil Book SIVA Geethai.

We take this opportunity to appreciate your efforts in propagating Siva Siddhathantham in Tamilnadu.

Best regards,

Krishnan Natarajan
Grandson of Bramahshri Ganesa Sastriar



# சிவகீதை - கடந்து வந்த பாதை

இறைவனாகிய சிவபெருமானால் அவதாரமாகிய இராமருக்கு உபதேசிக்கபட்ட சிவகீதை பத்மபுராணத்தில் உத்திரபாகத்தில் உள்ளது. தண்டகாரண்யத்தில் சீதையை பறிகொடுத்து துக்கத்தில் இருந்த இராமருக்கு அகத்திய முனிவர் விரஜா தீட்சை அளித்து சிவவிரதமிருந்து சிவபூஜை செய்ய வழிகாட்டினார். இராமரின் சிவவிரதத்திலும் சிவபூஜையிலும் மகிழ்ந்த சிவபெருமான் பாசுபதா அஸ்திரத்தை வழங்கி செய்த உபதேசமே சிவகீதை ஆகும்.

சிவபெருமான் இராமருக்கு சிவகீதையை உபதேசிக்கும் போது கேட்டுக்கொண்டிருந்த ஸ்கந்த பெருமான் அதை ஸனத் குமாரருக்கு உபதேசித்தார். ஸனத்குமாரர் வேதவியாசருக்கு உபதேசித்தார். வேத வியாசர் சூதமகரிஷிக்கு உபதேசித்தார். சூதமகரிஷி பிற முனிவர்களுக்கு உபதேசித்தார்.

கி.பி.1539 முதல் 1586 வரை காஞ்சிமடத்தின் 57வது ஆச்சாரியராகத் திகழ்ந்த ஸ்ரீ பரமசிவேந்திர ஸரஸ்வதி சுவாமிகள் சிவகீதைக்கு, 'சிவகீதா தாத்பரிய ப்ரகாசிகா' என்னும் விரிவுரையை வடமொழியில் எழுதியுள்ளார்கள்.

சிருங்கேரி, ஸ்ரீ பாரதி தீர்த்த வேத சாஸ்திர க்ரந்தமாலா எனும் வரிசையில் 12வது குஸுமமாகிய ஸ்ரீ சிவகீதா. சிருங்கேரி தக்ஷிணாம்னாய பீடத்தில் கி.பி.1600 முதல் 1623 வரை 24 வது பீடாதிபதியாகத் திகழ்ந்த ஸ்ரீஸ்ரீஸ்ரீ அபிநவ நரசிம்ஹ பாரதி ஸ்வாமிகள் அவர்களால் வடமொழியில் ஓலைச்சுவடியில் 16 அத்தியாயங்கள் கொண்ட சிவகீதைக்கு எழுதப்பட்ட வடமொழி பாஷ்யம்.

'சிவகீதா தாத்பரிய ப்ரகாசிகா' நூலை தியாகராஜ சாஸ்திரி என்பவர் தமிழில் மொழிபெயர்த்து வசன நடையில் எழுதியுள்ளார். பனையோலைச் சுவடியில் உள்ள இந்நூலின் மொழிபெயர்ப்பு காலம் கி.பி.16ஆம் நூற்றாண்டு ஆகும்.

1886ம் ஆண்டு தமிழில் விரிவான விளக்கங்களுடனும் அநேக வேத உபநிடத மேற்கோள்களுடனும் மருவூர் ப்ரம்மஸ்ரீ கணேச சாஸ்திரிகள் அவர்களால் எழுதப்பட்டு 1906-ஆம்

ஆண்டு (773 சுலோகங்கள்) வெளிவந்த தமிழ் வியாக்யான நூலே நமக்கு கிடைத்துள்ள சிவகீதை நூலுக்கு முதன்மையானதாகும். அதன் மறுவெளியீடே இப்பொழுது உங்கள் கைகளில் தவழ்கிறது.

கும்பகோணம் ஸ்ரீமடத்தின் நூலகத்தின் அதிகமான எண்ணிக்கையில் இருந்த ஒரே நூல் சிவகீதை தான் என்று இச்சுவடிகளை ஆய்வு செய்த தொல்பொருள் ஆய்வாளர் ச. கிருஷ்ணமூர்த்தி 'சிவகீதையும் சித்தாந்த மரபும்' எனும் தனது நூலில் ஆராய்ச்சியுரையில் குறிப்பிடுகிறார்.

1914ஆம் ஆண்டில் மும்பை, நிர்ணயசாகர்பிரஸில் சிவகீதை (789) சுலோக வடமொழி மூலம் மட்டும் வெளியிடப்பட்டது.

இலங்கை, புலோலி சிவஸ்ரீ ம.முத்துக்குமாரசாமி குருக்கள் செய்த தமிழுரையோடு நல்லூர் த.கைலாசப்பிள்ளையால் யாழ்ப்பாணத்தில் ஆனந்த வருடம் (ஆங்கிலம் 1914) வெளியிடப்பட்டது.

2004ல் ஸ்ரீ ஆனந்த நாச்சியாரம்மா அவர்கள் எழுதிய 759 சுலோகங்களுக்கான தமிழ் விளக்கவுரை இந்து பப்ளிகேஷனால் வெளியிடப்பட்டது.

17 ஜூலை 2014ல் திருவாடானையில் ஆதிரெத்திநேஸ்வரர் கோயிலில் சிவஸ்ரீ அ.சொர்ண சுந்தரேச குருக்கள், தேவகோட்டை மற்றும் திருவாடானை சிவஸ்ரீ சொ.சந்திரசேகர குருக்கள் அவர்களால் தொகுக்கப்பட்டு, திருவரசு புத்தக நிலையம், 13, தீனதயாளு தெரு, தியாகராய நகர், சென்னை-600 017 மூலம் வெளியிடப்பட்டுள்ளது.

இறைவனால் அருளப்பட்டு மருவூர், ப்ரம்மஸ்ரீ கணேச சாஸ்திரி அவர்களால் தமிழில் வியாக்யானம் செய்யப்பட்ட சிவகீதை என்னும் ஞானப்பெட்டகத்தை திருவருள் குருவருள் துணையுடனும், செங்கோல் ஆதீனம் குருமகா சந்நிதானம் அருள்வாழ்த்துரையுடனும், சிவபுண்ணியச் செல்வர்களின் பொருளுதவியுடனும் சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளை சார்பாக வெளியிடப்படுகிறது.



உ

# பதிப்பாளரின் நன்றியுரை

## ஸ்ரீ கணநாத நாயனார் நூலகம், திருச்சிராப்பள்ளி.

மெய்யன்புடையீர், வணக்கம்.

சிவகீதை என்கிற இவ்வற்புதநூலை வெளியிட வைத்த திருவருளுக்கும் குருவருளுக்கும் முதற்கண் அடியேனது மனம் மெய் மொழிகளாலான வணக்கங்களையும் நன்றிகளையும் சமர்ப்பிக்கின்றேன்.

இந்நூலுக்கு ஆசியுரை வழங்கிய அடியேனது நிர்வாணதீக்ஷை வழங்கியருளிய திருவிடை மருதூர் சிவஸ்ரீ சா.கண்ணப்பசிவாசாரியார் ஐயா அவர்களுக்கும், அருள்வாழ்த்துரை வழங்கிய பெருங்குளம் செங்கோல் ஆதீனம் குருமகாசந்நிதானம் ஐயா அவர்களை வணங்கி மகிழ்கிறேன். அடியேனையும் ஒரு பொருட்டாக மதித்து நூலினை வெளியிட அனுமதி தந்த நூல் உரையாசிரியர் பிரம்மஸ்ரீ கணேச சாஸ்திரியார் அவர்கள் பெயரர் சென்னைவாழ் சிவத்திரு. கிருஷ்ணன் நடராஜன் ஐயா அவர்களுக்கும், அவர்தம் சகோதரர்களுக்கும் எமது பணிவான வணக்கத்தையும் நன்றியையும் சொல்லிக்கொள்கிறேன். இந்த அரிய நூலினை பதிப்பித்துத் தருமாறு கேட்டுக்கொண்ட மதுரை, சித்தம் சிவமயம் ஞானதான அறக்கட்டளை நிறுவனர் உயர்திரு. R. செந்தில்குமார், செயலர் S. ஆனந்த் ஆகியோருக்கு நமது நன்றிகள்.

தற்போது தமிழ் எழுத்திலான மூலமும் உரையும் மட்டும் வெளியிடப்படுகிறது. இந்த நூலினை PDF FILE-ஆக கொடுத்துதவிய நம் நண்பர்கள் சென்னைவாழ் திரு. J. கார்த்திக் அவர்களுக்கும், PDF FILE-லில் விடுபட்ட 2 பக்கங்களை தேடிக்கொடுத்த திரு. இராம்குமார், திரு. குகேசன் அவர்களுக்கும் நன்றிகள். சிவகீதை எனும் இந்த நூலினை பதிப்பிக்கும் சிவபுண்ணியச்செயலுக்கு பொருளுதவி தந்துதவிய அனைவருக்கும் எல்லாம்வல்ல பார்வதிபதியின் திருவருள் கிடைத்திட பிரார்த்திக்கின்றோம்.

இந்த அற்புதநூலை குறுகிய காலத்தில் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த ஆர்.ஜி. பிரிண்டர்ஸ் உரிமையாளர் உயர்திரு. ஆர். ஞானசேகரன் அவர்களுக்கும், அவர்தம் பணியாளர்களுக்கும் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். இதுபோல இன்னும் பல அரிய நூல்களை மறுபதிப்புச் செய்து வெளியிடவும், இன்னும் சிவபுண்ணியச் செயல்கள் செய்திடவும் அறக்கட்டளையினருக்கு துணை நிற்க வேண்டுமாய் எல்லாம்வல்ல பார்வதி பரமேஸ்வரரைப் பிரார்த்திக்கின்றேன்.

— அடியார்க்கடியேன், அகோர சிவகணன் **மு. ஜயக்குமார்**

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# உபோற்காதம்

உண்மை அறிவானந்த வடிவனும் கருணையே திருமேனியாகக் கொண்டவனுமாகிய இறைவனது திருவருளாலேயே சகல ஆன்ம கோடிகளும் அறம் பொருளாதி நான்கு பயன்களையும் பெறவேண்டுமென்பது சகலவேதங்களுக்கும் ஒத்த துணிபு. இத்தகைய திருவருளைப்பெறும் வழியையும், இங்ஙனம் அருள்புரிவோனான இறைவனது ஆணையையும், அவனது திருவுருவ இலக்கணங்களையும், திருவருளின் மஹிமையையும் வேதங்கள் நன்கு விளக்குவனவாயினும், அவ்வேதங்களின் பொருள் எல்லோரும் சுலபமாய் நன்கறிதற்கு ஏலாதெனக் கருதி இதிகாச புராணங்களை இயற்ற ஆஞ்ஞாபனம் செய்தனர்.

## சூத ஸம்ஹிதை

இதிஹாஸபுராணாப்யாம் வேதார்த்தோஹிப்ரகாஶ்யதே ॥

**(இ-ள்):** இதிகாசபுராணங்களால் வேதப்பொருளே விளங்குகின்றன.

யஶ்சதுர்வேதவித்விப்ர: புராணம்வேத்திநார்த்தத:,
தந்த்ருஷ்ட்வா யமாப்நோதி வேதோமாம்ப்ரதரிஷ்யதி.

(இ-ள்): நான்கு வேதங்களையும் அறிந்த எவ்வந்தணன் புராணங்களை நன்கறிய வில்லையோ அவனைக்கண்டு வேதமானது இவன் அற்பவாராய்ச்சி உள்ளவனாதலால் நம்மை உபத்திரவப் படுத்துவான் என்று நடுங்குகின்றது'' என்று கூறியபடி வேதங்களைப் பொருட்படுத்துவதற்குப் பற்பல விடங்களில் பல ஐயம் நிகழுமாதலால் புராணமுகத்தால் அறிவதேநலம்.

அப்புராணங்களும் ப்ராம்மம், பாத்துமம், வைஷ்ணவம், சைவம், பாகவதம், பவுஷியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கிநேயம், பிரும்மகைவர்த்தம், இலிங்கம், வாராஹம், ஸ்காந்தம், வாமனம், கௌர்மம், மாத்சியம், காருடம், பிரும்மாண்டம் எனப்பதினெட்டு மகா புராணங்களாம்.

இனி இம்மாபுராணங்களுள் ஒன்றான பாத்தும புராணத்தின் கண் சகல வேதங்களின் சாரமாயுள்ளதுவும், ஸ்ரீமகா பாரதத்தின்கண்

விளங்கும் பகவற்கீதைக்கு முதனூலாய் உள்ளதுவுமான **சிவகீதை**யெனும் அரிய பெரிய ஞானநூலின் மஹிமை யாவராலுங் கொண்டாடத் தக்கதொன்றாம். இவ்வரிய கீதையின்கண் பக்தியோகம், விபூதியோகம், தேஹச் சொரூப நிரூபணம், சீவசொரூப நிரூபணம், வைராக்கிய நிரூபணம், உபாசனாயோகம், மோக்ஷயோகம் இவைகளை நன்கு விளக்கியும் இடையிடையே இன்னுமரிய பெரிய தத்துவங்களையும் நன்கு விளக்கியுமுள்ளது. மாயாமயத்தராகிய மாந்தர் பாசநீங்கிச் சுகிக்க வேண்டுமாயின் இந்நூலின் ஆராய்ச்சியின்றி யமையாததேயாம்.

இந்நூல் வடமொழியிலன்றித் தென்மொழியில் வழங்காமையின் இத்தேயத்தினர் பலரும் எடுத்தாளுதற்கு ஏதுவில்லாமற் போய் இதுகாறும் வடமொழியில் வல்லவரே கொண்டாடி வருகின்றனர். தென்மொழியில் வல்லவரும் படித்துச் சந்தோஷிக்கத் தமிழில் மொழிபெயர்க்க முன்வந்தோம். இங்ஙனம் இவ்வரிய கீதை எங்கணும் பரவுதற்குள்ள நன்மையைக் கண்டு சந்தோஷியாது சிலர் பூர்வபட்சம் செய்ய முயலுகின்றார். அவர்களின் பூர்வபட்சத்தில் யாரும் மயங்காதவண்ணம் அவற்றிற்குச் சமாதானங்கூறி உண்மை யினைச் சித்தாந்தஞ் செய்கின்றாம்.

## பூர்வபட்சம்

(1) சிவகீதை பிரமாணமாயின் அதாவது இராமன் சிவபெருமானிடம் தத்துவோபதேசம்பெற்றது உண்மையாயின் ஏன் அதை உலகெங்கும் பிரசித்திபெற்ற வால்மீகிராமாயணத்தில் கூறி இருக்கவில்லை?

(2) பகவத்கீதையாதிகளுக்குச் சங்கரபகவற்பாதராதி பெரியோர்களால் பாஷ்யம் இயற்றப்பட்டிருப்பதுபோல இக் கீதைக்கும் பாஷியம் ஏன் ஏற்படவில்லை?

(3) பகவற்கீதையிலுள்ள ஸ்லோகங்களைப் பன்னூல்களில் மேற்கோளாய்க் காட்டியிருக்கிறதுபோலச் சிவகீதைச் சுலோகங் களை முன்னோர் ஏன் மேற்கோளாய்க் காட்டவில்லை?

(4) சிவகீதையைக் குருமூலமாய் உலகத்தில் கிரகிக்காத காரணமென்ன?

(5) பகவற்கீதையானது எம்மதத்தவராலும் அங்கீகரிக்கப் பட்டு வருவதுபோலச் சிவகீதை அங்கீகரிக்கப்படாது, சைவர் மாத்திரம் அங்கீகரிக்கச் சிவபரத்துவங் கூறுவதென்னை?

## சித்தாந்தம்

(1) உலகத்திற் பிரமாணிய விசாரம் செய்வதாகில் சகலப் பிரமாணங்களுள்ளும் வேதமே முதற் பிரமாணமாம். மற்றைய பிரமாணங்களோவெனின் வேதங்களுடன் முறணாத வழிப் பிரமாணியம் உடையதாகும்.

இனி மற்றைய பிரமாணங்கள் யாதெனின் ஆகமங்கள் ஸ்மிருதிகள் இதிகாசங்கள் புராணங்கள் முதலியனவாம். இச் சிவகீதையெப் பிரமாணத்திற் சேர்ந்ததெனின் பாத்துமமென்ற மஹாபுராணத்தின் சாரமாதலால் புராணப் பிரமாணமேயாம்.

இனி ராமாயணம் எப்பிரமாணமெனின் வேதமுமல்ல, இதிகாசமுமல்ல, புராணமுமல்ல, ஆகமமுமல்ல, ஸ்மிருதியுமல்ல, சூத்திரங்களுமல்ல, கவீசர்களுக்கெல்லாம் ஆதி கவியாயும், பிரம்மதேவனது கருணைக்குப் பாத்திரராயும் தேவருஷிகளுள் சிறந்தவருமான ஸ்ரீமத் நாரத மாமுனிவருக்குச் சீடராயும், முனிவர் சிரோமணியாயும் உள்ள வால்மீகி மாமுனிவரால் இயற்றப்பட்ட மஹா காவியமான ஆதிகாவியமேயாம்.

இனிகாவியம் சிறந்த பிரமாணமா, புராணம் சிறந்த பிரமாணமாவெனின், ஸ்ரீமத் இராமாயணமானது சகல உலகத்தாராலும் கொண்டாடப்படுவதாயினும் புராணத்திற்குப் பிற் பிரமாணமேயாம். புராணத்தைப் பிரமாணமா அப்பிரமணமா வென்று விசாரிக்கவேண்டுமானால் முதற் பிரமாணமான வேதத்தோடு முறணாது இருக்கின்றதா என்று மட்டும் அறிய வேண்டும். பிற் பிரமாணமான காவியத்தோடு கூட முறணாது இருக்கின்றதா வென்று விசாரிப்பாரில்லை. ஆதலால் சிவகீதை ப்ரமாணமல்ல இராமாயணத்தில் இராததால் என்று கூறுவது ஆராய்ச்சியில்லா வசத்தால் நிகழ்ந்ததே யென்க. அன்றியும் காவியத்திற்குச் சரித்திரமே முக்கியமென்பதல்ல. மற்று யாதெனின் சிருங்காரம் முதலிய ரஸங்களேயாம் இதை நன்கறிய வேண்டியதாயின்,

### சாகித்திய கருப்பணம்

**வாக்யம்ரஸாத்மகம்க தஸ்யா பகர்ஷகா.**

**(இ.ள்):** இரஸத்தையே ஜீவனாயுடைய வாக்கியம் காவிய மாகும். தோஷங்கள் அவைகளுக்குக் குறைவை உண்டாக்குவன வாம்; என்பதாதி நூல்களிலுள்ள வாக்கியங்களைக் கண்டு தெளிக.

கவிஞர்கள் இரஸத்திற்கு மாத்திரம் குற்றம் நிகழாது கவனிக்கவேண்டியதே யன்றி முக்கியமாய்ச் சரித்திரங்களையும் கவனிக்கவேண்டும் என்பதில்லை. கவிஞர் காப்பியத்தில் புராணாதி களில் கூறிய சரித்திரங்களைப் பிரமாணமாய் வைத்துக் கொண்டாலும், புராணத்தில் கூறிய சரித்திரங்களில் சிலபாகங்களை விட்டு மற்றவைகளை எடுத்துக் கொள்வதுமுண்டு, அல்லது புதிதாய்ச் சிலகதைகளைக் கற்பனைசெய்து புராணத்திலுள்ள சரித்திரங்களையும் அவைகளுடன் சேர்த்துக் காப்பியமாய் இயற்றுவதுமுண்டு, நடந்த உண்மையையே கூறவேண்டும் என்பது அவசியமில்லை.

இரஸத்தில் தோஷம் நிகழாது மாத்திரம் காவியமியற்ற வேண்டுமென்பதே முன்னோர் கொண்ட துணிபாதலின், வால்மீகி மாமுனிவர் சிவகீதாதி நடந்த சில உண்மைச் சரித்திரங்களை விட்டும், நடக்காத புதிதான சில பாகங்களை வருணிக்க வேண்டிய தின்நிமித்தம் சேர்த்தும் ஆதிகாவியமான இராமாயணத்தை யியற்றினார். இனி ராமாயணம் இரஸத்தையே முக்கியமாய்க் கொண்டது என்பதற்கு யாது பிரமாணம் எனின், இராமாயணாதி கருணரஸப்பிரதானமானது என்றும் கூறிய,

### ஸாஹித்ய தருப்பணம்

**ததாராமாயணாதீநாம் பவிதாது:கஹேதுதா.**

என்பதாதி வாக்கியங்களையும் அறிக. அன்றியும் இராமாயணத்தின் கண் சிற்சில பாகங்களில் படிப்பவர்களையும் கேட்பவர்களையும் மனது களிக்கச் செய்யவேண்டியதின் நிமித்தம் வேறு சில கருத்துகளையும் கொண்டு உண்மையல்லாத சில விஷயங்களையும் கூறியிருக்கின்றது. இங்ஙனம் கூறியதால் இராமாயணம் குற்றமுடையதோவெனின் அல்லவென்பதற்கு ஐயமேயில்லை. காப்பியங்களுக்கு அங்ஙனம் கூறுதல் இயல்பாதலினென்க.

உதாரணமாக, இராமாயணத்தின் சுந்தரகாண்டத்தில் அனுமார் சீதாபிராட்டியாரிடம் சந்தித்த சமயத்தில்,

மத்த: ப்ரத்யவர: கஸ்சிந் நாஸ்திஸுக்ரீவஸந்நிதௌ,
அஹந்தாவதிஹப்ராப்த: கிமபுநஸ்தேமஹாபலா:
நஹிப்ரக்ருஷ்டாம்ப்ரேஷ்யந்தே ப்ரேஷ்யந்தேஹீதரேஜநா:

**(இ.ள்):** சுக்கிரீவனிடம் என்னிலும் பலக்குறைவுடையவர் எவருமில்லை யானோவெனின் இங்கு வந்தவன் அம் மகாபராக்கிரமசாலிகளைப் பற்றிக் கேட்பானேன். பராக்கிரம சாலிகள் தூதுக்கு அனுப்பபட மாட்டார்களன்றோ, பலஹீனர் களன்றோ அனுப்பப்படுகின்றார்கள் என்று கூறியதைச் சற்று ஆராய்வோமாக.

இங்குக் கபிகுலதிலகரானவரும், குழந்தைப் பருவத்திலேயே கனியென்று கருதிச் சூரியமண்டலத்தைப் பிடிக்கச் சென்றவரும், கருங்கடலைக் கால்வாயைப் போலத் தாண்டினவருமான ஒப்பற்ற வலியுடையவரென்று உலகமெல்லாம் அறிந்துள்ள ஆஞ்சநேயர் தன்னிலும் பலக்குறைவுடையவர் சுக்கிரீவன் சந்நிதியிலில்லை யென்று கூறினது உண்மையாமா? உண்மையில் அனுமாரிலும் பலத்தினிற் சிறந்தவர்களா சுக்கீரிவனிடம் உள்ளவர்களெல்லாம்?

இதை யூகித்தால் வேறு காரணம்பற்றி உண்மையல்லாத இவ்விஷயமானது கூறப்பட்டதென்பது அறியப்படுகின்றதல்லவா. இதனால் குற்றமுடையதென்று கூறலாமா, காப்பியங்களில் உண்மையல்லாத சில விஷயங்களையும் கூறுவது குற்றமல்ல என்பது பற்றியன்றோ இங்ஙனம் கூறியது.

இங்ஙனமே கவிகுலதிலகரான காளிதாசகவியும் தாம் இயற்றிய சாகுந்தளம் என்னும் கிரந்தத்தின்கண் மகாபாரதாதிகளில் காணாததும் உண்மையாய் நடக்காததுமான துருவாச மாமுனிவரின் சாபக்கதையும் சேர்த்தமைக்கப்பட்டுள்ளது. அது போல இராமாயணம் ஆதிகாப்பியமே யாதலின் அதில் புராணங்களிற் கூறிய சிலகதாபாகங்களை விட்டும் மற்றும் சிலபாகங்களை இரஸத்தின் நிமித்தம் சேர்த்தும் அமைக்கப்பட்டுள்ளன. அன்றியும் **ஸ்ரீமத் இராமாயணம் தருமங்களை விளக்கவந்த நூலேயன்றி ஞானத்தைப் பற்றி முக்கியமாய் வந்ததல்ல.**

இனி இராமாயணத்தில் எத்தருமத்தை விளக்கியுளது எனின் இங்ஙனம் சுருக்கிக் கூறுவாம். அன்னையின் வசனத்தையும் பிதாவின் வசனத்தையும் மீறக்கூடாது என்ற தருமரகசியத்தைத் தயரதன் கைகேசி முதலியவர்களின் வசனத்துக்குள்ளடங்கிய ஸ்ரீ இராமனது நடத்தையாலும், தம்பிகளிடம் தமையன் வைக்க வேண்டிய பிரியத்தை இலக்குவனிடம் ஸ்ரீஇராமனது நடத்தை யாலும், அங்ஙனமே தமையனிடம் இளையவன் நடக்கவேண்டிய தருமநிலையை இலக்குவன் இராமமூர்த்தியிடம் நடந்த தன்மையாலும், பெண்டிர் கணவனிடம் இருக்கவேண்டிய தருமநிலையை சீதாபிராட்டியாரின் சரித்திரத்தாலும், அரசன் மந்திரி இவர்களுக்குரிய தருமத்தை இராமன் சுக்கிரீவன் இவர்களது நடவடிக்கைகளாலும், தூதர்களின் நிலைமையை அனுமாரது செய்கைகளாலும், சாதுக்களின் தருமத்தை விபீஷணன் செய்கை களாலும் இவை முதலிய அநேக தருமங்களை விளக்கும் நூலாகும்.

அற்றேல் இராமாயணத்தின்கண் ஞானநிலையைக் கூறிவே யிலதோவெனின் அற்றன்று. பெரும்பான்மையாய்க் கருத்தினாலும் தருமங்களையே விளக்குவனவாதலின் அங்ஙனம் கூறியதறிக. இங்ஙனம் விசேஷமாய்க் கருமதருமங்களை விளக்குவதான இராமாயணத்தின்கண் அரியபெரிய தத்துவஞான நூலாகிய சிவகீதையைக் கூறுவது தகுதியல்லவென்று கொண்டே ஸ்ரீவான்மீகிமா முனிவரும் கூறாதொழிந்தார் என்க. இதனால் **சிவகீதை அப்பிரமாணமல்ல. சிறந்த பிரமாணமேயாம்.**

**(2)** சங்கரமுனிவராதி பெரியோர்கள் பாடியம் எழுதாதது பற்றிப் பிரமாணமல்ல என்றது முற்றும் தவறே. அதாவது பகவற்கீதைக்கு, வெளிநோக்காய்ப் பார்க்கும்போது இன்ன கொள்கையைக் கருதியது பொருள் என்று புலப்படாதது பற்றிப் பாடியம் இயற்றப்பட்டது. இச்சிவகீதையோ வெனின் சிவமொன்றைத் தவிர மற்றுயாதையும் கூறாததென்று பெயர் மாத்திரையிலே புலப்படுகின்றது பற்றி அவர்கள் பாடியும் எழுதினார்களில்லை.

பொருள் நன்றாய்ப் புலப்படாத நூற்களுக்கு உரையெழுத வேண்டியது அவசியமன்றிப் பொருள் நன்றாய்ப் புலப்படுவன வான நூற்களுக்குக்கூட உரையெழுத வேண்டியதுண்டா?

உரையாலாயபயன் மூலவசனங்களின் பொருள் புலப்படுமானால் உரைவேண்டியது இல்லையன்றோ.

அன்றியும் வெளிநோக்காய் நோக்குங்கால் பல மதங்களுக்கு இணங்கப் பொருள்படுவதானநூலுக்குப் பலமதச் சார்பாய்ப் பொருள் படுத்தலாகும். ஆனது பற்றியன்றோ பகவற்கீதைக்கு அநேக பாடியங்கள் ஏற்பட்டன. **இச்சிவகீதையோ வெனின் சிவதத்துவமொன்றையே கூறும் நூல்** என்று சுலபமாய் எல்லோர்களாலும் அறியப்படுகின்றமையால் பாடியம் ஏற்பட வில்லை இதனால் அப்பிரமாணமென்று கூறுவதை அறிஞர் ஒவ்வுவாரா? இனிச்சூதசங்கிதையின் கண் விளங்கும் பிரும்ம கீதைக்குச் சங்கரமுனிவராதி பெரியோர்கள் உரையெழுத வில்லையே. ஆதலால் பிரும்மகீதை நவீன மென்றும் அது அப்பிரமாணம் என்றும் கூறுவாருண்டா?

இனி வேத பாடியமியற்றிய மாதவாசாரியர் அல்லது வித்தியாரண்ணிய சுவாமிகள் வேதங்களிலுள்ள சிற்சில வாக்கியங் களைப் பாடியத்தில் காட்டாது இயற்றி யிருக்கின்றாரே. பாடியத்தில் அவர் காட்டாத வேதவாக்கியங்களை (அப்பிரமாணம்) அல்லது பிரமாணமல்லவென்று கூறினால் அதை ஆராய்ச்சியில்லாதவர்கள் ஒப்புவாரேயன்றி மற்றவர்கள் ஒப்புவாரா?

அன்றியும் உபநிடதங்களுள் சிற்சில உபநிடதங்களுக்கே முன்னோரால் பாடியம் இயற்றப்பட்டுளது, பெரும்பான்மையாய் மற்ற வுபநிடதங்களுக்குப் பாடியம் இயற்றப்படவில்லை. அதனால் அவைகளைப் பிரமாணமல்லவென்று கூறலாமா இதுபோலவே சிவகீதை எனும் அரிய தத்துவநூலுக்கும் சங்கரமாமுனிவராதியர் பாடியம் எழுதாதது பற்றிப் பிரமாண மல்லவென்று கூறுதல் ஆராய்ச்சி இராததால் என்க.

(3) முன்னோர்கள் பகவற்கீதையிலுள்ள சுலோகங்களை மேற்கோள்களாய்க் காட்டியதுபோல, சிவகீதைச் சுலோகங்களைக் காட்டாததால் பிரமாணமல்ல வென்றது யுக்தமல்ல. முன்னோர்கள் மேற்கோள்கள் காட்டிய இடங்களில் விசேடமாய் உபநிடத வாக்கியத்தையும் அதற்குப்பின்னர் (இதிஸ்மிருதே:) என்று கீதாவசனத்தையும் காட்டுவது வழக்கம். அங்ஙனம் காட்டப்படும் கீதா வாக்கியமானது உபநிடத வாக்கியங்களுள் விளங்கும்

சொற்களுக்கு அந்நியங்களான சொற்களையே உடையதாயிருக்கும், பொருளால் அந்நியமாகாவிடினும் சொற்களால் பேதமிருப்பது பற்றி உபநிடத வாக்கியங்களுக்குப் பின்னர் கீதாவாக்கியங்களை மேற்கோளாய்க் காட்டப்பட்டுள்ளன. சிவகீதையோவெனின் உபநிடதங்களுள் வாக்கியங்கள் எச்சொற்களால் அமைந்தனவோ அச்சொற்களாலேயே அமைந்துள்ள வாக்கியங்களையுடையது. இனி அங்ஙனம் எவ்வாக்கியமுளது எனின்,

## சிவகீதை 2-வது அத்தியாயம்

**ஸூர்யோஸஸர்வலோகஸ்ய சக்ஷுஷ்டேநவ்யவஸ்தித:**
**ததாபிச்சாக்ஷுஷைர்தோஷைர்நஅதாசித்விலிப்யதே.**

## கடவல்லியோபநிடதம்

**ஸூர்யோயதாஸர்வலோகஸ்ய சக்ஷுர்நலிப்யதேசாக்ஷு.**
**ஷைர் பாஹ்யதோஷை:**

## மேற்படி 2-வது அத்தியாயம்

**மாயாந்துப்ரக்ருதிம்வித்யாந்மாயிநம்துமஹேஸ்வரம்.**

## சுவேதாச்சுவத சோபநிடதம்

**மாயாந்துப்ரக்ருதிம் வித்யாந்மாயினந்துமஹேஸ்வரம்.**

## சிவகீதை

அஹம்மேவபுராதந: ஆஸம்ப்ரதமமேவாஹம்வர் தாமிசஸுரே ப்வரா: - பவிஷ்யாமிசலோகேஸ்மிந் மத்தோநாந்யோஸ்திகஶ் சந - நித்யாநித்யோஹம்மநஸோ பிரும்ஹணாம்பிரும்ஹணஸ்பதி: - தக்ஷிணாம்சோதம்சோஹம் யஞ்சராம்ச: ப்ரத்ஏவச-அதஶ் சோர்த்த வம்சவிதிமேமாதிப ப்சாஹம்ஸுரேஸ்வரா:

## அதர்வசிரோபநிடதம்

அஹமேக: ப்ரதமமாஸம்வர் தா மிபவிஷ்யாமிசநாந்ய: கஶ்சிந்மத்தோவ்யதிரிக்த: - ஸோஹம்நித்யோநித்யோஹம் ப்ரம்ஹாஹம்ப்ரம்ஹாஞ்ச: ப்ரத்யஞ்சோஹம் தக்ஷணாஞ்சோதம் சோஹம் அதஶ்சோர்த்வமச திஶஶ்சவிதிஶஶ்சாஹம்.

## சிவகீதை

*ஏஷஹிதேவ: ப்ரதிபோ துஸர்வா:*
*பூர்வோத்ஹிஜா தோஸ்ம் யஹமேவகர்பே*

## யசுர்வேதோநிடதம்

*ஏஷஹிதேவ: பிரதிஸோநுஸர்வா:*
*பூர்வோஹிஜாதஸ்ஸஉகர் பேஅந்த:*

## சிவகீதை

*விஸ்வதப்பசக்ஷுருதவிப்பவதோமுகோவிப்பவதோஹஸ்தஉத*
*விப்பதஸ்பாத் - ஸம்பாஹுப்யாம்நமதி ஸம்பதத்ரைர்*
*தயாவா ப்ருதிவீஜநயந்தேவஏக:*

## யசுர்வேதம்

*விஸ்வதப்பசக்ஷுருதவிப்வதோமுகோ விப்வதோஹஸ்த*
*உதவிப்வத: ஸ்பாத்-ஸம்பாஹுப்யாம்நமதி*
*ஸம்பதத்ரைர்த் யாவாப்ருதிவீஜநயந்தேவஏக:*

## சிவகீதை

**யதோவாசோநிவர் தந்தே அப்ராப்யமநஸாஸஹ**
**ஆநந்தம்ப்ரம்ஹணோவித்வாந்நபிபேதிகுதச்சந.**

*ஈதே* **தைத்திரீயோநிடதத்திலும் காண்க.**

## சிவகீதை

*மய்யேவஸகலம்ஜா தம்மயிஸர்வம்பிரதிஷ்டிதம*
*மயிஸர்வம்லயம்யாதி தத்ப்ரம்ஹாஸ்ம்யஹமவ்யயம்.*

*அணோரணீயாநஹமேவதத்வன் மஹாநஹமவிஸ்வமஹம் விசுத்க்த:-புராதநோஹம்புருஷோஹமீபோ ஹிரண்மயோ கம்ஸுகரூபமஸ்மி.*

*அபாணிபாதோஹமசிந்தயபஸக்தி: பஸ்யாம்யசக்ஷு ஸ்ஸ்ருணோம்யகர்ண: அஹம்விஜாநாமிவிவிக்தரூப: நசாஸ்திவேத் தாமமசிதஸ்தாஹம்.*

*வேதைநேகைரஹமேவ வேத்யோவேதாந்தக்ருத்வேதவிதே வசாஹம் - நபுண்யபாபேமமநாஸ்திநாபோந ஜந்மதேஹேந் திரியபுத்திரஸ்தி*

நபூமிராபோநசஹ்நிரஸ்தி நசாநிலோமேஸ்திநபோநகச ஏவம்விதித்வா பரமாத்மரூபம் குஹாசயம்நிஷ்களமத்வீதீயம்.

ஸமஸ்தஸாக்ஷிம்ஸதஸத்விஹிநம் ப்ரயாதிஶுத்தம் பரமாத்மரூபம்.

இவ்வாக்கியங்களையே கைவல்லியோபநிடதத்திலுங் காண்க.

ஏஷஹர்வேஷுபூதேஷு கூடோஆத்மாநப்ரகாஶதே
த்ருஶ்யதேத்வக்ரயயா புத்யாஸூக்ஷ்மயாஸூக்ஷ்மதர்ஶிபி:

இச் சிவகீதா வாக்கியம் கடவல்லி உபநிடதத்திலும் அறிக.

இங்ஙனம் உதாரணமாக மாத்திரம் எழுதினோமன்றி முற்றும் எழுதினால் விரிவாகுமென்று விடுகின்றனம்.

இங்ஙனம் சிவகீதையிலுள்ள வாக்கியங்களெல்லாம் விசேடமாக உபநிடத வாக்கியங்களாகவே விளங்குவன பற்றி உபநிடதவாக்கியங்களை மேற்கோள்களாய்க் காட்டுவது முன்னோர்களது வழக்கமாதலின், அங்ஙனம் உபநிடதவாக்கியங்களையும் மேற்கோள்களாய்க் காட்டினால் ஓர் வாக்கியத்தையே இருமுறை காட்டியதுபோல் ஆகுமென்று கருதிமேற்கோளாய்ச் சிவகீதா வாக்கியங்களைக் காட்டாது விடுத்தனம்.

அற்றேல் பகவற்கீதையிலும் உபநிடதங்களுள் விளங்கும் வாக்கியங்களில் எச்சொற்கள் அமைந்துளவோ அச்சொற்களாலேயே அமையப் பெற்றவைகளும் முன் உதகரிக்கப்பட்ட வாக்கியங்கள் போன்றவைகளுமான வாக்கியங்கள் விளங்குகின்றனவே.

அத்தகைய வாக்கியங்களை மேற்கோள்களாய் விளக்கி யிருக்கின்றார்களே, அதுபோலச் சிவகீதையிலுள்ள வாக்கியங் களையும் முன்னோர்கள் ஏன் எடுத்தாளவில்லையெனின் கூறுவாம்.

பகவற்கீதையில் கருமயோகம் பக்தியோகம் இவ் விரண்டையும் பற்றி விசேஷமாய்க் கூறியிருத்தலால் அத்தகைய வாக்கியங்களை மேற்கோள்களாய் முன்னோர்கள் உண்டார்கள். அவ்வாக்கியங்களோ வெனின் உபநிடத வாக்கியங்களுக்கு அந்நிய வாக்கியங்களாதலால் மேற்கோளாய் விளக்கினார்கள். இச் சிவகீதையிலேயோ வெனின் கருமபக்தி யோகங்களை அவ்வாறு விளக்காது ஞானமொன்றையே விசேஷித்து விளக்கவந்த

வாக்கியங்களாதலால் உபநிடதங்களுடன் அவ்வாக்கியங்களையும் மேற்கோளாய்விளக்கினால் இரட்டிப்பாகுமென்று எடுத்தாள வில்லை.

இதுபோலப் பிரும்மகீதையின் கண்ணும் முற்றும் உபநிடதவாக்கியங்கள் விளங்குகின்றன. அது பற்றியே அவ் வசநங்களையும் மேற்கோள்களாய் ஆளவில்லை. ஆயினும் பிரும்மகீதையெப்படிப் பிரமாணமென்றே அறிவாளரால் அறியப்பட்டதோ அப்படியே சிவகீதையும் சிவபெருமானால் உபதேசிக்கப்பட்டது பற்றி மகா மஹிமையுடைத்தாம்.

(4) பகவற்கீதையாதிகளை உபதேசம் பெறுவதுபோல, குருஉபதேசமாய்ச் சிவகீதையைக் கிரகிக்காததால் அப்பிரமாணம் என்றதும் மிக்க ஆபாஸமேயாம். சிவகீதையைக் குருமூலமாய்க் கிரகிக்கக் கூடாதென்று எந்த நூலாவது கூறுகின்றதுண்டா? சிவகீதையின் மஹிமையையறிந்த பெரியோர்களிருக்குமிடம் இஃதும் குருபரம்பரையாகவே உபதேசம் பெறப்படும்நூலேயாம். சிவகீதையின் மஹிமையை அறியாதவர்கள் குருபரம்பரை முறையாகவே கிரஹிக்காதது பற்றி அப்பிரமாணமாமா?

இனிக் குருபரம்பரையாகச் சிவகீதை வழங்கவில்லையென்று கூறியதை இங்கு ஆராய்வாம். கற்றறிந்த பெரியோர்களிடம் சிவகீதை குருபரம்பரையாக வழங்காதது பற்றி அப்பிரமாணமா? அல்லது அறியாத ஏனையோர்களிடம் குருபரம்பரையாய் வழங்காதது பற்றி யப்பிரமாணமா. முதலில் கூறியபடி யெனின் அஃதாராய்ச்சியில் கூற்றாம். சிவகீதையின் மஹிமையறிந்த பெரியோர்கள் குருபரம்பரையாகவே அந்நூலை வழங்கச் செய்கின்றார்களே யன்றி மற்றப்படியல்ல. இரண்டாவது எனின் அஃதும் குற்றமே. அறியாத மாந்தர்களிடம் குருபரம்பரையாக வழங்கவில்லையாதலால் சிவகீதை யப்பிரமாணம் என்று கூறினால் அறிஞர் ஒப்புவரா? அங்ஙனம் வழங்காததற்கு ஆராய்ச்சியில்லாமை காரணமே அன்றி மற்றது காரணமா?

இனி இரத்தினத்தின் குணத்தை அறியாதவனிடம் ஓர் சிறந்த இரத்தினம் கிடைத்தால் அது நல்ல இரத்தினம் என்று தெரிந்து கொள்ளாது ஏதோ தெருவில் கிடக்கும் கல் என்று தெரிந்து கொள்ளாது ஏதோ தெருவில் கிடக்கும் கல் என்று நினைத்து அதை

எறிந்து போவான். அதனால் இரத்தினத் திற்குக் குறை கூறலாமா? அஃதே அறிந்தவனுக்குக் கிடைக்குமானால் அதன் மதிப்புக்குத் தக்கபடி உபயோகப்படுத்துவான். அதுபோலவே கீதா இரத்தின மான சிவகீதையும் பெரியோர்களிடம் பக்தி சிரத்தை குறையாது வழங்கி வருகின்றது. அறியாதவர்களிடம் அலக்ஷியப்படுத்தப் பெறின் அதுபற்றி அந்நூல் குற்றமாகாது.

இனிச் சிவகீதை என்றொரு நூல் இருக்கின்றதாகப் பிரசித்தியிராதது பற்றி அப்பிரமாணம் என்பதும் தகுதியல்ல. இராமாயணம், பாகவதம், பாரதம், ஸ்காந்தம் இந்நான்கு நூற்கள் தவிர மற்ற புராணேதிகாசங்களுக்குப் பிரசித்தையில்லையே அதுபற்றி அம்மற்ற நூல்களை அப்பிரமாணமெனல் குற்றமே யன்றோ? அதுபோலவே சிவகீதை அப்பிரமாணமல்ல வென்க.

இச்சிவகீதை குருபரம்பரையாகவே கிரகிக்கப்படும் நூல் என்பதை இக்கீதைக்கு உரையாசிரியர்களான, நாகோஜி பட்டர், பட்டோஜிதீக்ஷிதர், பண்டித குணநாதர் இவர்கள் எழுதிய உரையில் (என்ற) சுலோகத்தின் பொருள் கூறியுள்ளவிடம் கண்டு தெளிக.

இனிப் பகவற்கீதையைப் படிப்பவர்கள் எல்லோரும் குருபரம்பரையாகவே கிரகித்தவர்களா, இனி ஏதோ சில பெரியோர்களன்றோ குருமூலமாகவே கிரகிக்க வேண்டியது பகவற்கீதையென்று அறிந்து அங்ஙனம் நடத்துகின்றார்கள். அவர்களோ இக்காலத்துப் பிரஸித்தி பெற்றவர்களில்லை. மற்றவர்களுக்கே இக்காலத்தில் பிரஸித்தியாதலால் பிரஸித்தமாய்ப் பகவற்கீதையும் குருபரம்பரையாகவே இக்காலத்தில் வழங்க வில்லை ஆதலால் அதையும் பிரமாணமல்லவென்று கொள்கின்றார் களா சிவகீதை விஷயத்திலும் இங்ஙனமே என்க.

**(5)** இனிப் பகவற்கீதையானது எம்மதத்தவராலும் அங்கீகரிக்கப்பட்டது. அதில் விஷ்ணுவைச் சிறப்பித்துச் சிவனைக் குறைவாயாவது அல்லது சிவனைச் சிறப்பித்து விஷ்ணுவைக் குறைவாயாவது கூறவில்லை. சமமாத்திரமாய் ஞானநிலையைக் கூறுவதே அந்நூலுக்கு இயல்பு. இச்சிவகீதையோ வெனின் அங்ஙனம் கூறாது சிவனையே சிறப்பிக்கும் ஆதலால் இதை அங்கீகரிக்கவில்லை என்பதும், ஆபாஸமே. ஏனெனில் **பகவற்கீதையிலும் சிவபெருமானது திருவருளாலேயே**

மோக்ஷம் கிடைப்பதன்றி மற்றெதனாலும் கூடாது என்றும் அத்தகைய விறைவனே இருதய கமலத்தின்கண் வசிப்போனென்றும் அவனே தன்னாலும் உபாஸிக்கப்படும் பொருளென்றும் நன்குரைத்திருக்கின்றது என்பதை,

## பகவற்கீதை–கிருஷ்ணன் சொல்கிறார்:

ஈஶ்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுநதிஷ்டதி
ப்ராமயந்ஸர்வபூதாநி யந்த்ராரூடாநிமாயயா.

*(இ.ள்.): ஓ அருச்சுனா, மாயையாகிற யந்திரத்திலேறி இருக்கின்ற சகலப் பிராணிகளையும் பிரமிக்கச்செய்து கொண்டு எல்லாப் பிராணிகளின் இருதயத்தில் ஈச்சுரன் இருக்கின்றான்.*

தமேவஶரணங்கச்ச ஸர்வபாவேநபாரத
தத்ப்ரஸாதாத்பராம்ஶாந்திம்ஸ்தாநம்ப்ராப்ஸ்யஸிஶாஶ்வதம்.

*(இ.ள்.): அவனையே சகலமான தன்மையாலும் சரணமடைவாயாக, அவனது அருளால் சிறப்புற்ற சாந்தியையும் சாச்வதமான பதவியையும் பெறுவாய்.*

உத்தம: புருஷஸத்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:
யோலோ கத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யயஈஶ்வர:

*(இ.ள்.): யாதொரு ஈச்சுரன் மூவுலகையும் அடைந்து பரிக்கின்றானோ அவனே பரமான்மாவென்று கூறப்பட்டவன் அவனே (உத்தம புருஷன்) பரமபுருஷன் அவன் அந்நியனே.*

தமேவசாத்யம் புருஷம் ப்ரபத்யே.

*(இ.ள்.): அவ்வாதி புருஷனையே யான்(சரணம்) வணங்கு கின்றேன் என்பதாதி வாக்கியங்களைக் கண்டறிக.*

*இம்மட்டோ இக்கீதையையுடைய ஸ்ரீமகா பாரதத்தின் மற்றும் பருவம்தோறும் விளங்கும் சிவோத்கருஷத்தை,*

## ஆரண்யபருவம்–தீர்த்தயாத்திரைப் பிரகரணம்

ததோகச்சேத்ஸுபர்ணாக்ஷம் திரிஷுலோகேஷுவிஶ்ருதம்
யத்ரவிஷ்ணு: பிரஸாதார்த்தம் ருத்ரமாராதயத்புரா.

*(இ.ள்) பூர்வம் விஷ்ணுவானவர் கருணையின் நிமித்தம் சிவபெருமானை எங்கு பூசித்தாரோ. மூன்றுலகிலும் பிரசித்தமான சுபர்ணாக்ஷம் என்ற அவ்விடத்திற்குப் போகவேண்டும்.*

## துரோணபர்வம்

வாஸுதேவஸ்துதம் திருஷ்ட்வா ஜகாமஶிரஸாக்ஷிதிம்
பார்த்தேநஸஹதர்மாத்மா க்ருஹ்ணந்ப்ரம்ஹஸநாதநம்
லோகாதிம்விஶ்வகர்மாணம் அஜமீஶாநமவ்யயம்.

*(இ.ள்.): தருமான்மாவாகிய வாசுதேவர் உலகத்திற்கு ஆதியும் எல்லாம் உண்டாக்கியவரும் பிறப்பு இறப்பற்றவருமாகிய அப் பரமேச்சுரனைப் பிரும்மமென்றறிந்து அருச்சுனனோடுகூடப் பூமியில் விழுந்து சிரஸால் வணங்கினார்.*

## சாந்திபர்வம்

யம்விஷ்ணுரிந்த்ரோருத்ரஶ்ச ப்ரம்ஹாலோகபிதாமஹ:
ஸ்துவந்திவிவிதைஸ்தோ த்ரைர்தேவதேவம்மஹேஶ்வரம்
தமர் சயந்தியேஶஶ்வத் துர்காண்யதிதரந்திதே.

*(இ.ள்.): தேவ தேவனான எந்த மகேச்சுரனை விஷ்ணு, இந்திரன், பிரமன் இவர்கள் பற்பல துதிகளால் தோத்திரம் செய்கின்றனரோ, அவ்விறைவனை எவர்கள் அடிக்கடி பூசிக்கின்றனர்களோ அவர்களே துக்கங்களைத் தாண்டுகின்றார்கள்.*

## அநுசாஸநிகபர்வம்.

ஸஏஷபகவாநீஶஸ் ஸர்வதத்வாதிரவ்யய:
ஸர்வதத்வவிதாநஜ்ஞ: ப்ரதாநபுருஷேஶ்வர:
ஸோஸ்ரஜத்தக்ஷிணாதங்காத் ப்ரஹ்மாணம்லோகஸம்பவம்
வாமபார்ஶ்வாத்ததாவிஷ்ணும் லோகரக்ஷார்த்தமீஶ்வர:

*(இ.ள்.):* இந்தப் பகவானாகிய ஈசனே எல்லாத் தத்துவங்களுக்கும் ஆதியும் அந்தமற்றவனும், எல்லாத்தத்துவங்களையும் உண்டு பண்ண அறிந்தவனும், பாச பசுக்களுக்கு அதிபனாயும் உள்ளவன். அவனே உலகங்களைப் படைப்போனான பிரும்மதேவனை வலது பக்கத்தினின்றும் உலகங்களுக்குக் காப்போனான விஷ்ணுவை இடது பக்கத்தினின்றும் உண்டாக்கினார்.

## சாந்திபருவம்

விஷ்ணுர் பிரம்ஹாஶஶீஸூர்யஶ் ஶக்ரோதேவாஶ்சஸாநுகா
ஸ்ருஜ்யதேக்ரஸ்யதேசைவ தமோபூதமிதம்யதா
அப்ரஜ்ஞாதம்ஜகத்ஸர்வம் ததாஹ்யேகோமஹேஶ்வர:

*(இ.ள்.): விஷ்ணு, பிரமன், சந்திரன், சூரியன், இந்திரன் மற்ற தேவர்களும் உண்டாக்கப்படுகின்றார்கள். ஈதெல்லாம் எப்பொழுது தமோ மாத்திரமாய் இருக்கின்றனவோ அப்பொழுது அழிக்கப்படுகின்றார்கள். அப்பொழுது உலகெல்லாம் அறியப் படாது அக்காலத்தில் மகேச்சுரன் ஒருவனேயுளன்.*

*என்பதாதி வாக்கியங்களால் பாரதமும் அதனுள்ளிட்ட பகவற்கீதை முழுதும் சிவபெருமானது மஹிமையை விரிக்கும் நூலென்று நன்கு அறியப்படுவதாயிருக்க அப்பாரதத்துள் அடங்கிய நூல் சிவனைச் சிறப்பிக்கவில்லை என்றது முற்றும் குற்றமே என்க.*

*இனிப் பகவான் என்ற சொல் ஸ்ரீ கண்ணபிரானைக் குறிக்குமன்றிச் சிவனைக் குறிக்காது ஆதலின் அக்கீதையில் சிவபரத்துவம் எங்ஙனம் கூறுமெனின்?*

## லிங்கபுராணம்

உத்பத்திம்சவிநாஶம்ச பூதாநாமாகதிம்கதிம்
வேத்திவித்யாமவித்யாம்ச ஸவாச்யோபகவாநிதி.

*என்பதாதி வசனங்களால் அறுவகை ஞானத்தை உடையவன் எவனோ அவனே பகவான் என்றதால் பகவான் என்று வழங்கும் சொல்லுக்குப் பொருளாய் உள்ளவனெவனோ அவன் பரன் என்று விளங்குவதால் அப்பரனும் ஸ்ரீகண்ணபிரானேயன்றி மற்றெவரு மில்லை என்பாரேல், பகவான் என்றசொல் கண்ணபிரானிடமே பிரயோகிக்கப்பட்டதென்பது கூடாது. பகவான் எனும் சொல் சிவபெருமான் விஷ்ணு பிரமன் தேவர் ருஷிகள் முனிவர்கள் இவர்கள் எல்லாரிடமும் பிரயோகிக்கப்பட்டுளது.*

## உருத்திரோபநிடதம்

ஓம் நமோ பகவதேருத்ராய:

## மகாநாராயணோபநிடதம்

ஓம் நமோ பகவதேநாராயணாய:

## சுகரகசியோபநிடதம்

தேவர்ஷயோப்ரம்ஹாணம் ஸம்பூஜ்யப்ரணிபத்யபப்ரச்சுர்
பக வந்நஸ்மாகம் ரஹஸ்யோபநிஷதம்ப்ரூஹீதி.

## ஜாபாலோபநிடதம்

அத ஜநகோஹவைதேஹோயாஜ்வல்கய
முபஸமேத்யோவாசபகவந் ஸந்யாஸமநுப்ரூஹீதி.

## மைத்திராயாணியுபநிடதம்

அத பகவாந்ச்சாங்காயந்யஸ்ஸுப்ரீத:

## மைத்திரேயோபநிடதம்.

அத பகவாந்மைத்ரேய: கைலாஸம்ஜகாம.

## தேஜோபிந்தூபநிடதம்

நிதாகோநாமவைமுநி: பப்ரச்சருபும்பகவந்தம்.

## திரிஶிகிப்பிராம்மணோபநிடதம்

த்ரிஶிகிப்ராம்மண ஆதித்யலோகம் ஜகாமதங்கத்வோவாசபகவந்.

*என்பதாதி புராணாதி நூல்களில் கூறியபடி பகவான் என்றசொல் மும்மூர்த்திகளிடமும் தேவர் முனிவர் இருடிகள் இவர்களிடமும் வழங்கும் சொல்லாயிற்று.*

*பகவான் என்பது சொன்மாத்திரத்தில் பரத்துவத்தை சித்தாந்தப்படுத்திக் கொண்டால் என்று நிகண்டில் கூறியபடி புத்தனுக்கும் பரத்துவம் ஒவ்வும் படியாகும். அதை வைதிகர்கள் ஒவ்வார்கள். ஆகலால் பகவானென்னுஞ்சொல்லுக்கு இடத்திற்குத் தக்கபொருள் படுத்துவதே உசிதமாதலால் கண்ணனிடமே பொருள் என்பது குற்றமேயென்க.*

*இன்னும் வைநாசகாத தீட்சைவாயிலாக வாய்ந்த சிவஞானாக்னியினாலே ஆன்மாவைப்பற்றிய பாசத்தைப் போக்கிச் சிவத்துவம் விளக்கப்பெற்ற மெய்யுணர்வோர்க்கும் பகவான் என்னும் பெயர் பொருந்தும். ஆகலின் பகவத் சப்தம் ஈசுவரனுக்கு வாஸ்தவமும், மற்றைத் தேவருக்கு உபசாரமுமாம். சிவசத்திக்குப் பகவதிப்பெயர் வழங்கிவருமாறுங் காணலாம். இதனால் கிருஷ்ணபகவான் என்பது பிரகஸ்பதிபகவான், வியாழபகவான், சனிபகவான் முதலியவற்றோடு இனமாம்.*

*ஆயின், கண்ணன் உலகெலாம் ஆயினேனென்றதூஉம், விசுவரூபத்தைக் காட்டியதூஉம்; தான் பதியென்றுணர்த்தியதன்றோவெனின் கண்ணனைப்போலவே வாமதேவரிஷியும்*

''யானேயெல்லாமாயினேன்'' என்று கூறினமையாலும், இந்திரனானவன் ''நான் பிராணனாயிருக்கிறேன்'' ''நான் அறிவுமயமான ஆத்மாவாயிருக்கிறேன்'' என்று கூறியவுண்மை எஜூர்வேதம் சித்வல்லியிற் கேட்கப்படுகையாலும், ஏனைக் கீதாசாரியர்களும் இப்படியே கூறுகின்றமையாலும் கண்ணனிடத்து மாத்திரமே அது சிறக்குமெனல் கூடாது.

இனிக் கண்ணனுடைய விசுவரூபமோவெனின், அனுமான் விசுவரூபங்காட்டினன். வீரபாகுதேவர் விசுவரூபங்காட்டினர் ஆனதால் கண்ணன் விசுவரூபத்திற்கு என்ன சிறப்பு?

அன்றியும், கண்ணன் இராமாவதாரத்தில் சிவபெருமானிடத்துக் கேட்ட கீதையின் கருத்தினையே கிருஷ்ணாவதாரத்தில் சிவோகம்பாவனையிலிருந்து அருச்சுனனுக்குப் போதித்தாரென்பது உண்மை என்னை? கிருஷ்ணமூர்த்திக்கு அந்தரியாமியாய் இருப்பவன் சிவபெருமானேயாகலின், எங்ஙனமெனின் விளக்குவாம்.

பாசுபத அஸ்திரம் வேண்டிக் கிருஷ்ணனும், அர்ச்சுனனும் ஸ்ரீகைலாசத்திற்குப் போகையில் மார்க்கத்தில் கிருஷ்ணனை அருச்சுனன் பூசித்தான். அவ்வாறு பூசித்தது கிருஷ்ணனையா? கிருஷ்ணனது அந்தரியாமியாகிய சிவனையா? என்று யோசிக்கின், கிருஷ்ணனிடஞ் செய்த பூசையைச் சிவபெருமானேற்றுப் பலப்பிரதாதாவாய் அனுக்ரகஞ் செய்த வைபவம் பாரதத்திற் படிக்கப்பட்டமையால், கிருஷ்ணனது அந்தரியாமியையே அர்ச்சுனன் பூசித்தான் என்பது சித்தித்தது.

கிருஷ்ணன் சர்வாந்தரியாமியாய் இருந்தால் அந்தக் கிருஷ்ணனையே பூசிக்காமல் அவனிடத்தில் சிவனைப் பூசிக்கவேண்டிய ஆவசியகமில்லை. அருச்சுனனுக்குக் கிருஷ்ணனே ஈசுவரனென்கிற ஞானமுண்டாயிருக்கும் பட்சத்தில் அந்தக் கிருஷ்ணனையே நாளும் பூசியாமல் அவன் சாங்காறும் சிவபூசை செய்யவேண்டிய நிமித்தமில்லை.

கிருஷ்ணன் நேரிலிருந்தும் அவனை அபூஜ்யனாகத் தள்ளி அவனிடத்தில் சிவனைப் பூசித்தமையால், அருச்சுனன் தான் பூஜ்யனாகத் துணிந்த சிவனையே அந்தரியாமி என்று கொண்டான் என்பது வியக்தமாகியது. அவன் கொண்டவாறு அப்போது அங்குக்

கண்ணனிடம் பூசித்தபோதுகளை அக்கண்ணனோடு கையிலையில் சென்று சிவனிடங்கண்டு தெளிந்தமையால் ஈசுவரன் தனக்கு அன்னியமானவன் என்று கண்ணன் உபதேசித்த சத்தியத்தை அருச்சுனன் அநுபவத்தாற் கண்டானென்பது சித்தித்தது. இதனால் பகவற்கீதையும் சிவபரத்துவம் விளக்கும் நூலே, கிருஷ்ண மூர்த்தியும் சிவனடியாரேயாம்.

இதுகாறும் எடுத்துக் காட்டிய வசனங்களால் சிவபெருமானே வேதாதிகளால் பிரதிபாதிக்கப்படும் உண்மைத் தெய்வமெனவும், சிவகீதை வேதத்துடன் மாறுபடாது சிவோத்கர்ஷம் தாபிக்க எழுந்த வொரு சத்கிரந்தம் எனவும், இக் கிரந்தவழி நடப்போர்க்குச் சிவஞானம் சித்திக்குமெனவும், இஞ் ஞானத்தால் சிவசாயுச்சிய முத்தியுண்டாம் என்பதும் சத்தியமென வச்சிரலேபமாகத் தாபிக்கப்பட்டது. சுபம்! சுபம்! உபோற்காதம் ஸம்பூர்ணம்.



ஏகபாதத்ரி மூர்த்தி

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# ஸ்ரீ சிவகீதை - மூலமும் உரையும்

திருச்சிற்றம்பலம்

## முதலாவது அத்தியாயம்

*முதல் அத்யாயமாய் சிவபக்தியோக மகிமையில் சிவபக்தியின் மகிமையும், சிவனின் பெருமையும், சிவார்ப்பணத்தின் சிறப்பையும் விளக்குகின்றது. வேதவியாஸர் சூதமுனிவர் அகத்தியர் போன்ற ரிஷிகளைப் பற்றிய குறிப்புகளையும் காண முடிகின்றது.*

**ஸூதர் கூறுகிறார்:**

**அதாதஸ்ஸம்ப்ரவக்ஷ்யாமி சுத்தகைவல்யமுக்திதம்**
**அநுக்ரஹாந்மஹேசஸ்ய பவதுக்கஸ்யபேஷஜம் 01**

*பொழிப்புரை :* சுத்தகைவல்லிய முக்தியை அளிப்பதும், சம்சார துக்கத்திற்கு மருந்தானதுமான, சிவகீதையெனும் இரத்தினத்தைச் சிவபெருமானது அநுக்கிரகத்தினால் நன்கு உரைக்கின்றேன்.

*நுட்பம்:* சூதவிருஷி சம்வாத உருவமாகவே வியாஸ மாமுனிவர் புராணங்களை இயற்றியுள்ளார் ஆதலின், பாத்ம புராணத்துள் விளங்கும் சிவகீதையெனும் இந்நூலை இயற்றுவதிலும் சூதவிருஷி சம்வாத உருவமாகவே துவங்கிக் கொண்டனர். சுலோகத்தில் "அத" என்று ஆரம்பித்திருக்கும் சொல்லானது, சொன் மாத்திரையால சிவகீதையெனும் இவ்வரிய பெரிய நூலை ஆரம்பித்தற்குரிய மங்களத்தைக் கூறுவதாகும். இங்கு "அத" சப்தத்திற்கு மங்களப்பொருட்படுந் தன்மையை,

**பிரமாணம்**

ஓங்காரஶ்சாதஶப்தஶ்சத்வாவேதௌபிரம்ஹணஃபுரா
கண்டம்பித்வாவிநிர்யாதௌ தஸ்மாந்மாங்களிகாவுபௌ.

ஓம் அத - என்ற இவ்விரு சொற்களும் முன்பிரம்மனது கண்டத்தைப்பேதித்து வெளிவந்தனவாதலின், இவ்விரண்டும்

மங்கள அர்த்தத்தை புனை யனைகளாம் என்னும் வியாசபகவான் வசனத்தாற் காண்க.

சுத்தகைவல்யம் ஐந்தாவது முத்தியாகும். இப் பரமுத்தியானது சிவபெருமானால் பேரருளுடன் கூறப்பட்ட சிவகீதையெனும் இவ் வரிய நூலாலேயே பெறப்படுவதாம். இங்கு ஐவகை முத்தியென்றது மற்ற எம்மதத்திலும் கூறப்படவில்லை. இம் முத்தியைச் சொரூபமுத்தியெனவும் கூறுவதுண்டு.

முத்தியினில் ஐந்து வகையும் இந்நூலிலேயே பதின் மூன்றாவது அத்தியாயத்தில் விரிவாக உரைக்கப்படும். இச் சிவகீதையெனும் இரத்தினத்தைப் பிறப்பெனும் பிணிக்கு மருந்தென்றும் கூறினார். பிணி நீங்கிச் சுகிக்க மருந்துட்கொள்ள வேண்டியது அவசியம் போலச் சம்ஸார நீங்கிச் சுகிக்க இந்நூல் உபதேசம் அவசியமாம்.

இங்கு மூலத்தில் சிவகீதாரத்தினமென்று கூறாவிடினும், வடமொழியில் ஒன்றன்பாலாயுள்ள பெயருரிச்சொற்களால், இப்பெயர்ச்சொல்லை வருவித்துக் கொள்வதற்குரிய குறியிருத்த லால், இந்நூலுக்கு உரை இயற்றிய வடமொழியாசிரியர்களின் கூற்றிற்கிணங்க இச் சொல்லை வருவித்துப் பொருள் கூறப்பட்டது. அற்றேல் பிறப்பெனும் பிணிக்கு மருந்தென்று கூறியபடியால், மருந்துட் கொள்ளும் முறை வைத்தியருக்கே தெரியுமல்லாது மற்றையர் கூறுவது எவ்விதம் ஒவ்வுமெனின், இவ்வாசங்கை நீங்கவே, சிவபெருமானது அருளால் கூறுகின்றேனென்று கூறலாயிற்று. இனிச்சிவனே சம்சார வைத்தியனென்பதை,

**யசுர்வேத சதருத்திரியம்**

''அத்யவோசததிவக்த்தா பிரதமோதைவ்யோபிஷக்.''

''மாறா மொழியோனும் முதற்றேவனுமான வைத்தியனே கூறினான்'' என்பதினாலறிக.

**நகர்மணாமநுஷ்டாநைர்ந தாநைஸ்தபஸாபிவா**
**கைவல்யம்லபதேமர்த்ய: கிம்துஞ்ஞாநேநகேவலம்** 02

(பொ-ரை): மனிதன் கருமங்களின் அனுஷ்டானங்களாலும் ஈதல்களாலும் தவத்தினாலும் கைவல்யமென்னும் முத்தியை அடைகின்றானல்ல, பின் எதனாலெனின் ஞானத்தினாலேயாம்.

(கருமங்களின் அநுஷ்டானங்களால் என்றதனால், சோதிஷ்டோமாதி வேள்விகளைச் செய்தலால் என்பது பெறப்பட்டது).

இக் கருமங்களின் அநுஷ்டானங்களால் முக்தி கைகூடாதென்பதை,

**பிரமாணம் : நாராயணீயா யாஜ்ஞிக் யுபநிடதம்**

"நகர்மமாநப்ரஜயா தநேந".

**(இ.ள்.)** "கருமங்களாலும் சந்தானங்களாலும் பொருளாலும் அல்ல" - என்பதினால் அறிக.

அற்றேல் கருமங்களைப்புரிதல் வேண்டுமென்று கூறும் மறைமொழிகள் அவலமோவெனின், அற்றன்று. எல்லாக் கருமங்களையும் சிவபெருமான் பொருட்டென்றே பயனை விரும்பாது புரிந்தால் அவ் விறைவனது பிரஸாதம் சித்திக்கும். அவ்வருளால் சித்தமலந் துலையப் பின்னர் ஞானம்சித்திக்கும். ஆதலின் கருமங்களை நசுவரங்களான அவைகளின் பயன்களை விரும்பிப் புரிந்தால் ஞானஹேதுவாகாது என்றேயறிக. ஈதல் களாலும் அவ்விதமே என்க. இலௌகீகப் பயன்களை விரும்பிச் செய்யும் தவத்தாலும் அங்ஙனமேயாம். ஞானத்தாலேயே கைவல்யமெனும் முக்திகூடும். இத்தகைய ஞானம் சிவஞானமே யாம்.

**சுவேதாச்சுவதரோபநிடதம்**

"விஸ்வஸ்யைகம்பரிவேஷ்டிதாரம்

ஈஶந்தம்ஞாத்வா அம்ருதாபவந்தி"

**(இ.ள்.)** "விசுவத்தை வியாபித்தவனும் ஏகனுமான அவ்வீசனை அறிந்து அமிருதர் ஆகின்றனர்" என்பதனாலும்,

**அதர்வசிகோபநிடதம்**

ஶிவஏகோத்யேய: ஶிவம்கரஸ்ஸர்வமந்யத்பரித்யஜ்ய.

**(இ.ள்.)** சுபத்தை அளிப்பவன் சிவனொருவனே. மற்றெல்லாவற்றையும் நீக்கி விடுத்துத் தியானிக்கத் தகுந்தவன்" என்பதனாலும்,

**திருமந்திரத் திருமுறை**

சிவமான ஞானந் தெளியவொண் சித்தி
சிவமான ஞானந் தெளியவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத்தே யேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே. - *என்பதனாலும்,*

***சிவஞானசித்தியார் சுபக்ஷம்***

ஞானத்தால் வீடென்றே நான்மறைகள் புராண
நல்லவாக மஞ்சொல்ல வல்லவா மென்னும்
ஊனத்தா ரென்கடவர் அஞ்ஞா னத்தால்
உறுவதுதான் பந்தமுயர் மெய்ஞ்ஞா னந்தா
னானத்தா லதுபோவ தலர்கதிர்முன் னிருள்போல்
அஞ்ஞானம் விடப்பந்த மறுமுத்தி யாகும்
ஈனத்தார் ஞானங்க ளல்லா ஞானம்
இறைவனடி ஞானமே ஞானமென்பார். *-என்பதனாலுமறிக.*

**ராமாயதண்டகாரண்யே பார்வதீபதிநாபுரா**
**யாப்ரோக்தாஶிவகீதாக்யா குஹ்யாத்குஹ்யதமாஹிஸா 03**

*(பொ-ரை): முன்னம் தண்டகாரணியமென்னும் வனத்தின் கண் சிவபெருமானால் இராமன் பொருட்டுச் சிவகீதை யென்று பெயர் பெற்ற அந்தப் பிரும்மவித்தையானது கூறப்பட்டதோ அஃது இரகசியத்திலும் இரகசியமன்றோ.*

**நுட்பம்** :- *முன் சிவஞானத்தாலேயே முக்தி கூடுமென்று கூறியபடி அச்சிவஞானம் சிவகீதையெனும் இவ்வரிய பெரிய நூலாலேயே நன்கு பெறக்கூடியது. ஆதலால் இவ்வரிய நூலின் மகிமையை நன்கறிவதற்கென இதன் தோற்றத்தின் தேச காலங்களைக் குறிக்கின்றார்.*

*தண்டகாரணியம் என்றதினாலே மிக்கப் பரிசுத்தமான விடத்திலேயே இக்கீதை உபதேசிக்கத் தக்கதெனக் குறிக்கப்பட்டது. இராமனின்பொருட்டு என்றதனால் இராமன் சிவபக்தியில் சிறந்தவராதலால் சிவபக்தியுடையவருக்கே இதை உபதேசிக்க வேண்டும் என்பதும் பெறப்பட்டது.*

*வால்மீகி ராமாயணத்தில்* அத்ரபூர்வம் *என்னும் வாக்கியம் இராமன் சிவப்பிரஸாதம் பெற்றிய நலமும்,* நைவபச்யாமி *என்னும்*

வாக்கியம் இராமன் அசுவமேதத்தால் சிவாராதனம் புரிந்தமையையும், ஸ்ரீமதோ நீலகண்டஸ்ய என்னும் வாக்கியம் இராமன் சிவனாரது திருவாணையைக் கடவாத தன்மையும், க்ருதாபிஷேக: என்னும் வாக்கியம் இராமன் சிவனாரது அனுக்ரகத்தையும் சீதை பார்வதியாரது அனுக்கிரகத்தையும், லட்சுமணன் நந்தியம்பெருமானது அனுக்ரகத்தையும் அடைந்தார்கள் என்பதையும், மஹாதேவப்ரஸாதாச்ச என்னும் வாக்கியம் தசரதனும் தாசரதியும் சிவானுக்கிரகம் எய்தினார் என்பதையும் தெரிவித்தலினால் இராமன் சிறந்த சிவபக்த சிரோமணி என்பதிற்தட்டில்லை. இவ்விராமனின் மூலமூர்த்தி யாகிய விண்டுவும் சிவபத்தியுடையவரே.

**பிரமாணம் : கூர்ம புராணம்**

> ஈஶாநஸ்ஸர்வவித்யாநாம் ஸஏவாதிகுருர்புதா:
> தஸ்யஶிஷ்யோமகாவிஷ்ணு: ஸர்வஞ்ஞாநமஹோததி:

*(இ.ள்.)* "எல்லா வித்தைகளுக்கும் அதிபனான அவனே ஆதிகுரு ஓ தேவர்களே! எல்லா வித்தைகளுக்கும் நிதியான மஹாவிஷ்ணு அவருக்குச் சிஷ்யர்" என்பதனானும்,

**சிவபுராணம்**

க்ருஷ்ணத்வைபாயநஸ் ஸாக்ஷாத்விஷ்ணுரேவஸநாதந:
கோஹ்யந்யஸ்தத்வதோருத்ரம் வேத்திதம்பரமேஶ்வரம்.

*(இ.ள்.)* "வியாஸபகவான் முன்னவராகிய விஷ்ணுவே. மற்ற எவன் எல்லாம் வல்லவனான உருத்திரரை யுள்ளபடியறிவான்" என்பதனானும்,

**யசுர் வேதம்**

விஷ்ணுரித்தாபரமஸ்யவித்வாந்.

*(இ.ள்.)* "இவனது தத்துவத்தை விஷ்ணுவே யறிவார்" எனும் வசனத்தாலும் காண்க.

முன்னம் என்றதனால் இராமாவதார காலத்தில் என்றும், அதனால் கிருஷ்ணாவதார காலத்தில் அருச்சுனனுக்கு உபதேசித்த கீதைக்கு முதனூல் சிவகீதை என்பது விசதமாகின்றது. சிவகீதை எனும் பிரும்மவித்தை என்பது, யாது காரணம் பற்றிக் கூறப்பட்டது

எனின் சிவப்பிரமச் சொற்கள் ஒரு பொருளுணர் பசொற்களாதலால் என்க.

**சுவேதாச்சுவதரோபநிடதம்**

த்வேஅக்ஷரேப்ரம்பரேத்வநந் தேவித்யாவித்யேநிஹிதே
யத்ரகூடே, க்ஷரம்த்வவித்யாஹ்யம்ருதந்து வித்யாவித்யாவித்யே
ஈஶதேயஸ்துஸோந்ய:

(இ.ள்.) பிரும்மமாயும் பரமமாயும் அனந்தமாயும் உள்ள அக்ஷரனிடத்தில் வித்தையும் அவித்தையுமாகிய இரண்டும் இரகசியமாய் வைக்கப்பட்டன. அவித்தை க்ஷரம் வித்தையோ வெனின் அக்ஷர மல்லது அமிருதம். இவ்வித்தியா வித்தைகளை யெவன் ஆள்வோனோ அவன் அந்நியனாம்.

**சுவேதாச்சுவதரோபநிடதம்**

தத: பரம்ப்ரஹம்மபரம்ப்ரஹந்தம்-
ஈஶந்தம்ஞாத்வா அம்ருதாபவதி.

(இ.ள்.) பின்னர் பிரும்மமாயும் பரமமாயும் யாண்டும் பரந்தவனுமாகிய அவ்வீசனை அறிந்து முக்தர் ஆகின்றார்கள் என்பதனாலும்,

**யசுர் நாராயணீயயாஜ்ஞிக் யுபநிடதம்**

ருதம்ஸத்யம்பரம்ப்ரம்ஹ புருஷம்க்ருஷ்ணபிங்களம்
ஊர்த்வரேதம்விரூபாக்ஷம் விஶ்வரூபாயவைநம:

(இ.ள்.) ருதனாயும், சத்தியனாயும், பரம் பிரும்மமாயும், புருஷனாயும், கருநிறமும் பொன்னிறமும் பெற்றவனாயும், மேனோக்கிய ரேதனாயும், விரூபாக்ஷனாயும் உள்ள விசுவ ரூபனுக்கு நமஸ்காரம் - என்பதனாலும்,

**அதர்வசிரோபநிடதம்**

அத கஸ்மாதுச்யதேபரம்ப்ரம்ஹ யஸ்மாதுச்சார்யமாண
ஏவப்ரஹதிப்ரம்ஹயதிதஸ்மா துச்யதேபரம்ப்ரம்ஹ.

(இ.ள்.) எதனால் பரப்பிரம்மமென்று கூறப்படுகின்றது. உச்சாரண மாத்திரத்தில் எங்கும் பரந்த பிரும்மத்தினிடம் அடையச் செய்கின்ற படியால், பரம்பிரும்மமென்று கூறப்பட்டது. என்பதனாலும்,

**அதர்வசிகோபநிடதம்**

**ருத்ரஸ்ஸபகவாந்யஶ்சப்ரம்ஹ.**

*(இ.ள்.) எவன் பிரும்மமோ அப்பகவன் உருத்திரனே.*

**ஸர்வாணிப்ரம்ஹயதீதிப்ரம்ஹ.**

*எல்லாவற்றையும் படைச்செய்தலுடன் கூடியவனாதலின் பிரும்மம் என்பதனாலும்,*

**ஸ்ரீகண்ட பாஷியம்**

*ஸகலநிகமஸாரஹைமஸ்யநிதாநஸ்ய, பவபிவபர்வ பஶுபதி பரமேஶ்வர மஹாதேவருத்ர பபம்பிரிமிருதி பர்யாயவாசக பபத ஸாரபிரகாபபிதா ஶமஹிமவிலாஸஸ்ய, ஸ்வேபேபஷூத நிகிலசேதந ஸமுபாஸநாது குணஸமுதித நிஜபிரஸாதஸமர்பித புருஷார்த்த ஸார்த்தஸ்ய, பரப்ரம்ஹண:*

*(இ.ள்.): சகலவேத சாரசமரசத் தன்மையிருப்பிடமாக இருப்பவனும், பவ சிவ சர்வ பசுபதி பரமேச்சுர மகாதேவ ருத்திர சம்பு என்பதாதி பர்யாயச் சொற்சாரத்தால் விளங்கிய அரியமகிமை விளக்கத்தையுடையோனும், தனக்குள்ளடங்கிய சகல சேதனர்களது உபாசனைக்கு இணங்கத் தோன்றிய தனது திருவருளால் கொடுக்கப்பட்ட புருஷார்த்தத்தை உடையோனுமாகிய பரப் பிரும்மத்தினது - என்பதனாலும் காண்க.*

*இரகஸ்யத்திலும் ரகசியமென்றது.*

**பகவத்கீதை**

**ஈஶ்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேர்ஜுநதிஷ்டதி**
**ப்ராமயந்ஸர்வபூதாநி யந்த்ராருடாநிமாயயா.**

**தமேவஶ ரணங்கச்ச ஸர்வபாவேநபாரத**
**தத்ப்ரஸாதாத்பராம்ஶாந்திம்ஸ்தாநம்ப்ராப்ஸ்யஸிஶாஶ்வதம்.**

*(இ.ள்.): ஓ அருச்சுனா, மாயையாகிய யந்திரத்தையடைந்த எல்லாப் பிராணிகளையும் பிரமிக்கச் செய்துகொண்டு எல்லாப் பிராணிகளின் இருதயத்தில் எந்த ஈச்சுரன் இருக்கின்றானோ அவனையே எல்லாத் தன்மையாலும் சரணமடைவாயாக. ஓ பாரத, அவனருளாலேயே மேலாகிய சாந்தியையும் அழிவற்ற பதத்தையும் அடைவாய்.*

என்பதாதி அரிய சிவபெருமைகளைக் கூறும் வாக்யங்களடங்கிய பாகமாகிய இக்கீதையே இரகசியமெனப்படும். இதனினும் இரகசியமாயுள்ளது பக்தியோகம், விரஜாதீக்ஷை, சிவப்பிராதுர்ப்பாவம், விபூதி விஸ்தாரயோகம், விசுவரூபதர்சனயோகம், உபாஸனைவிதி, பிரஸாதம் அல்லது திருவருட் சிறப்பு, மோக்ஷயோகம், பஞ்சகோச உபாசனை முக்தியோகம் என்ற அரிய தத்துவரகசியங்கள் சிவகீதையெனும் இவ்வரிய நூலிலேயே கூறப்படுகின்றனவாதலின் இது இரகசியத்திலும் இரகசியமென்பது நன்கொள்ளும் என்க. இவ்வரிய நூலைத் தக்கபரிபாகிகளுக்கே உபதேசிக்க வேண்டுமென்றும் அறிக.

**யஸ்யாஸ்ஸமரணமாத்ரேண ந்ருணாம்முக் த்ருதுவாஹிஸா**
**புரரஸநத்குமாராய ஸ்கந்தேநாபிஹிதாஹிஸா 04**

**வியாக்யானம் - யஸ்யா:-** எந்தக் கீதையினது, ஸ்மரணமாத்ரேண்-நினைத்த மாத்திரத்தில், ந்ருணாம்-மனிதருக்கு, த்ருவா-நித்தியமான, ஸா-முற்கூறிய கைவல்யமென்ற, முக்தி: ஹி-முக்தி ஸித்திக்கின்றதன்றோ, ஸா-அந்தக் கீதையானது (சிவகீதையானது), ஸ்கந்தேன-கந்தபகவானால், புரா-முன்னம், ஸநத்குமாராய-சநத்குமாரரின் பொருட்டு, அபிஹிதா-கூறப்பட்டது.

*(பொ.ரை.):* எந்தக் கீதையை நினைத்தமாத்திரத்தில் மனிதருக்கு சத்யமான முற்கூறிய கைவல்யமெனும் முக்தி சித்திக்கின்றதோ, அச்சிவகீதையே கந்தபகவானால் முன்னம் சநத்குமாரருக்கு உபதேசிக்கப்பட்டது.

**நுட்பம் :** இங்கு நினைத்த மாத்திரத்தில் என்றதனால் இக்கீதையின் மகிமை விளக்கப்பட்டது. இக்கீதையிற் சிவபெருமானது அருள்பிக்கப் பாலிக்கப் பெற்றிருக்கின்றமையின் இது ஞானத்தையளித்துக் கைவல்யமெனும் முக்திக்கு ஆளாக்குகின்றது என்பதையறிக. சிவபெருமானது திருவருளாலேயே முக்திபேதுவான ஞானம் நிகழும்.

**பிரமாணம் : சுவேதாச்சுவதரோபநிடதம்**

யோதேவாநாம்பிரதமம்புரஸ்தாத்விஸ்வா திகோரத்ரோமஹர் ரிஷி: ஹிரண்யகர்பம்பஶ்யதஜாயமாநம் ஸநோபுத்யாசுபயா ஸம்யுநக்து.

*(இ.ள்.) எல்லாவற்றிற்கும் மேலோனும், மகருஷியாயுமுள்ள எந்த உருத்திரன் தேவருள் முதலோனும், எதிரில் தோன்றுகின்ற வனுமான இரண்யகர்ப்பனைப் பார்த்தானோ, அத்தேவன் நமக்குச் சுபமான ஞானத்தை யளிக்கட்டும்.*

**மாண்டூக்கியோபநிடதகாரிகை**

நிவ்ர்தேஸ்ஸர்வது:காநா மீஸாந: பிரபுரவ்யய:

*(இ.ள்.) எல்லாத் துக்கங்களையும் துலைக்க அவ்வியயமான ஈசானனே சக்தியுடையவன்.*

**சிகரிணீமாலை**

ஸுகம்தத்பூமாக்யம்நிரதிஸயமப்ராக்ருதமபிபிரஸா தாயத்தம்
தேகலூபவமஹாரோபிஷஜ: - உபாயோத்ரஜ்ஞாநம்கலு
ஸிவவிஸுத்தா த்மவிஷயம்பிரஸாதே
ஸத்யேவதிரிபுரஹரதே தச்சபவதி.

*(இ.ள்.) அலௌகிகமும் அழிவற்றதும் அகண்டமுமான அச் சுகமானது பிறப்பெனும் பெரும்பிணியைத் தீர்க்கும் வைத்தியரான தங்களது அருளுக்கு வசமன்றோ. இதற்கு உபாயம் சுத்தான்மஞான மன்றோ. ஓ திரிபுரஹரனான சிவனே, அத்தகைய ஞானமும் தங்களது திருவருள் தோன்றியகாலத்தே சித்திப்பதாம்.*

*கந்தபகவானால் சனற்குமாரருக்கு என்றதனால், குருசிஷ்ய பரம்பரையாகவே இந்நூல் வெளிவர வேண்டும் என்பதாயிற்று.*

**திருமந்திரத் திருமுறை**

வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழிக் கண்டவர் காணா வழியைப்
பெரும்வழி யாநந்திப் பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே. *- என்பதனாலுமறிக.*

**ஸநத்குமார: ப்ரோவாச் வ்யாஸாயமுநிஸத்தமா:**
**மஹ்யமக்ருபா திரேகேண ப்ரததௌபாதராயண: 05**

*(பொ-ரை): ஓ முனிவர்களே, சனத்குமாரர் வியாஸருக்கு உபதேசித்தனர். வியாஸர் கருணையின்மிகுதியினால் என் பொருட்டு அளித்தனர். (இதனால் எவற்றையும் குருவழியே அறிய வேண்டுமென்று கூறியதாயிற்று.)*

**திருமந்திரம்**

குருவென் பவனே வேதாகமங் கூறும்
பரவின்ப னாகிச் சிவயோகம் பாவித்து
ஒருசிந்தை யின்றி யுயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே.

**பிரமாணம் : கடவல்லியோபநிடதம்**

"ப்ராப்யவராந்நிபோ தத:"

*(இ-ள்.): பெரியோர்களை அடைந்து அறியுங்கள்.*

"அநந்யப்ரோக்தேகதி ரத்ரநரஸ்தி"

*(இ-ள்.): "மற்றவர் உபதேசிக்காவிடில் கதி இங்கில்லை" - என்பதாதி வாக்கியங்களாற் காண்க.*

**உக்தம்சதேநகஸ்மை சிந்நதாதவ்யமிதந்த்வயா**
**ஸூதபுத்ராந்யதாதேவா: க்ஷுப்யம்திசஶபந்திச 06**

*(பொ-ரை): அவ் வியாஸபகவானால் கூறப்பட்டதாவது, ஓ சூதபுத்திரனே, உன்னால் இக்கீதையானது பரிபாகமற்ற எவனுக்காவது உபதேசிக்கக்கூடியதல்ல. அங்ஙனமல்லாது உபதேசித்தால் தேவர்கள் கலக்கமுறுவார்கள் அன்றியும் சபிப்பார்கள். (இக்கீதையானது அபக்குவர்க்கு உபதேசிக்கப் படாது.) அபக்குவராவர்,*

**திருமந்திரம்**

"மன்னுமல மைந்து மாற்றும் வகையோரான்
துன்னிய காமாதி தோயுந்தொழில் நீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப்பு அஞ்சாதான்
அன்னிய னாவ னசற்சீட னாமே". - *என்றதனாற்காண்க.*

*இனி பரிபாகம் அற்றவருக்கு இக்கீதையை உபதேசித்தால் தேவர்கள் சபிப்பதேன் எனின் அதன் காரணத்தைப் பின் கூறுகின்றார்.*

**அதப்ருஷ்டோமயாவிப்ரா: பகவாந்பாதராயண:**
**பகவந்தேவதாஸ்ஸர்வா: கிம்க்ஷுப்யந்திஶபந்திச 07**

*(பொ-ரை): ஓ விப்பிரர்களே, பிறகு பகவானான வியாஸர் என்னால் கேட்கப்பட்டார் அதாவது எல்லாத் தேவர்களும் ஏன் கோபிக்கின்றார்கள்? ஏன் சபிக்கின்றார்கள்?*

**தாஸாமத்ராஸ்திகாஹா நிர்யயாக்ஷுப்யந்திதேவதா:**
**பாராஶர்யோ தமாமாஹ யத்ப்ருஷ்டம்ஶ்ருணுவத்ஸல 08**

*(பொ-ரை): தேவர்கள் யாதொரு கீதை யுபதேசத்தால் கோபிக்கின்றனரோ, இக்கீதை யுபதேசத்தில் அவர்களுக்குக் கெடுதி யாதுளது? அதற்கு வியாஸர் எனக்கு உரைத்ததாவது, ஓ வச்சலனே, யாதொன்று உன்னால் வினவப்பட்டதோ அதைக் கேட்பாயாக.*

**நித்யாக்நிஹோத்ரிணோ விப்ராஸ்ஸந்தியேக்ருஹமேதிந:**
**தஏவஸர்வபலதாஸ்ஸுராணாங்காமதேநவ: 09**

*(பொ-ரை): கிருஹஸ்த ஆசிரமிகளான, எந்த அந்தணர்கள் நியதமாய் அக்நிஹோத்திரம் செய்கின்றவர்களாய் இருக்கின்றனரோ, அவர்களே தேவர்களுக்கு எல்லாப் பயன்களையும் கொடுக்கும் காமதேனுக்களாம்.*

*(இங்குக் கருமிகள் செய்யும் வேள்விகள் தேவர்களுக்கு நல்லுணவாதலின் எல்லாப் பயன்களையும் கொடுக்கும் காமதேனுக்கள் என்று சிறப்பித்துக் கூறப்பட்டதறிக).*

**பக்ஷ்யம்போஜ்யம்சபேயம்ச யத்யதிஷ்டம்ஸுபர்வணாம்**
**அக்நௌஹுதேநஹவிஷா தத்ஸர்வம்லப்யதேதிவி 10**

*(பொ-ரை): கலத்திலிடாது புசிக்கப்படுவதும் கலத்திலிட்டுப் புசிக்கப்படுவதும் அருந்தப் படுவதுமாகிய யாது, யாது தேவர்களால் விரும்பப்படுகின்றதோ அவையெல்லாம் நெருப்பில் ஓமம் செய்யப்பட்ட அவிர்ப்பாகத்தால் தேவலோகத்தில் அடையப்படு கின்றது.*

**நாந்யதஸ்திஸுரேஶாநா மிஷ்டஸித்திதப்ரதந்திவி**
**தோக்த்ரீதேநுர்யதாநீதா து:க்கதாக்ருஹமேதிநாம் 11**

*(பொ-ரை): தேவர்களுக்குச் சொர்க்கத்தில் விரும்பப் பட்டதைச் சாதித்துக் கொடுப்பது மற்றேதுமில்லை. எங்ஙனம்*

நற்கரையையுள்ள பசு மற்றவையால் கவரப்படின் கிரகஸ்தர்களுக்குத் துக்கத்தின் பொருட்டாகின்றதோ.

**ததைவஜ்ஞாநவாந் விப்ரோதேவாநாம்தூ கதோபவேத்**
**த்ரிதஶாஸ்தெநவிக்நந்தி ப்ரவிஷ்டாவிஷயம்ந்ருணாம் 12**

*(பொ-ரை): அங்ஙனமே ஞானவானாகிய அந்தணன் தேவர்களுக்குத் துக்கஹேதுவாகின்றான். ஆதலால் தேவர்கள் மனிதர்களது மங்கை முதல்வராதி விஷயங்களில் பிரவேசித்தவர்களாய் நின்று இடையூறு செய்கின்றார்கள்.*

*(இங்கு, கருமங்களைப் புரிவோர்க்கே தேவரிடம் பத்தி யுதிக்கும்; வைராக்கியத்தைப் பெற்று விஷயாதிகளை வெறுத்துத் தள்ளி உபாஸனை செய்வோருக்குச் சிவனிடம் பத்தி உதிக்குமே யன்றி மற்றேதும் இராது; ஆதலின் இத்தகைய வைராக்கியம் உடையோன் தேவப்பிரீதி ஹேதுவான கருமங்களைச் செய்யாதது பற்றித் தேவர்களுக்குத் துக்க ஹேதுவாகின்றான் என்று கூறப்பட்டது. கிருகஸ்தனுக்குச் சுகஹேதுவான பசுவை எவனாவது கைப்பற்றி விடுவானாகில், அதனால் அவர்களுக்குத் துன்பமுண்டாவது போலவே தேவர்களுக்குஞ் சுகஹேதுவான கருமத்தைப் பெரிதாய் நினைக்காது ஞானத்தையே பெரிதென்று நினைத்துத் தேவப் பிரீதியைச் செய்யாதவன் துன்பஹேதுவாவான் என்பது காண்க).*

**ததோநஜாயதேபக்தி ஶ்ஶிவேகஸ்யாபிதேஹிந:**
**தஸ்மாதவிதஷாம்நைவ ஜாயதேஶூலபாணிந: 13**

*(பொ-ரை): ஆதலால் ஞானமார்க்கஞ் சென்ற எம் மனிதனுக்கும் சிவனிடம் பக்தியானது உண்டாகின்றதில்லை. ஆனதுபற்றியே அறிவில்லாதவர்க்கும் சூலபாணி விஷயமான பக்தியானது உண்டாகிறதில்லை.*

*(இங்கு ஞானமார்க்கஞ்சென்ற எம் மனிதனுக்கும் என்றதனால் உறுதியான பக்தியில்லாமல் நற்பரிபாகம் இராமல் ஞானமார்க்கஞ் சென்ற எம் மனிதற்கும் என்றறிக.)*

**யதாகதம்சிஜ்ஜா தாபி மத்யேவிச்சித்யதேந்ருணாம்**
**ஜாதம்வாபிஶிவக்ஞாநம் நவிஶ்வாஸம்பஜத்யலம் 14**

*(பொ-ரை): மனிதருக்கு எப்புண்ணியத்தாலாவது பக்தியுண்டானாலும் இடையில் (தேவர்களால்) துலைந்து*

விடுகின்றது; சிவஞானம் உண்டாயினும் அது போதுமானதாய் ஏற்படுவதில்லை.

ருஷிகள் கேள்வி :

**யத்யேவம்தேவதா விக்நமாசரந்திதநூப்ருதாம்**
**பௌரூஷம்தத்ர கஸ்யாஸ்தியேநமுக்திர்பவிஷ்யதி 15**

*(பொ-ரை) :- இங்ஙனம் தேவர்கள் மனிதருக்கு இடையூறு செய்பவர்களாயின் எந்தப் பிரயத்தினத்தினால் முக்திகிட்டுமோ அத்தகைய புருஷயத்தினமானது எங்கு எவனுக்குளது?*

**ஸத்யம்ஸூதாத்மஜப்ரூஹி தத்ரோபாயோஸ்திவாநவா**
**ஸூதஉவாச**
**கோடிஜந்மார்ஜிதை: புண்யைஶ்ஶிவேபக்தி: ப்ரஜாயதெ 16**

*(பொ-ரை) :- ஓ சூதபுத்திரரே, இவ்விஷயத்தில் உபாயமுள்ளதா அல்லது இல்லையோ உண்மையைக் கூறுமென்றவுடன் சூதர் அனேகப் பிறப்புகளில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களால் சிவனிடம் பக்தியுதிக்கின்றது.*

ஔவைக்குறள்.

பல்லூழி காலம் பயின்றுஅரனை அர்ச்சிக்கில்
நல்லறிவு சற்றே நகும். - என்ற கருத்துமிது.

**இஷ்டாபூர்தாதிகர்மாணி தேநாசரதிமாநவ:**
**ஶிவார்பணதியாகாமாந் பரித்யஜ்யயதாவிதி 17**

*(பொ-ரை) :- மனிதன் அச் சிவப்பிரசாதத்தாலேயே வேள்வி, சிவாலயம், கிணறு, அன்னசத்திரம், குளம் இவைகளை நிருமித்தல் முதலிய கருமங்களின் பயனை விரும்பாது சிவன் பொருட்டென்ற எண்ணத்தோடு விதிப்படி செய்கின்றான்.*

**அநுக்ரஹாத்தேநஶமபோர்ஜா யதேஸூத்ருடோநர:**
**ததோபீதா: பலாயந்தே விக்நமஹித்வாஸூரேஶ்வரா 18**

*(பொ-ரை): அதனால் சிவாநுக்கிரஹத்தால் மனிதன் சலியாத சித்தமுடையவன் ஆகின்றான். ஆதலால் தேவர்கள் விக்நம் செய்தலை விடுத்துப் பயம் கொண்டு ஓட்டம் பிடிக்கின்றார்கள்.*

(கருமங்களைச் சிவன் பொருட்டு என்றே பயனை விரும்பாது செய்ய வேண்டும் என்பதாயிற்று.)

**ஜாயதேதேநஶுஶ்ருஷா சரிதேசந்த்ரமௌளிந:**
**ஶ்ருண்வதோஜாயதேஞாநம் ஜ்ஞாநாதேவவிமுச்யதே 19**

(பொ-ரை):- ஆதலால் சிவபெருமானது சரித்திரத்தைக் கேட்க இச்சை உதிக்கின்றது; ச்ரவணம் செய்தால் ஞானம் உதிக்கின்றது; ஞானத்தினாலேயே முக்தி யடைகின்றான்.

(ஆதலால் என்றதனால் தேவர்கள் இடையூறு செய்யாததனால் என்று அறிக. அதனால் தடை யற்றுச் சிவபக்தி விருத்தியாக, அவனது மஹிமையை அறிய விரும்பிச் சிவமஹிமா விசாரம் செய்யவே ஞானம் நிகழ்கின்றது.)

இனி ஞானமென்பது யாதெனின்? கூறுவோம்.

**பிரமாணம் : சூதஸம்ஹிதை யஞ்ஞவைபவகண்டம்**

"ஜ்ஞாநாநாம்ஶம்புவிஜ்ஞாநம் வரிஷ்டந்நேத்ரதபவேத் வேத வாக்யஸமுத்பந்நம் ஶிவஜ்ஞாநம்நிரூபணே

ஸம்யஜ்ஞாநம்மயா க்யாதம்"

என்றதனால் சிவஞானம் என்றே அறிக.

**பஹுநாத்ரகிமுக்தேந யஸ்யபக்திஶ்ஶிவேத்ருடா**
**மஹாபாபோபபாபௌக கோடிக்ரஸ்தோபிமுச்யதே 20**

(பொ-ரை): பண்டு மிக்க உரைப்பதனால் யாதுளது எவனுக்குச் சிவனிடம் உறுதியான பக்தியுளதோ, அவன் எத்தகைய பாவங்களின்றும் நீங்கி முத்தியடைகின்றான்.

திருமந்திரத்தில்,

சிவசிவ என்றிடத் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்றிடச் சிவகதி தானே.

என்றதனாற் காண்க.

**ருத்தம்கிஞ்சித்ஸமாதாயக்ஷுல்லகம்ஜலமேவவா**
**யோதத்தேநியமேநாஶௌ தஸ்மைதத்தேஜகத்ரயம் 21**

*(பொ-ரை): சிறப்புற்றதாய் எதையாவது யல்லது அற்பமானதையாவது அல்லது ஜலத்தையாவது எடுத்து எவன் நியதமாய்ச் சிவபெருமானிடம் சமர்ப்பிக்கின்றானோ, அவனுக்கு அவ்விறைவன் மூவுலகையும் அளித்தருளுகின்றார்.*

**திருமந்திரத்தில்,**

புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணா லாரதுகண்டு அருள்புரியா நிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே. *என்றதனாற் காண்க.*

**தத்ராப்யஶக்தோநியமாந் நமஸ்காரம்ப்ரதக்ஷிணம்**
**ய:கரோதிமஹேஶஸ்ய தஸ்மை துஷ்டோபவேச்சிவ: 22**

*(பொ-ரை):- அதனில் கூட சத்தியிராது எவன் சிவபெருமானுக்கு நியமமாய் (சுற்றிவருதல், கீழ் விழுந்து வணங்குதல்) பிரதக்ஷிண நமஸ்காரங்களைச் செய்கின்றானோ அவனிடம் அவ்விறைவன் திருப்தியுள்ளவர் ஆகின்றார்.*

**ப்ரதக்ஷிணாஸ்வஶக்தோபி யஸ்வாந்தேசிந்தயேச்சிவம்**
**கச்சந்ஸமுபவிஷ்டோவா தஸ்யா பீஷ்டம்ப்ரயச்சதி 23**

*(பொ-ரை) :- ப்ரதக்ஷிணங்களிற் கூடச் சத்தியற்ற எவன் நடந்துகொண்டேயாவது உட்கார்ந்துகொண்டேயாவது சிவனை மனதினில் சிந்திப்பானேயாகில் சிவபெருமான் அவனுக்குக் கோரும் பொருளைக் கொடுத்தருளுகின்றார்.*

**திருக்கருவை அந்தாதியில்,**

இருக்கினு நிற்கும் போதும் இரவுகண் துயிலும் போதும்
பொருக்கென நடக்கும்போதும் பொருந்திஊண்துய்க்கும் போதும்
முருக்கிதழ் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும் போதும்
திருக்களா உடைய தம்பா சிந்தையுன் பாலதாமே.

*என்றதானுங் காண்க.*

**சந்தநம்பில்வகாஷ்டஸ்ய புஷ்பாணிவநஜாந்யபி**
**பலாநிவநஜாந்யேவ யஸ்யப்ரீதிகராணிவை 24**

*(பொ-ரை) :- எவருக்கு வில்வக்கட்டையின் சந்தனமும், கானகத்திற்றோன்றிய மலர்களும், கானகப் பழங்களுமே திருப்தியை யுண்டு பண்ணுவனவோ, (இங்குக் கானகத்திற்*

தோன்றிய பழங்களென்றது விளா, நெல்லி, நாவல், இலந்தை முதலிய சிவநிவேதனத்திற்குரிய கனிகள் என்றறிக.)

**துஷ்கரந்தஸ்யஸேவாயாம் கிமஸ்திபுவநத்ரயே**
**வந்யேஷூயாத்ருஶீப்ரீதிர் வர்ததேபரமேஶிது: 25**

(பொ-ரை) :- அச் சிவபெருமானது பூசையில் செய்யக் கூடாதது, மூவுலகிலும் யாதுளது; சிவபெருமானுக்குக் கானகத்திலுள்ள பூஜோபகரணங்களில் எங்ஙனம் பிரியமானது உளதோ.

**உத்தமேஷ்வபிநாஸ்த்யேவ க்ராமஜேஷ்வபிதாத்ருஶீ**
**தந்த்யக்த்வாதாத்ருஶந்தேவம் யஸ்ஸேவேதாந்யதேவதாம் 26**

(பொ-ரை) :- கிராமங்களிற் றோன்றிய சிறந்தபூ கனிகளிலும் அவ்வளவு பிரீதியில்லவே யில்லை, அங்ஙனம் அற்ப சமர்ப்பணத்தினாலேயே அபாரமானப் பிரியமுடைய அபாரகருணாநிதியான அத்தேவனை விடுத்து ஏன் இதரதேவதையை உபாசிக்கின்றானோ.

**ஸஹிபாகீரதீந்த்யக்த்வா காங்க்ஷதேம்ருகத்ருஷ்ணிகாம்**
**கிந்துயஸ்யாஸ்திதுரிதம் கோடிஜந்மஸூஸஞ்சிதம் 27**

(பொ-ரை) :- அவன் கங்காநதியை விடுத்துக் கானல்நீரை விரும்புகின்றவன் அன்றோ மற்றொவெனின் எவனுக்கு அநேகப்பிறப்புகளில் சம்பாதிக்கப்பட்ட பாவமுளதோ.

குறிப்பு : (அற்ப பூஜையாலேயே மிக்க கருணை கூரும் சிவபெருமானை விடுத்து வேறு தெய்வத்தை உபாஸித்தல் கங்காநதியை விடுத்துக் கானல்நீரை விரும்புதலுக்கு ஒப்பாகும்.)

இத்தகையரையே உமாபதி சிவம்,

நெற்குத்துண்ணாது உமிகுத்திக் கைவருந்திக் கறவைநிற்க
மலடுகறந்து உளந்தளர்ந்து குளிர் பூஞ்சோலை வழியிருக்க
குழியில் விழுந்து அளறுபாய்ந்து விலைதருமென் கரும்பிருக்க
இரும்பை மென்று விளக்கிருக்க மின்மினித் தீக்காய்ந்து நொந்தார்.

எனத் திருவாய்மலர்ந்து அருளினார்.

**தஸ்யப்ரகாஶதேநாயம் த்வர்தோமோஹாந்தஸே தஸ:**
**நகாலநியமோயத்ர நதேஶஸ்யஸ்தலஸ்யச 28**

**யத்ராஸ்யசித்தம்ரமதே தத்ரத்யாநேநகேவலம்**
**ஸ்வாத்மத்வேநஶிவஸ்யாஸௌ ஶிவஸாயுஜ்யமாப்நுயாத் 29**

*(பொ-ரை): அஞ்ஞான இருளால் மூடப்பட்ட மனது உடையவனுக்கு இத்தத்துவமானது விளங்குகின்றதில்லை. எவ்விறைவனது விஷயமாய்க் காலதேச இருப்பிடங்களின் நியமமில்லையோ, இவனது மனமானது எத்தேச காலங்களில் உருசிக்கின்றதோ, அத்தேச காலங்களில் சிவனைத் தானாகவே தியானிப்பதினாலேயே இங்ஙனம் தியானிப்பவன் சிவஸாயுச்சியத்தை யடைகின்றான்.*

**பிரமாணம் : தரிசநோபநிடதம்**

ஊர்த்வரேதம்விரூபாக்ஷம் விஶ்வரூபம்மஹேஶ்வரம்
ஸோஹமித்யா தரேணைவ த்யாயேத்யோகீஶ்வரேஶ்வரம்

*(இ.ள்.) மேனோக்கிய ரேதசுவுடையவனும் நெற்றிக் கண்ணனும் விச்வரூபனும், யோகீச்சுரர்களால் சேவிக்கப் படுகிறவனும் ஆகிய சிவபெருமானை அவனே யான்என்று ஆதரவுடன் தியானிக்கவேண்டும்.*

**உருத்திர இருதய உபநிடதம்**

அதிஷ்டாநம்ஸமஸ்தஸ்ய ஜகதஸ்ஸத்யசித்கநம்
அஹமஸ்மீதிநிஶ்சித்ய வீதஶோகோபவேந்முநி:

*(இ.ள்.) எல்லா ஜகத்திற்கும் ஆதாரமாயும் மெய்ஞ்ஞான வடிவனும் ஆகிய இறைவன்யானே யாகிறேன்என்று மௌனியாய்த் தியானிப்பவன் சோகத்தைத் தாண்டுகின்றான்.*

**அமிருத பிந்தூபநிடதம்**

ததேவம்நிஷ்களம்ப்ரஹ்ம நிர்விகல்பம்நிரஞ்ஜநம்
தத்ப்ரஹ்மாஹமிதிஜ்ஞாத்வா ப்ரஹ்மஸம்பத்யதேத்ருவம்

*(இ.ள்.) நிஷ்களமும், நிருவிகல்பமும், நிரஞ்சனமுமான பிரமம் அஃதே. அப்பிரமமாஞ்சிவனை யான் என்று அறிந்து சிவனை அடை கின்றான்.*

**தேஜோபிந்தூபநிடதம்**

ஸர்வவ்யாபாரமுத்ஸ்ருஜ்ய அஹமப்ரஹ்மேதிபாவய
அஹம்ப்ரஹ்மாஸ்மிமந்த்ரோயம் ஜ்ஞாநாநந்தம்ப்ரயச்சதி.

(இ.ள்.) எல்லா வியாபாரத்தையும் விடுத்து யானே சிவனென்று பாவனை செய்க, யானே சிவனெனும் இம்மந்திரம் ஞானாநந்தத்தை அளித்தருளும்.

**திரிசிகிப்பிராம்மணோபநிடதம்**

அஹமேவபரம்ப்ரஹ்ம ப்ரஹ்மாஹமிதிஸம்ஸ்திதி:
ஸமாதிஸ்ஸதுவிஜ்ஞேய:

(இ.ள்.) யானே பரனான சிவன் சிவனே யான் என்ற பாவனையே ஸமாதியென்றறியத் தக்கது.

**தக்ஷிணாமூர்த்தி யுபநிடதம்**

ஸோஹமிதியாவதாஸ்திதிஸ்ஸாநிஷ்டாபவதி.

(இ.ள்.) அவனே யான் என்றிருக்கும் வரையில் நிஷ்டையாகும்.

**கந்தோபநிடதம்**

த்யஜேதஜ்ஞாநநிர்மால்யம் ஸோஹம்பாவேநபூஜயேத்.

(இ.ள்.) அஞ்ஞானத்தைத் தொலைக்கவேண்டும் (சோஹம் பாவனை) அவனே யானென்ற பாவனையால் பூஜிக்கவேண்டும்.

**சாண்டில்லியோபநிடதம்**

உபாஸ்தேஸோஹமிதிஸப்ரஹ்மவித்பவதி.

(இ.ள்.) அவனே யானென்று உபாஸிப்பவன் சிவஞானியாகின்றான்.

**பைங்களோபநிடதம்**

அஹம்ப்ரஹ்மாஸ்மீத்ய நுஸந்தாநம்குர்யாத்.

(இ.ள்.) யானே சிவனாகின்றேன் என்று அநு சந்தானம் செய்ய வேண்டும்.

**மஹோபநிடதம்**

ப்ரஹ்மைவாஹமிதிஜ்ஞாத்வாவீதஶோகோபவேந்முநி:

(இ.ள்.) சிவனே யானென்றறிந்த முனிவன் துக்கத்தைத் தாண்டுகின்றான்.

**அந்நபூர்ணோபநிடதம்**

தத்வித்யா விஷயம்ப்ரஹ்ம ஸத்யஜ்ஞாநஸுகாத்வயம்
ஏகம்ப்ரஹ்மாஹமஸ்மீதி க்ருதக்ருத்யோபவேந்முநி:

*(இ.ள்.) வித்தைக்கு விஷயமானவனும் உண்மையறிவானந்தனும் அத்துவயனும் ஏகனுமான (பிரமமே) சிவனேயானென்று கிருதகிருத்தியன் ஆகின்றான்.*

**துரீயாதீதாவதூதோபநிடதம்**

அஹம்ப்ரஹ்மேதிவிஜ்ஞாநாத் கல்பகோடிஶதார்ஜிதம்
ஸஞ்சிதம்விலயம்யாதி.

*(இ.ள்.) யானே சிவன் என்ற தியானத்தால் அநேக கற்பங்களிற் சம்பாதிக்கப்பட்டுள்ள கருமங்கள் துலைகின்றன -என்பாதி உபநிடதங்களாலும்,*

**ஸர்வஞானோத்தரவாகமம்**

யஶ்ஶிவஸ்ஸோஹமேவேதி அத்வயம்பாவயேத்ஸதா.

*(இ.ள்.) யாதொரு சிவன் யானே யென்று ஐக்கியபாவனை செய்க.*

**தேவிகாலோத்தரம்**

அஸமேவபரம்ப்ரஹ்ம ஜகந்நாதோமஹேஶ்வர:
இதிஸ்யாந்நிஶ்சிதோமுக்த:

*(இ.ள்.) ஜகந்நாதனும் பரப்பிரும்மமுமான மஹேச்சுரன் யானே என்று நிச்சயிப்பவன் முக்தனாகின்றான்.*

*(இங்ஙனமே சதுர்வேத தாத்பர்ய ஸங்கிரகமூலமாம் ச்ருதி ஸூக்திரத்நமாலையில், ஸ்ரீமகாவிஷ்ணுவைப் பரமென்று வேதம் பிரதி பாதித்தற்குக் காரணம் கூறிய இடம்.)*

**சதுர்வேததாற்பர்ய ஸங்கிரக ச்ருதிசூக்தி ரத்நமாலை**

ப்ரஹ்மோச்யதேபரமஸௌ பரமஞ்சதத்வம் ஜ்யோதி:
பரஞ்சபரமேஶ்வர பத்மநாப: த்வத்பாவநைகபஜநாத்த்வ
தநந்யபாவாந்மந்த்ரீயதா கருட பாவநயாகருத்மாந்.

*(இ.ள்.) ஓ பரமேசுவரனே, கருடமந்திர உபாஸகன் கருடபாவனையால் எங்ஙனம் கருடத்தன்மை பெறுகின்றானோ,*

*அதுபோல உம்மிலும் அந்நியன் என்ற பாவனையைவிட்டு உம்மோடு ஐக்கியபாவனையை ஏகாக்கிரமாய்ச் செய்ததனால் இப்பொழுது நானான திருமால் பரப்பிரும்மமென்றும், பரமதத்துவமென்றும், பரஞ்சோதியென்றும் கூறப்படுகின்றார் என்று* **சிவோகம் பாவனை** *மகிமையாலேயே மகாவிஷ்ணுவை வேதமானது பரம் என்றும், சோதியென்றும் வழங்குகின்றது என்பதாதிப் பிரமாணங்களாலும்,*

**திருவாசகம்**

சிவனென யானும் தேறினன் காண்க.

*என்னும் திராவிட வேதத்தானும்,*

**திருமந்திரம்**

''கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோற்
குருவின் உருவங் குறித்தவப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே''.

*என்னும் திருமந்திர மாலையானும்,*

**சிவஞானசித்தியார்**

''கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணாக்
கழிபரமு நானல்லேன் எனக்கருதிக் கசிந்த
தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே
சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றன்றி
விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தின்
விடமொழியு மதுபோல விமலதையு மடையும்
பண்டைமறை களுமதுநா னானே னென்று
பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே''.

*என்னும் திராவிடோபநிடதத்தானும் காண்க.*

**அதிஸ்வல்பதராயுஶ்ரீர் பூதேஶாம்ஶாதிபோபிய :
ஸதுராஜாஹமஸ்மீதிவாதிநம்ஹந்திஸாந்வயம் 30**

(பொ-ரை) :- *மனிதருக்கே அதிபனாயும் மிக்க அற்பாயுளையும் செல்வத்தையும் உடையோனாய் எவனுளனோ? அவன் யானே அரசன் என்று கூறுவோனை அவனினத்தோடு கூட வதைக்கின்றான்.*

**கர்த்தாபிஸர்வலோகாநா மக்ஷயைஸ்வர்யவாநபி**
**ஶிவஶ்ஶிவோஹமஸ்மீதி வாதிநம்யஞ்சகஞ்சந 31**

**ஆத்மநாஸஹதாதாத்ம்ய பாகிநம்குருதேப்ருஶம்**
**தர்மார்த்தகாமமோக்ஷாணாம் பாரம்யாஸ்தயேநவை 32**

*(பொ-ரை): எல்லா உலகங்களையும் படைப்போன் ஆயினும் சிவபெருமான் சிவோஹம் என்று கூறுவோனான எம்மனித னையும் தன்னோடு நன்குஐக்கியப்படுத்திக் கொள்ளுகின்றார். அறம் பொருள் இன்ப வீடுகளின் கரையை யதனாலேயே அடைவீர்களோ.*

*(இங்கு தாதான்மியம் என்றதனால் முக்தியென்றறிக இம் முக்தியே பரமுக்தி யென்றும் கூறப்படுவதாம்).*

**முநயஸ்தத்ப்ரவக்ஷ்யாமி வ்ரதம்பாஶுபதாபிதம் 32½**

*(பொ-ரை) :- ஓ முனிவர்களே, பாசுபதமென்று வழங்கும் அவ் விரதத்தை யுரைக்கின்றேன்.*

**சூதஸம்கிதை**

புநஸ்ஸாக்ஷாச்சிவஜ்ஞாந ஸித்யர்த்தம்முநிபுங்கவா:
அக்நிஹோத்ரஸமுத்பந்நம் பஸ்மா தாயாத்ரேணச

*என்பதாதி வாக்கியங்களாலும் பிரதிபாதிக்கப்பட்டுளதறிக.*

**நுட்பம் :** பாசுபதம், பிரதம், சிரோவிரதம், அத்தியாசிரமம், சாம்பவம், ஐசுவரம் என்பன பாசுபத விரதத்திற்குப் பெயராகச் சூதசங்கிதையிலேயே கூறப்பட்டிருக்கின்றன. இதனால் பசுமம், ஐசுவரியம், ஐசுவரம் என்பனவும் (பாதாதி கேசாந்தம் அக்கினி முதலிய மந்திரங்கொண்டு தரிக்கப்படும்) விபூதி விரதமாகிய பாசுபதவிரதத்துக்குப் பெயராம் என்க. இந்த விபூதி விரதானுஷ் டான வாயிலாக உமாசமேதராகிய சிவபெருமான் தியானிக்கப் படுங்கால் இந்த யோகம் பாசுபத யோகம் எனப்படும் என்க.

**க்ருத்வா துவிரஜாந்தீக்ஷாம் பூதிருத்ராக்ஷதாரிண: 33**

**ஜபந்தோவேதஸா ராக்யம் ஶம்போர்நாமஸஹஸ்ரகம்**
**ஸந்த்யஜ்யதேநமர்த்யத்வம் தைவீந்தநுமவாப்ஸ்யத 34**

(பொ-ரை): விரஜாதீக்கையைச் செய்து விபூதி ருத்திராக்கங்களை அணிந்தவர்களாய் வேதஸாரமென்ற சிவஸஹஸ்ர நாமத்தைச் ஜபம் செய்துகொண்டிருங்கள். அதனால் மனிதத் தன்மையைத் துலைத்துச் சிவனருள் பாலிக்க யோக்கியமான தேகத்தைப் பெறுவீர்கள்.

*இங்கு மனிதத் தன்மையைத் துலைத்து என்றதனால் மனதில் அழுக்கைத் துலைத்து என்றும், தெய்வத் தன்மைபெற்ற என்றதனால் சிவனருள் பாலிக்க யோக்கியமான என்றும் கொள்க.

**தத:ப்ரஸந்நோபகவாந் ஶங்கரோலோகஶங்கர :
பவதாந்த்ருஶ்யதாமேத்ய கைவல்யம்வ:ப்ரதாஸ்யதி** 35

(பொ-ரை): பின்னர், உலகம் அனைத்திற்கும் சுகமளிப்போனான பகவானாகிய சிவபெருமான் உங்கள் முன்னிலையில் பிரஸந்நராய் ஆவிர்ப்பவித்துக் கைவல்யம் எனும் முக்தியை உங்களுக்கு அளித்தருள்வார்.

**ராமாயதண்டகாரண்யே யத்ப்ராதாத்கும்பஸம்பவ:
தத்ஸர்வம்வ: ப்ரவக்ஷ்யாமி ஶ்ருணுத்வம்பக்தியோகிந:** 36

(பொ-ரை) :- தண்டகாரண்யத்தில் அகத்தியமா முனிவர் ராமன் பொருட்டு எதை உபதேசித்தனரோ, அஃதெல்லாவற்றையும் உங்களுக்கு உரைக்கின்றேன் நீங்கள் பக்தியுடையோர்களாய் இருந்து கேளுங்கள்.

(பக்தியோக அத்தியாயம் முற்றிற்று.)



சதாசிவ மூர்த்தி

# ௨. வைராக்கியயோக அத்தியாயம்

*அகத்தியர் - இராமர்,சம்வாதம் - ஸ்ரீ இராமருக்கு அகத்தியமுனிவர் விரசா என்ற தீட்கைஷயை செய்கின்றார். சீதையை பிரிந்த துக்கத்திலிருந்த இராமருக்கு மானுடதேகத்தின் அழிவையும், ஆத்மாவின் அழிவற்ற தன்மையையும் விளக்குகின்றார். எந்த ஜீவனுக்கு யார் யார் பந்தம் தான் யார்? என்பதைப் பற்றி விளக்குகின்றார். மூன்றுவித பிறப்பையும், மாயையின் ஆற்றலையும் கூறுகின்றார். இந்த உரைகள் அகத்தியர், ஸ்ரீ இராமர் சமவாதமாய சிவகீதையின் ௨ம் அத்தியாயமாய் கூறப்படு கின்றது.*

**ருஷிகள் வினா**

**கிமர்த்தமாகதோகஸ்த்யோ ராமசந்த்ரஸ்யஸந்நிதம்**
**கதம்வாவிரஜாந்தீக்ஷாம் காரயாமாஸராகவம் 01**

*(பொ-ரை): ருஷிகள் கேட்கின்றனர், அகத்தியமா முனிவர் எதற்காக ராமனிடம் வந்தார்? விரசா தீக்கையை ராமனுக்கு எவ்விதம் செய்து வைத்தார்?*

**தத: கிமாப்தவாந்ராம: பலந்தத்வக்துமர்ஹஸி**
**ராவணேநயதாஸீதா பஹ்ருதாஜநகாத்மஜா 02**

**ததாவியோகது கேந விவபந்தாஸராகவ**
**நிர்நிதரோநிரஹங்காரோ நிராஹாரோதிவாநிஶம் 03**

*(பொ-ரை): அதனால் ராமன் என்ன பயனை யடைந்தான் அதைத் தாங்கள் சொல்லுவீர்களாக. ஜனகன் பெண்ணாகிய ஸீதையானவள் எப்பொழுது அபகரிக்கப்பட்டாவளோ. அப்போது பிரிவாற்றாமையால் உண்டாய துக்கத்தால் ராமன் இரவும் பகலும் நித்திரையற்றும் அகங்காரம் மற்றும் ஆகாரமற்றவனாகவும் இருந்து புலம்பிக் கொண்டு இருந்தான்.*

**இராமாயணம்**

சாயுந் தம்பி திருத்திய தண்டளிர்
தீயு மங்கவை தீர்கெனுஞ் செவ்விருந்
தாயு மாவி புழுங்க வழுங்குமால்
வாயு நெஞ்சும் புலர மயங்குவான்.

பிரிந்த வேதுகொல் பேரபி மானங்கொல்
தெரிந்த தில்லை திருமலர்க் கண்ணியைப்
பொருந்த வாயிரங் கற்பகங்கள் போக்குவான்
இருந்து கண்டிலன் கங்குலி னீறரோ.

**மோக்துமைச்சத்தத:ப்ராணாந் ஸாநுஜோரகுநந்தந:**
**லோபாமுத்ராபதிர்ஜ்ஞாத்வா தஸ்யஸந்நிதிமாகமத் 04**

*(பொ-ரை) :- பிறகு சோகாதுரனுடன் கூடிய ராமன் உயிர் துறக்க விரும்பினான். அகஸ்தியமாமுனிவர் இதையறிந்து ராமனுக்கெதிரில் தோன்றினார்.*

**அதைநம்போ தயாமாஸ ஸம்ஸாராஸாரதாம்முநி:**
**கிம்விஷீதஸிராஜேந்த்ர காந்தாகஸ்யவிசார்யதாம் 05**

*(பொ-ரை) :- பிறகு, முனிவர் ராமனுக்குச் சம்ஸாரம் துச்சம் என்பதைப் போதனை செய்தார். அகத்தியர் கூறியதாவது; அரசருள் சிறந்தவனான ஓ ராமனே, மனைவி என்கின்றனையே அவள் யாருக்கென்று விசாரித்தறியத் தக்கது.*

*நுட்பம் : இங்கு விசாரித்தறியத் தக்கது என்றதனால் ஞானி நிலையின் வழி விசார உருவமாய்ப் போதிக்கின்றார் என்பதறியக் கிடக்கிறது, ஈண்டு அனுபவம் இருவகையாம். அஞ்ஞானியின் அனுபவம் ஒன்று; மற்றொன்று ஞானியின் அனுபவம்.

பாசத்தால் கட்டுண்டவன் அஞ்ஞானி, பாசநீங்கிச் சிவஞானம் பெற்றவன் ஞானியாம். பாசபந்தமுள்ள வரையில் சீவத்துவமுளது. பாசமானது அஞ்ஞானம், ஆவிருதி, மலம், மாயை, ஸம்வ்ருதி, மறைமோகம். அவித்தியை என்பதாதிச் சொற்களால் வழங்கப்படுவதாம். இம்மாயையின் செயப்பாட்டு அல்லற் படுவோர்களே சீவர்களாம் பசுக்களென்றும் வழங்குவதுண்டு.

இதற்குக் காரணம்,

**ஜாபாலியுபநிஷத்**

கதம்ஜீவா:பஶவஇதி கதந்தத்பதிரிதிஸதமுவாச யதாத்ரு
ணாஶிநோ விவேகஹீநா: பரப்ரேஷ்யா: க்ருஷ்யாதிகர்மஸுநி
யுக்தா: ஸகலது: கஸஹாஸ்ஸ்வஸ்வாமிபத்யமாநா: கவாதய:ப
ஶிவ: யதாதஸ்வா தாமிநஇவ ஸர்வஜ்ஞஈஶ: பஶுபதி:

*(இ.ள்):- சீவர்களைப் பசுக்களென்றும் ஈச்சுரனை பசுபதியென்றும் ஏன் கூறப்படுகின்றது? என்று வினவப் பதில் கூறியதாவது; எங்ஙனம் புற்களைப் புசிப்பவனும் விவேக மற்றனவும் பிறனால் ஏவப்படுகின்றனவும் சகிப்பனவும்* தனது எஜமானால் கட்டப்படுவனவுமாய்ப் பசுக்களுளவோ அவ்விதமே பசுக்களான சீவர்களாம். அவைகளின் எஜமானன்போல ஸர்வஞ்ஞனும் இறைவனுமாகிய பசுபதியாம்; *என்பதாதி மறை மொழிகளைக் கண்டறிக.* இங்ஙனம் *ஸம்ஸார பந்தத்தில் கிடந்துழலும் சீவர்களின் நிலையே (அனுபவமே) அஞ்ஞானி நிலையாம்.*

*ஞானி நிலையாவது ஈதெல்லாம் மாயாவிகாரம் துச்சமென்று ஒதுக்கித்தள்ளிப் பேரின்பமான சிவானந்தத்தைப் பெறுதற்குரிய உபதேசாதியை ஓர் ஆசிரியரிடமிருந்து பெற்றுச் சிவபெருமானது உபாஸனையால் நிகழுவதான அவனது அருளால் ஞானத்தைப் பெற்றுச் சுகிக்கும் பெரியோர்களின் அனுபவம் அல்லது நிலையேயாம்.*

*இங்குச் சீதையைவிட்டுப் பிரிந்து துக்கித்துக் கொண்டிருக்கும் ராமனுக்கு ஞானிநிலையை உபதேசித்துத் துக்கத்தை விலக்குவதற்காக, முனிவர் ஓ ராமனே, நீ இங்ஙனம் துக்கித்தல் யுக்தமன்று. மனைவியை இழந்தேன் என்கின்றனையே மனைவியாவது யார்? எவனுக்கு? அதைச் சற்று யோசித்துப்பார்; அங்ஙனம் ஆராய்ந்து பார்க்குங்கால் "மனைவியென்பதும் கணவனென்பதும் சித்தியாது ஞானிக்குச் சகலமும் சிவமென்று தோன்றுமே யொழிய வேறு தோற்றாது ஆதலின் சகலத்தையும் ஸீதாதேவியாயப் பார்க்காமல் சற்று யோஜனை செய்துபார்" என்பதாதி ஞானியின் நிலையாம் அனுபவத்தைக் கூறினார்.*

**ஜட: கிம்நருவிஜாநாதி தேஹோயம்பாஞ்சபௌதிக:**
**நிர்லேப: பரிபூர்ணஶ்ச ஸச்சிதாநந்தவிக்ரஹ: 06**

*(பொ-ரை) :- பஞ்சபூதங்களினின்றுந் தோன்றிய இச்சரீரம் ஜடமென்பதை நீ அறியாயாவென்ன, அசங்கனும் வியாபகனும் சச்சிதானந்தனுமாகிய,*

**ஆத்மாஸம்ஜாயதே நைவம்ரியதேநச து: கபாக் 07**

*(பொ-ரை) :- ஆன்மா பிறப்பதுமில்லை இறப்பதுமில்லை துக்கமுறை யதுமில்லை.*

**நுட்பம் :** *மேண்டுக் கூறப்பட்ட ஆன்மா சீவான்மாவேயாம். இனி சீவான்மாவுக்கு இங்கு கூறப்பட்ட அசங்க பரிபூரண ஸச்சிதாநந்த சுரூபமும் துக்கமற்றிருத்தல் என்பதும் எங்ஙனம் ஒவ்வும்; எனின் ஒவ்வாது என்பதே உண்மையெனக.*

*ஆயினும் இங்கு பாசபந்தம் பெற்று அல்லற்படுஞ் சீவர்களின் பசுத்துவ நிலையான அஞ்ஞானி நிலையை நோக்கிக் கூறப்பட்டதல்ல. பாசநீங்கிய முத்தான்மாக்களின் நிலையாகிய ஞானிநிலையை நோக்கியே கூறப்பட்டது. இங்கிஃது அறியற்பாலது சீவன், சிவன், பாசம் (அல்லது) மாயை இவைகள் மூன்றும் அனாதியேயாம்.*

**பிரமாணம் : சூதஸம்கிதை**

ஆத்மாந: பஶவஸ்ஸர்வே ப்ரோக்தா அஜ்ஞாநிநஸ்ததா
விஶ்வஸ்யஜகத: கர்த்தா பஶோரந்ய: பரஶ்ஶிவ:
அஜ்ஞாநமாத்மநாமேஷா மநாத்யேவஸ்வபாவத:

*(இ-ள்.) : ஆன்மாக்கள் எல்லோரும் அஞ்ஞானிகள் ஆதலால் பசுக்கள் என்னப்படுவார்கள். எல்லாச் சகத்திற்கும் கர்த்தா பசுக்களுக்கு அந்நியனான பரசிவனேயாம். இவர்களுக்குள்ள அஞ்ஞானம் அனாதியேயாம்.*

**திருமந்திரம்**

பதிபசு பாசு மெனப்பகர் மூன்றில்
பதியி னைப்போல் பசுபாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணுகிற் பசுபாச நிலாவே. *என்பனவற்றால் அறிக.*

*இங்ஙனம் அனாதியான சீவனது அனாதிசிவத்துவத்தை அனாதியாய்த் தடைப்படுத்திக் கொண்டிருக்கும் ஆணவமான அஞ்ஞானமானது நீங்கினால் தடைப்பட்டிருந்த சிவத்துவம் அபிவியத்தமாம். இவ்வாறு அபிவியத்தமான சிவத்துவத்தை யடைய சீவர்களே முத்தர்களாம்.*

**திருமந்திரம்**

அனாதி சிவரூப மாகிய வான்மாத்
தனாதி மலத்தாற் றடைப்பட்டு நின்றது
தனாதி மலமும் தடையற்ற போதே
யனாதி சிவ ரூபமாகிய வாறே.

என்றபடி இத்தகைய முத்தான்மாவின் நிலை துக்க மற்ற நிலையாதலின் ஈண்டு அதைக் கூறியதறிக.

**ஸூர்யோஸஸர்வலோகஸ்ய சக்ஷுஷ்ட்வேநவ்யவஸ்தித:**
**ததாபிசாக்ஷுஷைர்தோ ஷைர்நகதாசித்விலிப்யதே**
**ஸர்வபூதாந்தராத்மாபி தத்வத்து:க்கைர்நலிப்யதே 08**

(பொ-ரை):- இச்சூரியன் எல்லா உலகினுக்குங் கண்ணாயினும் கண்களின் குற்றங்களால் எங்ஙனம் சம்பந்திப்பது இல்லையோ, அங்ஙனமே எல்லாப் பூதங்களினுள் ஆன்மா நிற்கும் பொருளாயினும் துக்கங்களோடு பொருந்துவதில்லை.

(முற்சுலோகத்தில் கூறிப்போந்த ஞானி நிலையாவது; சீவத்துவம் நீங்கிச் சிவத்துவம் அபிவ்யக்த மானவர்களின் நிலையேயாம். அதாவது சிவாநந்தானுபவ நிலையேயென்க).

**பிரமாணம் : தைத்திரீயோபநிடதம்**

ப்ரஹ்மவித்ப்ரஹ்மைவபவதி ஸத்யம்ஜ்ஞாநமநந்தம்ப்ரஹ்ம

(இ.ள்.):- பிரும்மத்தை (சிவத்தை) யறிந்தவன் பிரும்ம (சிவ) மாகின்றான், சத்தியமாயும், ஞானமாயும், அனந்தமாயும் உள்ளது பிரும்மம்.

**திருமந்திரம்**

சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந்தத்தே
துவமார் துரியஞ் சொருபம தாமே.

என்பதாதி மறைமொழிகளால் இந்நிலையே பிரதிபாதிக்கப் பட்டுளது. இத்தகைய நிலைமையிலிலேயே தனைப்பற்றியிருந்த சச்சிதாநந்தம் தோற்ற முற்றுச் சிவமாவது. சிவத்திற்குத் துக்கம்

என்பதே அணுகா ஆதலின், சித்துவைப் பெற்ற ஞானிக்கும் துக்கம் அணுகாது என்பதாம்.

**கட வல்லியுநிடதம்**

ஸூர்யோயதாஸர்வலோகஸ்ய சக்ஷுர்நலிப்யதேசாக்ஷு ஷைர்பாஹ்யதோஷை:

*(இ-ள்.) : ஸருவ பூதங்களுக்கும் அந்தராத்மா ஆயினும் ஸருவ பூதங்களின் குற்றங்களோடு சம்பந்திப்பதில்லை யென்பதற்கு மட்டும் இங்கு உதாரணம் கூறப்பட்டதறிக.*

**அவதாரிகை**

*இங்ஙனம் ராமனைப் பார்த்து அகத்தியமா முனிவர் ஓ ராமனே, சீதையெனும் காந்தையை விட்டுப் பிரிந்து விட்டேன் நான் மிகவும் துக்கி என்கின்றனையே சீதையின் தேகத்தின் பிரிவாற்றாமையால் துக்கத்தை அனுபவிக்கின்றனையா? அல்லது சீதையின் ஆன்மாவின் பிரிவாற்றாமையா? என்று இருவித வினாவைக் கேட்பதுபோல மனதில் கருதிப் பின்னர் சீதையின் ஆன்மாவை விட்டுப் பிரிந்தது பற்றித் துக்கத்தை அனுபவிக் கின்றேன் என்பது குற்றம் என்பதைச் சென்ற சுலோகத்தால் நிரூபித்துஇனிச் சீதையின் தேகத்தைவிட்டுப் பிரிந்தது பற்றி துக்கியென்பதும் யுக்தமல்லவென்று நிரூபிக்கின்றார்.*

**தேஹோபிமலபிண்டோயம் முக்தஜீவோஜடாத்மக :**
**தஹ்யதேவஹ்நிநா காஷ்டைஸ்**
**ஶிவாத்யைர் பக்ஷ்யதேபிவா 09**

*(பொ-ரை) :- மலபிண்டமாயும் சடமாயும் உள்ள இத்தேக மானது சீவனை யிழந்து விடுமாயின் தீயால் கட்டைகளோடு கூட தகிக்கப்படுகின்றது. அல்லது நரி முதலியவைகளால் புசிக்கப்படு கின்றது.*

**திருவிளையாடல்**

நாய்நம தெனநரி நமதெனப்பிதா
தாய்தம தெனநமன் தனதெனப் பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோல்
ஆய்நம தெனப்படும் யாக்கை யாரதே.

என்றதனாற் காண்க.

**ததாபிநைவஜாநந்தி விரஹேதஸ்யகாவ்யதா**

*(பொ-ரை) :- மலையின் மாயும் சமாயும் நெருப்பிற்கானது நரி முதலியவைகளுக்கானது இரையாகிய தேகத்தை, அருகிலிருக்கப்பெறாது இறந்துவிட்டேன் என்று கூறித் துக்கிக்கின்றனையே யிஃது யுக்தமல்ல வென்று இங்குக் கூறியதாய் அறியற்பாலது.*

*அவதாரிகை : இங்ஙனம் ராமனைக் குறித்துக் கூறி இனி அஞ்ஞானிகளது அனுபவ மயக்கத்தைப் பொதுவாகக் கூறுகிறார்.*

**ஸுவர்ணகௌரீ தூர்வாயா தளவச்யாமளாபிவா**
**பீநோத்துங்கஸ்தநாபோக புக்நஸூக்ஷ்மாவலக்நகா 10**

*(பொ-ரை) :- பசும்பொன்நிறமுடையாளும் அல்லது அருகம்புல்லின் தளம்போல சாமள வர்ணமுடையவளும், பருத்தும் உயர்ந்துமுள்ளத் தனதடத்தால் வளைவுற்ற சிற்றிடையாளும்,*

**ப்ருஹந்நிதம்பஜகநா ரக்தபாதஸரோருஹா 11**

**ராகாசந்த்ரமுகீபிம் பப்ரதிபிம்பரதச்சதா**
**நீலேந்தீவரநீகாஶ நயநத்வயஶோபிதா 12**

*(பொ-ரை) :- பருத்த பின்னிடையாளும், சிவந்த பாதாரவிந்தத்தையுடையாளும், பூர்ண சந்திரன்போன்ற முகத்தினளும், கொவ்வைக்கனிக்கு நிகரான உதட்டையுடையாளும், நீலோத்பலத்திற்கு நிகரான கண்களால் விளங்குவோளும்,*

**மத்தகோகிலஸல்லாபா மத்தத்விரதகாமிநீ**
**கடாக்ஷைர நுக்ருஹ்ணாதி மாம்பஞ்சேஷுஶரோத்தமை: 13**

*(பொ-ரை) :- மதித்த குயிலினது போன்ற குரலுடையாளும், மதங்கொண்ட யானையினதுபோன்ற நடையாளும் ஆகிய இம்மங்கை என்னைச் சிறந்த மன்மத பாணங்களான பார்வைகளால் அநுக்கிரகிக்கின்றாள்.*

**இதியோமந்யதேமூட: ஸத்ய: பஞ்சேஷுஶாஸித:**
**தஸ்யாவிவேகம்வக்ஷ்யாமி ஶ்ருணுஷ்வாவஹிதோந்ருப 14**

(பொ-ரை) :- என்று மன்மதனால் ஏவப்பட்டு உடனே மூடனான யாதொருவன் எண்ணுகிறானோ அவனது அஞ்ஞானத்தைக் கூறுகின்றேன். ஓ அரசனே; சாவதானமாய்க் கேட்பாயாக.

**அவதாரிகை :** தேகம் சடமாதலின் அதைக் கண்டு மயக்கங் கொள்வதும் யுக்தமல்ல என்று கூறி இங்கு ஆன்மாவைக் குறித்து மயங்குவதும் உசிதமல்ல என்பதை ஏதுவுடன் நிரூபிக்கின்றார்.

**நசஸ்த்ரீநபுமாநேஷ வைசாயம்நபும்ஸக:**
**அர்த்த: புருமூஷ: பூர்ண: த்ரஷ்டாதேஹீ ஸஜீவந:** **15**

(பொ-ரை) :- இவ்வான்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல, அலியுமல்ல காணக்கூடிய உருவற்றவன், சரீரத்திலுள்ளவன், நிறைந்தவன், காண்போன், தேகதாதான்மியம் உடையவன், அவன் சீவிக்கச் செய்வோன்.

*இங்கு இவ்வான்மா ஆணுமல்ல பெண்ணுமல்ல அலியுமல்ல என்றதனால் ஆண், பெண், அலி யென்பது அங்கங்களை நோக்கி வந்தது ஆதலின் அவை தேகதருமமேயன்றி ஆன்ம தருமமல்ல என்றறிக.

**பிரமாணம் : சுவேதாசுவதரோபநிடதம்**

நசஸ்த்ரீநபுமாநேஷ நைவசாயம்நபும்ஸக:
யத்யச்சரீ ரமாதத்தேதேந தேநஸயுஜ்யதே.

**(இ-ள்.):-** இவன் ஆணுமல்ல, பெண்ணுமல்ல, அலியுமல்ல எவ்வெத் தேகமெடுப்பானோ அவ்வெத்தேகத்தோடு கூடுவோன் என்று கூறியது காண்க.

இனி அமூர்த்தன் நேரில் காணக்கூடிய உருவமுடையவன் அல்ல என்றதனால் உயிர் கூறப்படும் சேதனவுருவம் சூநியமல்ல வென்பதாமறிக.

**புருஷ:** தேகத்திலுள்ளவன் என்றதனால் தேகாதியைப் பிரவர்த்திக்கச் செய்கின்றவன், தேகம் சடமாதலின் தானே பிரவர்த்தியாது சேதனனாகிய ஆன்மாவாலேயே பிரவர்த்திக்க வேண்டும் என்பதறிக.

**பௌஷ்கராகமம்**

ப்ரவர்தமாநோதேஹா திஸ்சேதநாதிஷ்டி தஸ்ஸதா
ஸ்வத: ப்ரவ்ருத்திரஸ்ந்ய த்வாஜ்ஜகத்தத்வேகடாதிவத்
யஸ்துப்ரவர்தகஸ்ஸோய மாத்மேதிபரிபட்யதே

*(இ.ள்.):- "சேதனனால் அதிஷ்டிக்கப்பெற்றே எப்பொழுதும் தேகாதி பிரவர்த்திக்கின்றது. ஜகத்தத்துவத்தில் குடாதிபோல தானே பிரவிர்த்தி அற்றது ஆதலால் என்க. இதனைப் பிரவர்த்திக்கச் செய்வோன் எவனோ அவனே ஆன்மா எனப்படும்".*

*-என்பதாதி வாக்கியங் காண்க.*

*இனி பூர்ணன் என்றதனால் வியாபகன் என்பதறிக. அற்றேல்,*

வரலாக்ரஸதபாகஸ்ய ஸததாகல்பிதஸ்யச
பாகோஜீவஸ்ஸவிஜ்ஞேயஸ்ஸ சாநந்த்யாயகல்பதே

"மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிரம் ஆயினால்
ஆவாயின் கூறு நூறாயிரத் தொன்றே".

*என்ற உபநிடதம், திருமந்திரம் முதலிய முன்னூற்களில் சீவன் அணுவிலும் சிறிய பரிமாணம் உடையோன் என்றது அலலமோ வெனின் அல்லவென்க. சீவன் உண்மையில் வியாபகனே யாயினும் பாசத்தாற் கட்டுண்டு தேகத்தினிற் சிறைப்பட்டு அணுவாயினான்.*

**காமிகம்**

நித்யஜ்ஞாநமயோஹயேஷ: வ்ருத்திஜ்ஞாநஞ்சஸாஸ்வதம்
வ்யாபகோபிஸரீரேஸ்மிந் வர்ததேவ்யாபக: ப்ரபு:

*(இ.ள்.):- "இவன் நித்தியஞானமயன். வ்ருத்திஞானமும் சாச்வதமே இவன் வியாபகனாயினும் இச்சரீரத்தினில் அவ்வியாபகனாய் இருக்கின்றான்" என்று கூறிய பிரமாணங்களைக் கண்டுதெளிக.*

*இனிக் காண்போன் என்றதனால் இஃதறிக. அதாவது காண்பன இந்திரியங்களாயினும் அவ்விந்திரியங்களும் தானே காண்பன வல்ல மற்று இவ்வான்மாவாலேயே காண்பனவாம்.*

**கடவல்லியுபநிடதம்**

யேநரூபம்ரஸம்கம்தம் ஶப்தாம்ஸபர்ஶாம்ஶ்சமைதுநாந்
பதேநைவவிஜாநாதி.

*(இ-ள்.) : எதனால் உருவத்தையும் ரஸம் கந்தம் சப்தம் ஸ்பரிசம் சேர்க்கை இவைகளையும் எவனால் அறிகின்றானோ.*

**காமிகம்**

அஹமேவசபஶ்யாமி நஸயாமிசநாந்யதா
நஹயேததிந்த்ரியா த்மத்வே கதஞ்சிதுபபத்யதே.

*(இ-ள்.) : யானே காண்கின்றேன், ரஸிக்கின்றேன் மற்றது அல்ல இஃது இந்திரியம் ஆன்மாவெனின் எவ்வாற்றானும் இயையாது.*

*- என்பதாதி பிரமாணங்களால் அறிக. அற்றேல் மனமே இந்திரியங்களை அறியச் செய்கின்றது ஆன்மாவல்ல என்பதே ஒவ்வுமெனின் அல்ல. மனமும் சடமாதலின் அதனையும் ஏவுவோன் மற்றொருவன் இருக்கவேண்டும் அவனே சீவன். மனம் சடமானமையால் அறிகின்றதல்ல. ஆன்ம சம்பந்தத்தாலேயே அறிய வேண்டியதாம். இதனை,*

**சிவஞானபோதம்**

ஆத்மாந்த: கரணாதந்யோ ப்யந்விதோமந்த்ரிபூபவத்

*(இ.ள்.):-ஆன்மா மனதிற்கு அந்நியனாயினும் மந்திரியும் அரசனும் போலக்கூடியுள்ளன.*

*இயற்கையில் ஆளமாளாத மந்திரி அரசன் ஆணைகொண்டு ஆள்வதுபோல் இங்கு ஆன்மாவால் மனமறிவதறிக. அற்றேல் ஆன்மாவாலேயே மனம் அறிகின்றது என்பது என்னை? ஆன்மாவே நேரில் மனதை அவ்வாறல் அறியக்கூடாதோவெனின் அல்ல. எங்ஙனம் எனின் சூரியனால் நேரில் தகிக்கமாளாத துரும்பை அச்சூரியவொளியின் சம்பந்தத்தால் சூரியகாந்தம் தகிப்பது போலெனக். இங்ஙனம் நேரில் அறியாது தனது அறிவால் மனாதியை அறியச்செய்வது பற்றி ஆன்மா காண்போன் என்றது.*

**காமிகம்**

''சிந்மாத்ரஸ்சேதயத்யந்யாந் ஸ்வயஞ்சேதயதேததா''

*(இ.ள்.):- சிந்மாத்திரன் இதரங்களை அதாவது மனாதிகளை அறியச் செய்கிறவன் அவனே அங்ஙனம் அறியச் செய்யப்படு கிறான்.*

**சிவஞானபோதம்**

''விதந்த்யக்ஷாணிபும்ஸார்தாந்''

*என்பதாதி வாக்கியங்களா லறிக. இவனே தேகாபிமானி யென்பது எல்லோருக்கும் அனுபவசித்தமாதலின் அதை யிங்கு விரிக்க வில்லை. இங்ஙனம் சீவனது உருவமாதலால், மங்கையை விட்டுப்பிரிந்து அனுபவிக்கின்றதாய்க் கூறும் துக்கத்திற்கு ஏதுவானது சீதையின் ஆன்மாவை விட்டுப் பிரிந்தது என்பது யுக்தமல்ல என்று கூறினார்.*

*அவதாரிகை : இனித் தேகத்தைப்பற்றி நினைத்துத் துக்கிக் கின்றேன் என்பதும் யுக்தமல்ல என்பதை யுக்தியுடன் நிரூபிக்கின்றார்.*

**யாதந்வங்கீம்ருதுர்பாலா மலபிண்டாத்மிகாஜடா**
**ஸாநபஸ்யதியத்கிஞ்சிந்ந ஸ்ருணோதிநஜிக்ரதி 16**

*(பொ.ரை.):- மெல்லியள் என்றும், அழகியவள் என்றும், சிறுமியென்றும் எம்மங்கை கூறப்படுகின்றாளோ, மலபிண்ட மாயும், சடமாயும் உள்ள, தேகவுருவான அவள் பார்ப்பதுமில்லை கேட்பதுமில்லை முகருவதுமில்லை.*

**(பார்த்தல் கேட்டல் முகருதல் முதலிய தருமங்கள் ஆன்மாவுக்கே உளவாதலால் மலாகாரமாயும் ஜடமாயும்உள்ள தேகம் பார்ப்பது முதலிய தொழிலைச் செய்கின்றதென்று கூறுவதும் அதைக் கண்டு மயங்குவதும் தக்கதல்ல என்று கூறப்பட்டதா யறிக).*

**சர்மமாத்ரந்தநுந்தஸ்யாபுத்வா த்யக்ஷேஸ்வராகவ**
52 **யாப்ராணாததிகாஸைவஹந்ததேஸ்யாத்க்ருணாஸ்பதம் 17**

*(பொ.ரை.):- ஓ ராகவனே, அம்மங்கையின் தேகத்தைத் தோல்மாத்திரம் என்றறிந்து விரும்பாது தள்ளிவிடுவாயாக; எம்மங்கை பிராணனிலும் அதிகமோ, அந்தோ! அவளே உனக்குத் துக்க ஏதுவாம்.*

**ஜாயந்தேயதிபூதேப்ய: தேஹாஸ்தத்பாஞ்சபௌதிகா:**
**ஆத்மாயதேகலஸ்தேஷு பரிபூர்ணஸ்ஸநாதந: 18**

*(பொ-ரை) :- தேகங்கள் பூதங்களிலேயே உண்டாகின்றன வன்றோ, ஆதலால் பஞ்சபூதங்களின் விகாரங்களேயாம். ஆன்மா தேகசாக்ஷியும் பரிபூர்ணனும் ஸநாதனனுமாம்.*

*(இங்கு ஆன்மா தேகத்துள் நின்று மனதையே அறியச் செய்கின்றான். ஆதலால் சாக்ஷியென்று கூறப்பட்டது. பரிபூர்ணன் என்பது முன்னம் விளக்கப்பட்டது. ஸநாதனன் என்றதனாற் அனாதி என்றறிக.)*

**காகாந்தாதத்ரக : காந்த: ஸர்வஏவஸஹோதரா:**
**நிர்மிதாயாங்க்ருஹாவல்யாம் ததவச்சிந்நதாங்கதம். 19**

**நபஸ்தஸ்யரிந்துதக்தாயாம் நகாஞ்சித்க்ஷதிம்ருச்சதி**
**தத்வதாத்மாபிதேஹேஷு பரிபூர்ணஸ்ஸநாதந: 20**

*(பொ-ரை):- இஃது இங்ஙனமிருக்க, எவள் மனைவி, எவன் கணவன், எல்லோர்களும் ஸகோதரர்களே. வீடுகள் கட்டப்படுமாயின் அவைக்குள் அடங்கிய ஆகாயமானது அவ்வீடுகள் தறிக்கப்படின் ஓர்கெடுதியையும் எங்ஙனம் அடையாதோ, பரிபூர்ணனும் ஸநாதனனுமான ஆன்மாவும் தேகங்களில் அங்ஙனமேயாம்.*

*(இதனால் தோன்றுவதும் அழிவதும் தேகத்திற்கே யன்றி ஆன்மாவுக்கு அல்லவென்பது அறியவேண்டியது).*

**ஹந்யமாநேஷுதேஷ்வேவஸ்வயம்நைவவிஹந்யதே**
**ஹந்தாசேந்மந்யதேஹந்தும் ஹதஶ்சேந்மந்யதேஹதம் 21**

*(பொ-ரை) :- இங்ஙனம் தேகங்களே வதமடைவது. தான் வதமடைவதில்லை. வதம் செய்வோன் தான் மற்றொருவனைக் கொல்ல வேண்டுமென்று நினைக்கிறான். வதமடைவோன் தான்*

தொமனை கின்றதாக நினைக்கிறான் இவ்விருவர்களும் அறிகின்ற வர்கள் அல்ல. இவன் கொல்லுவதில்லை. கொல்லப்படுவது மில்லை. இக்காரணத்தால், ஓ அரசனே, அதிக துக்கத்தால் தவித்தலுக்கு ஏது யாதுளது.

*(குறிப்பு) : இங்கு அருவப் பொருளான ஆன்மாவை வதைக்க இயலாது. உருவப் பொருளான தேகங்களுக்கே வதை முதலியன என்பது உண்மையாய் இருக்க ஆன்மா வதை செய்வோனாகவும் ஆன்மாவே வதைக்கப்படுவோன் என்றும் நினைத்தல் அறிவின்மையால் நிகழ்ந்ததுவென விளக்கியது அறிக. இதனால் தேகாதிக்கு அந்நியமாய் ஆன்மாவேறு ஒன்றில்லை என்று கூறும், சார்வாகாதியர்களின் கொள்கை மறுக்கப்பட்டது.

**ஸ்வஸ்வரூபம்விதித்வேதம் து:கந்த்யக்த்வாஸுகீபவ 22**

(பொ-ரை) :- தன் ஸ்வரூபத்தையறிந்து இத்துக்கத்தை விடுத்துச் சுகம்பெறுவாயாக.

**பிரமாணம் : பைங்களோபநிடதம்**

''தஸ்மாத்ஸதாவிசாரயேஜ்ஜ கஜ்ஜீவபராத்மந:''

(இ.ள்.):- ஆதலால் எப்பொழுதும் சடம் சித் பரன்களை விசாரிக்க வேண்டும்.

**தரிசனோபநிடதம்**

''ஆத்மஸ்வரூபவிஜ்ஞாநா தஜ்ஞாநஸ்யபரிக்ஷய:''

(இ.ள்.):-ஆன்ம உருவத்தின் ஞானத்தால் அஞ்ஞானத்தின் தொலைவு.

**திருமந்திரம்**

''தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமற் றானே கெடுகின்றான்
தன்னை யறியும் அறிவை யறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானே''.

தன்னை யறிந்தக்கால் பாசங்களையும் பரனையும் அறியலாகும் ஆதலால் இங்ஙனம் கூறப்பட்டது.

**இராமர் வேண்டியது:**

**முநேதேஹஸ்யநோது:கம் நைவசேத்பரமாத்மந:** 23

**ஸீதாவியோகது:காக்நிர்மாம் பஸ்மீகுருதேகதம்**
**ஸதாநுபூயதேபோர்தஸ்ஸ நாஸ்தீதித்வயேரித:** 24

*(பொ-ரை) :- ஓ முனிவரே, துக்கமானது தேகத்திற்கல்ல. மற்றோவெனின் ஆன்மாவுக்கும் அல்லவெனின் சீதையைவிட்டுப் பிரிந்த துக்கமெனும் அக்கிநியானது என்னைக் கொளுத்து கின்றதேன்? எப்பொழுதும் யாதொரு விஷயமானது அனுபவிக்கப் பட்டு வருகின்றதோ அஃது இல்லையென்று தங்களால் கூறப்பட்டதே.*

குறிப்பு : *(இங்கு இராமன் முனிவரைப் பார்த்து எப்பொழுதும் அனுபவிக்கப்படும் துக்கத்தைத் தாங்கள் தேகத்திற்கும் அல்ல, ஆன்மாவிற்கும் அல்ல என்று அனுபவவிரோதமாய் உரைக் கின்றீர்களே? அதை நான் அங்கீகரிப்பது எவ்விதம் என்று ஆசங்கை கொண்டான் என்பதறிக).*

**ஜாயதாந்தத்ரவிஶ்வாஸ: கதம்மெமுநிபுங்கவ**
**அந்யோஸ்திநாஸ்திகோ போக்தாயேநஜந்து:ப்ரதப்யதே**
**ஸுகஸ்யவாபிது:கஸ்ய தத்ப்ரூஹிமுநிஸ்த்தம** 25

*(பொ-ரை) :- இவ்விஷயத்தில் எனக்கு எவ்விதம் நம்பிக்கையுண்டாகும். ஓ முனிவர்கோனே எதனால் சீவன் தவிக்கின்றானோ அத்துக்கத்தை அனுபவிக்கின்றவன் ஒருவன் இருக்கவேண்டும். அல்லவெனின்; வேறு எவன் சுகதுக்கத்திற்கு ஏதுவாம். ஓ முனிவரே, அதனையுரைக்கவேண்டும்.*

*(இங்கு இராமன் முனிவரை நோக்கித் துக்கியென்ற அனுபவத்திற்கேது யாதென்று வினவினார் என்றறிக.)*

**அகஸ்தியர் விடை சொல்கிறார்.**

**துர்ஜ்ஞேயாஶாம்பவீமாயா யயாஸம்மோஹ்யதேஜகத்.** 26

*(பொ-ரை) :- அறியவரியதும் சம்பு ஸம்பந்தமுமாகிய மாயேயே ஏதுவாம். எந்தமாயையால் சீவர்கள் பிரமிக்கின்றனரோ.*

(இங்குச் சம்புசம்பந்தமான என்றதனால் சம்புவுக்கு அடங்கிய என்பது அறிக).

**மாயாந்துப்ரக்ருதிம்வித்யா ந்மயிநந்துமஹேஸ்வரம்**
**அஸ்யாவயவபூதேந வ்யாப்தம்ஸர்வமிதம்ஜகத். 27**

(பொ-ரை) :- மாயையையோவெனின், ப்ரகிருதி (முதற் காரணம்) என்று அறிக. மாயையை வசப்படுத்தியோனை, மஹேச்சுரன் என்றறிக. இவனது, அவயவமாய் இருப்பவனால், இச்செகமெலாம், வியாபிக்கப்பட்டுள்ளது.

**ஸத்யஜ்ஞாநாத்மகோநந்தோ விபுராத்மாமஹேச்வர:**
**தஸ்யைவாம்சோஜீவலோகே ப்ராணிநாம்ஹ்ருதயேஸ்தித: 28**

(பொ-ரை) :- ஸத்தியஞானவடிவனும், தேசகால வரையற்றவனும், வியாபகனுமாயுள்ள ஆன்மாவே மஹேச்வரன் ஆவான். அவனுடைய அம்சமே ஜீவலோகத்தில் பிராணிகளுடைய இருதயத்தில் உள்ளவன்.

குறிப்பு : (முந்திய சுலோகத்தில் சம்புக்கு அடங்கியதே மாயையென்று கூறிய பாசத்தினைத் துலைக்க வேண்டுமாயின் அதை அடக்கி ஆளுவோனான சிவபெருமானது சொரூபம் விளங்க வேண்டும், ஆதலின் அவன் இலக்கணத்தைச் சத்தியஞானானந்த என்பதாதியால் கூறிப் பின்னர் ஆன்மாவின் இலக்கணத்தையும், அவனம்சமே என்பதாதியால் கூறினார்).

பரமான்மா வியாபகச்சித்தாதல் போல ஆன்மா ஏகதேசச் சித்தாய் விளங்கலின் சாதி ஒருமைப்பற்றி அம்சமெனவும், பரமான்மா ஆன்மாவினிடத்து அத்துவிதம் உற்றிருத்தலின் பிராணிகள் இருதயத்தில் உள்ளவனென்றும் கூறினார்.

**பிரமாணம் - தாயுமானவர் பாடல்**

"அப்பொருளும் ஆன்மாவும் ஆரணநூல் சொன்னபடி
தப்பிலாச் சித்தொன்றாஞ் சாதியினால் எப்படியுந்
தேரிற்றுவிதஞ் சிவாகமமே சொல்லு நிட்டை
யாரு மிடத்துஅத்து விதமாம்." - எனக் காண்க.

**விஸ்புலிங்காயதாவஹ்நேர்ஜாயந்தேகாஷ்டயோகத:**
**அநாதிகர்மஸம்பத்தா ஸ்தத்வதம்சாமஹேசிது: 29**

*(பொ-ரை) :- எங்ஙனம், கட்டையின் ஸம்பந்தத்தால், நெருப்பினின்று தணற்பொறிகள் உண்டாகின்றனவோ, அங்ஙனமே அநாதி கருமங்களிற் பொருந்தியவர்களும், மகேச்வரனது அம்சங்களாயும் உள்ளவர்கள் சீவர்கள்.*

**பிரமாணம் : பிருகதாருண்ணியம்.**

''யதாக்நேர்விஸ்புலிங்காவ்யுச்சரந்தி ஏவமேவாஸ்மாதாத்மந:''

**அநாதிவாஸநாயுக்தா: க்ஷேத்ரஜ்ஞா இதிதேஸ்ம்ருதா:**
**மநோபுத்திரஹங்கார ச்சித்தம்சேதிசதுஷ்டயம் 30**

*(பொ-ரை):- அனாதி வாசனை உடையவர்களான அச்சீவர்கள் க்ஷேத்திரஞ்ஞர்கள் என்று கூறப்படுவார்கள். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என நான்குளது.*

குறிப்பு : *(அனாதி வாஸனை உடையவர்கள் என்றதனால் வாஸனையால் வந்த பலத்தைப் புசிப்பவர்கள் என்பது அறிக. இனிச், சீவசொருபத்தையறியச், சாதனமான அந்தக்கரணத்தின் உருவத்தைக் கூறுகின்றனர், மனம் புத்தி என்பதாதியால்).*

**அந்த:கரணமித்யாஹு ஸ்தத்ரதேப்ரதிபிம்பிதா:**
**ஜீவத்வம்ப்ராப்நுயு:கர்ம பலபோக்தாரஏவதே 31**

*(பொ-ரை):- முற்குறிக்கப்பட்ட நான்கும் அந்தக்கரணம் என்று கூறப்படும். (அதனில் பிரதிபிம்பத்தவர்கள்) சீவத்துவத்தைப் பெறுவோர்கள். அவர்களே கருமபலத்தைப் புசிப்பவர்கள்.*

குறிப்பு : *(இங்கு பிரதிபிம்பத்தவர்கள் என்றதனால் எங்ஙனம் பிரதிபிம்பத்திற்கு ஏதுவான நீர் முதலிய பொருள்கள் நீங்கினால் பிரதிபிம்பம் துலைகின்றதோ, அங்ஙனமே சீவத்துவத்திற்கு ஏதுவான பாசம் நீங்கினால் சீவத்துவம் துலைகின்றது என்பதை இதனாலறிக.)*

**ததோவைஷயிகம்தேஷாம் ஸீகம்வாது:கமேவவா**
**தஏவபுஞ்ஜதேபோகா யதநேஸ்மின்சரீரகே 32**

*(பொ-ரை) :- ஆதலால் அவர்களே அவர்களது விஷய ஸம்பந்தமான சுகத்தையும் அல்லது துக்கத்தையும் புசிக்கவிடமான இச்சரீரத்தின்கண் அனுபவிக்கின்றார்கள்.*

**ஸ்தாவரம்ஜங்கமம்சேதி த்விவிதம்வபுருச்யதே**
**ஸ்தாவராஸ்தத்ரவருக்ஷாஸ்யு ஸ்ஸூக்ஷ்மாகுல்மலதாதய: 33**

*(பொ-ரை) :- சரீரமானது தாவரம் ஜங்கமம் என்று இருவகையாம். ஆண்டுத் தாவரங்கள் விருக்ஷங்கள் சூக்குமங் களான செடி கொடி முதலியன.*

**அண்டஜாஸ்வேதஜாஸ்தத்வ த்கர்பஜாஇதிஜங்கமா:**
**யோநிமந்யேப்ரபத்யந்தே சரீரத்வாயதேஹிந: 34**

**ஸ்தாணுமந்யேநுஸம்யந்தி யதாகர்மயதாச்ருதம்**
**ஸுக்யஹம்து: க்யஹஞ்சேதி ஜீவஏவாபிமந்யதே 35**

*(பொ-ரை):- ஜங்கமங்கள், அண்டஜங்கள் ஸ்வேதஜங்கள், கருப்பஜங்கள் என வழங்கப்படும் (தேவர்). இதர தேஹிகள் சரீரத்தைப் பெறுவதற்கெனக் கருப்பையை அடைகின்றனர். மற்றவர்கள் (அதாவது நரகிலிருந்து வருவோர்) கருமங்களுக்கும் சாத்திரங்களுக்கும் இணங்க (ஸ்தாவரம்) புல்பூண்டு செடி கொடி மரங்களாய் இருக்குந் தன்மையை அடைகின்றனர். யான் சுகி, யான் துக்கியென்று சீவனே அபிமானிக்கின்றவன்.*

**நிர்லேபோபிபரம்ஜ்யோதி ர்மோஹிதச்சம்புமாயயா**

*(பொ-ரை) :- நிர்லேபனும், பரஞ்சோதிஆவோனும் ஆயினும், சம்புமாயையால் மயங்குவோனாகின்றான்.*

**காம:க்ரோதஸ்ததாலோபோ மதோமா த்ஸர்யமேவச 36**
**மோஹச்சேத்யரிஷட்வர்க மஹங்காரகதம்விது:**

*(பொ-ரை) :- காமம், குரோதம், லோபம், மதம், மாச்சரியம், மோஹம் எனும் இவ்வாறு பகைகளும் ஆங்காரத்தினில் அடங்கும் எனப்படும்.*

**ஸஏவபத்யதேஜீவ ஸ்வப்நஜாக்ரதவஸ்தயோ: 37**

**ஸுஷுப்தெளததபாவாச்ச ஜீவச்சங்கரதாங்கத :**
**ஸஏவமாயயாஸ்ப்ருஷ்ட: காரணம்சுகது: கயோ: 38**

*(பொ-ரை) :- அச்சீவனே ஜாக்கிரம் ஸ்வப்நம் என்ற அவஸ்தைகளில் கிடந்து உழலுகின்றான். சுழுப்தியில் அந்தக் கரணம் ஒடுங்கி இருக்கின்றமையால் சீவன் சிவனாகின்றான் அதாவது சுகமடைகின்றான். பின்னரும் அவனே மாயாகரூபத்தால் சுகதுக்கம்பெற்று அல்லல் படுகின்றான்.*

*குறிப்பு : (இங்கு மூலத்தில்,சுஷுப்திகாலத்தினில் சங்கரத் துவத்தை அடைகின்றான் என்று கூறியுளது ஆயினும்; சங்கரத்துவம் என்றதற்குச் சுகத்தை அனுபவிக்குந் தன்மை என்றே பொருள் கொள்ள வேண்டியதே உசிதம். என்னை? தத்துவ காரியங்கள் பெரும்பாலும் இல்லையாகலின் என்க.)*

**பிரமாணம்: கைவல்லியோபநிடதம்**

**ஸுஷுப்திகாலேசகலேவிலீநே தமோபிபூதஸ்ஸு கரூபமேதி.**

*(இ-ள்): சுஷுப்தி காலத்தினில் எல்லாம் ஒடுங்கவே தமசினால் ஆக்ரமிக்கப்பட்டுச் சுகரூபன் ஆகின்றான்.*

**ஶுக்தெளரஜதவத்விச்வம் மாயயாத்ருச்யதேசிவே**
**ததோவிவேகஜ்ஞாநேந நகோப்யத்ராஸ்திது:கபாக். 39**

*குறிப்பு :- இப்பியில் வெள்ளிபோல எல்லாப் பிரபஞ்சமும் சிவனிடம் மாயையால் காணப்படுகின்றது. ஆதலால் ஈண்டு விசாரித்தறியுங்கால், துக்கமடைவோன் எவனுமில்லை.*

*குறிப்பு : (இப்பியில் வெள்ளி போல் என்றதனால், இப்பியை அறியாதகாலத்து வெள்ளி தோன்றுவதும், இப்பி தோன்றிய காலத்து வெள்ளி தோன்றாததும் எங்ஙனமோ அதுபோல, சிவஞானம் இராதகாலத்து உலகு தோன்றும், சிவஞான காலத்தில் உலகு தோன்றாது என்பதறிக. சிவனிடம் என்றதனால் சிவனே ஸர்வஆதாரன் என்பதும், மாயையால் என்றதனால், மாயையே உலகாயப் பரிணமிக்கின்றது என்பதும் அறிக).*

**இராமர் வேண்டியது :**

**ததோவிரமது: காத்வம் கிம்முதாபரிதப்யஸே**
**முநேஸர்வமிதம்ஸத்யம் யந்மதக்ரேத்வயோரிதம். 40**

(பொ-ரை) :- ஆதலால் நீ துக்கத்தினின்று ஒழிவடைவாயாக. ஏன் வியர்த்தமாய்த் தவிக்கின்றனை? இராமன் ஓ முனிவரே, என்னிடம் தங்களால் கூறப்பட்டதெல்லாம் உண்மையே.

**ததாபிநஜஹாத்யேத த்ப்ராரப்தாத்ருஷ்டமுல்பணம்**
**மத்தம்குர்யாத்யதாமத்யம் நஷ்டாவித்யமபித்விஜம். 41**

(பொ-ரை):- அங்ஙனமாயினும் இந்தத் துக்கமானது விடவில்லை. கடுமையான ப்ராரப்த கருமமானது அஞ்ஞானம் நீங்கிய அந்தணனையும் எவ்வாறு கள்ளானது மதிக்கச்செய்யுமோ அவ்வாறென்க.

குறிப்பு : (இங்குப் பிராரப்தமானது என்றதனால் - அனுபவிக்கத் தொடங்கியவினை, அதாவது ஸஞ்சிதம், ப்ராரப்தம், ஆகாமியம் என்பதான முவ்வகைக்கருமத்தினுள் ஏற்கனவே சம்பாதித்துப் பரிபாகம் இல்லாமல் அப்பரிபாகத்தை எதிர்பார்த்துக் கொண்டு அந்தக்கரணத்தில் பொருந்தி வாஸநாமயமாய் நிற்கும் கருமமே சஞ்சிதமாம். இச்சஞ்சிதகருமங்களுள் பரிபாகப்பட்டு அனுபவிக்க எழுந்த கருமமே பிராரப்தம். அனுபவிக்க வந்த இச்சென்மத்தில் இனிச் செய்யுங்கருமமே ஆகாமியமாம்).

இதனுள் பிராரப்தத்தைத் தடுக்கமாளாது. அது ஞானத்தினாற் றுலையாது. இதற்கு உதாரணம் ஞானியாயினும் கட்குடித்தால் அவனுக்கு எங்ஙனம் மதத்தை உண்டாக்குமோ அங்ஙனமே பிராரப்தமும் வருத்துவதாம் ஞானத்தினாற் றுலையாது என்றறிக. இதையேபின் நிரூபிக்கின்றனர்.

**தத்வத்ப்ராரப்தபோகோபி நஜஹாதிவிவேகிநம்**
**தத:கிம்பஹுநோக்தேந ப்ராரப்தம்ஸசிவஸ்ம்ருத:. 42**

(பொ-ரை) :- அதுபோலப் பிராரப்த கருமமானது விவேகியைக் கூடவிடாது. ஆதலின் மிக்கக்கூறுவதால் யாதுபயன் பிராரப்தமானது சிவன் என்று எண்ணப்பட்டது. இங்குச் சிவன் என்று கூறியது ஔபசாரிகவபேதம் என்பதறிக. சிவபெருமானைத் தடுப்பது எவராலும் மாளாதுபோல பிராரப்தத்தையும் தடுக்கமாளாது ஆதலால் அங்ஙனம் கூறப்பட்டது.

*குறிப்பு: (சிவபெருமான் என்ற சொல்லுக்கு முற்கூறிய ஒப்புமை ஸம்பந்தத்தால் கெளணவிருத்தி யிலக்கணையால் வெலியுடையது என்று ஆகுபெயர்கொள்க).

**பாததேமாம்திவாராத்ர மகங்காரோபிதாத்ருச:**
**அத்யந்தபீடிதோஜீவ ஸ்தூலதேகம்விமுஞ்சதி** **43**

*(பொ-ரை) :-* அங்ஙனமான அகங்காரமும் என்னை இரவும் பகலும் தொந்தரவு செய்கின்றது, மிக்கத்தொந்தரவு அடைவானாகில் சீவன் தூலதேகத்தை விடுகின்றான்.

**தஸ்மாஜ்ஜீவாப்தயேமஹயம் உபாய:க்ரியதாம்த்வயா** **44**

*(பொ-ரை) :-* ஆகையால் (நான்) சீவிப்பதின் பொருட்டு எனக்கொரு உபாயமானது உம்மால் சொல்லத்தக்கது.

*(இரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.)*





**கல்யாணசுந்தர மூர்த்தி**

# மூன்றாவது அத்தியாயம்

*விரசா தீட்சை - மூன்றாம் அத்தியாயத்தில் அகத்தியர் ஸ்ரீ இராமருக்கு விரசா தீட்சையாய் மகாபாசுபதவிரதத்தை உபதேசிக்கின்றார். ஸ்ரீ இராமரை சிவச்சிந்தனையாக இருக்குமாறு கூறுகின்றார். ஸ்ரீ இராமரின் எதிரியான இராவணனின் பலம் மற்றும் காலதேச சூழ்நிலைகள், சிவ அனுக்கிரகம் பற்றி குறிப்பிடப்படுகின்றது.*

**அகத்தியர் விடை**

**நக்ருஹணாதிவச:பத்யம் காமக்ரோதாதிபீடித:**
**ஹிதம்நரோசதேதஸ்ய முமூர்ஷோரிவபேஷஜம் 01**

*(பொழிப்புரை):-* காமக்குரோதம் முதலியவைகளால் பீடையடைந்தவன், இதமான சொல்லைக் கேட்கிறதில்லை. ஆயுள் முடிந்தவனுக்கு ஔஷதம் யுக்தமாய்த் தோன்றாததுபோல் அவனுக்கும் இதம் ருசிக்காது.

குறிப்பு: *(சென்ற அத்தியாயத்தின் இறுதியில், துக்கம் அடையாமல் இருப்பதற்கு யாதாவது கூறவேண்டும் என்ற இராமரது வசனத்திற்கு இச்சுலோகத்தினால் பதிலுரைக்கின்றார். ஓ ராமா! நீ துக்கமடையாதிருக்க வேண்டுமாயின் துக்க ஏதுக்களான காமக்குரோதாதிகளாய அறுபகையும் துலைக்கவேண்டும்; ஆதலால், அங்ஙனம் துலைப்பதற்குறிய தத்துவத்தை உபதேசித்தேன், அதுஉனக்கு உசிதமாய்ப் புலப்படவில்லை என்பதைப் பொதுவாய்க் கூறி அதற்கு ஓர் உதாரணமும் இச்சுலோகத்திலேயே கூறப்பட்டது.)*

**மத்யேசமுத்ரம்யாநீதா ஸீதாதைத்யேநமாயிநா**
**ஆயாஸ்யதிநரச்ரேஷ்ட ஸாகதம்தவஸந்நிதிம் 02**

*(பொ-ரை) :-* ஓ நரச்ரேஷ்டனே, மாயாவியான அரக்கனால் சமுத்திரநடுவில் எந்தச்சீதை கொண்டு போகப்பட்டனளோ அச்சீதை உன் சந்நிதிக்கு எவ்விதம் வருவாள்?.

குறிப்பு : *(சீதை இராமனால் கிரகிக்கப்படுபவள் என்பது அகஸ்தியர் அறிந்தும் இராவணனுடைய பராக்கிரமத்தைக் குறிப்பால் உணர்த்துகின்றார்.)*

**பத்யந்தேதேவதாஸ்ஸர்வா த்வாரிமர்க்கடயூதவத்**
**கிஞ்சசாமரதாரிண்யோ யஸ்யசந்திசுராங்கநா: 03**

*(பொ-ரை) :- எந்த இராவணனது வாசலில் எல்லா தேவர்களும் குரங்குக்கூட்டம்போல கட்டுப்பட்டு நிற்கின்றார் களோ, அன்றியும் எந்த அரக்கனுக்குத் தேவமங்கையர்கள் எல்லோரும் சாமரம் வீசுகின்றனரோ.*

*குறிப்பு : (முந்திய சுலோகத்தில், சீதை எப்படி உன்னிடம் வரக்கூடும், என்று கூறினார். அங்ஙனம் அவள் வரமாளாது என்பதற்கு ஏதுக்களை இச்சுலோகம் தொடங்கி நான்கு சுலோகங்களால் கூறுகின்றார். அவ்ஏதுக்களோ எனின், மிக்க பராக்கிரமம் உள்ள அவ்வரக்கனால் கொண்டு போகப்பட்ட சீதையைக் கொண்டு வர வேண்டுமானால் அவ்வரக்கனை வென்றால் தான் முடியும் அவனையோவெல்ல மாளாது என்று கூறத் தொடங்கினார்.*

**புங்க்தேத்ரிலோகீமகிலாம் யஶ்ஶம்புவரதர்ப்பித:**
**நிஷ்கண்டகம்தஸ்யஜய: கதம்தவபவிஷ்யதி 04**

*(பொ-ரை) :- எவன் சிவபெருமானது வரத்தினால் கர்வமடைந்தவனாய் மூவுலகனைத்தும் இடையூறற்றுப் புசிக்கின்றனோ அவனை நீ எவ்விதம் செயிக்கக்கூடும்?*

**இந்திரஜிந்நாமபுத்ரோய ஸ்தஸ்யாஸ்திசவரோத்தத:**
**தஸ்யாக்ரேஸங்கரேதேவா: பஹுவாரம்பலாயிதா: 05**

*(பொ-ரை):- எவன் சிவபெருமானது வரங்களால் மதித்தவனுமாய் இந்திரசித்தென்று பிரசித்தி பெற்றவனுமாய் இருக்கின்றானோ, அவன் ராவணனுக்குப் புதல்வன். அவனெதிரில் யுத்தத்தில் நிற்கமாளாது தேவர்களும் பன்முறை பயந்தோடி னார்கள்.*

**கும்பகர்ணாஹ்வயோப்ராதா யஸ்யாஸ்திஸுரஸூதந:**
**அந்யோதிவ்யாஸ்த்ரஸம்யுக்த: சிரஞ்சீவீவிபீஷண: 06**

*(பொ-ரை):- தேவருக்கு அந்தகனாய்க் கும்பகர்ணனென்று பெயருள்ளவன் எவனுக்குச் சகோதரனோ, எவனுக்கு மற்றொரு*

*சகோதரன் திவ்வியஅஸ்திரங்களை யுடையோனும் வெகுகாலம் சீவிப்போனுமான விபீஷணன் என்பவனோ, (அந்தகன்-யமன்)*

**துர்கம்யஸ்யாஸ்திலங்காக்யம் துர்ஜயம்தேவதானவை:**
**சதுரங்கம்பலம்யஸ்ய வர்த்ததேகோடிஸங்க்யயா. 07**

*(பொ-ரை):- எவனுக்கு எவராலும் போகக்கூடாததான லங்கையென்ற நகரம் உளதோ, எவனுக்குத் தேவ அசுரர்களால் செயிக்கக்கூடாததும், கோடிக்கணக்காய் உள்ள நால்வகைச் சைன்னியம் உளதோ,*

**ஏகாகிநாத்வயாஜேய: ஸகதம்ரகுநந்தந**
**ஆகாம்க்ஷதேகரேதர்த்தும் பாலச்சந்த்ரமஸம்யதா**
**ததாத்வம்காமமோஹேந ஜயம்தஸ்யாபிவாம்சஸி 08**

*(பொ-ரை):- ஓ ரகுநந்தனா, அவ்விராவணன் ஒருவனாகிய உன்னால் எப்படி செயிக்கப்படுவான், குழந்தை சந்திரனைப் பிடித்துக் கையில் வைத்துக் கொள்ள எவ்விதம் விரும்புகின்றதோ அவ்விதமே நீ காமமயக்கத்தால் அவ்விராவணனை செயிக்க விரும்புகின்றாய்.*

**இராமன் வினா**

**க்ஷத்ரியோஹம்முநிச்ரேஷ்ட பார்யாமேரக்ஷக்ஷஸாஹ்ருதா**
**யதிதம்நநிஹந்ம்யாசு ஜீவநேமேஸ்திகிம்பலம் 09**

*(பொ-ரை):- ஓ முனிவரரே, யான் க்ஷத்திரியன் எனது மனைவி அரக்கனால் அபகரிக்கப்பட்டனள் அவ்வரக்கனைச் சீக்கிரமாய்க் கொல்லாவிடில் சீவிப்பதில் எனக்கு யாது பயன்?*

**அதஸ்தேதத்வபோதேந நமேகிஞ்சித்ப்ரயோஜநம் 10**

*(பொ-ரை):- ஆதலால் தங்களது தத்துவ உபதேசத்தால் எனக்கு ஒரு பயனுமில்லை.*

**காமக்ரோதாதயஸ்ஸர்வே தஹ்யதேதைஸ்தநுர்மம**
**அகங்காரோபிமேநித்யம்ஜீவநம்ஹந்துமுத்யத: 11**

*(பொ-ரை):- காமம் குரோதம் முதலியவைகள் எல்லாம் என்னிடம் இருக்கின்றன. அவைகளால் எனது தேகம் கொளுத்தப்*

படுகின்றது. அகங்காரமும் எனது சீவனைக் கொல்லுவதற்கு எப்பொழுதும் தயாராகவே இருக்கின்றது.

**ஹ்ருதாயாம்நிஜகாந்தாயாம் சத்ருணாவமதஸ்யவா**
**யஸ்யதத்வபுபுத்யாஸ்யாத்ஸலோகேபுருஷாதம: 12**

*(பொ-ரை):- தனது மனைவி அபகரிக்கப்பட்டிருக்கும் பொழுது அல்லது சத்துருவால் அவமானம் அடைந்தவனாய் இருக்கும் பொழுதாவது எவனுக்குத் தத்துவ உபதேசம்பெற அல்லது தத்துவ ஆராய்ச்சி செய்யவேண்டும் என்ற விருப்பம் உண்டாகின்றதோ உலகத்தில் அவன் புருஷருக்குள் அதமனே யாவான்.*

**தஸ்மாத்தஸ்யவதோபாயம் லங்கயித்வாம்புதிம்முநே**
**ப்ரூஹிமேமுநிசார்தூல த்வத்தோநாநயோஸ்திமேகுரு: 13**

*(பொ-ரை):- ஓ முநிவரே, ஆதலால் கடலைத்தாண்டி யுத்தத்தில் அவனைக் கொல்லுவதில் எனக்கு உபாயத்தைக் கூறுங்கள். முனிவருட் சிறந்தவரே, தங்களைத் தவிர எனக்கு வேறு குருஇல்லை.*

**அகஸ்தியர் விடை:**

**அகஸ்த்ய உவாச ஏவம்சேச்சரணம்யாஹி பார்வதீபதிமவ்யயம்**
**ஸசேத்ப்ரஸந்நோபகவான் வாஞ்சிதார்த்தம்ப்ரதாஸ்யதி 14**

*(பொ-ரை):- இங்ஙனமாயின், அவ்வியயரான பரசிவத்தைச் சரணமடைவாயாக, அந்த பகவான் பிரஸந்நரானால் விரும்பிய பொருளைக் கொடுப்பார்.*

**தேவைரஜேயச்சக்ராத்யை ர்ஹரிணாப்ருஹ்மணாபிவா**
**ஸதேவத்ய: கதம்வாஸ்து சங்கராநுக்ரஹம்விநா 15**

*(பொ-ரை):- இந்திராதிகளான தேவர்களாலும், பிரம்மனாலும், விஷ்ணுவினாலும் செயிக்கக்கூடாதவனான அவ்விராவணன் சங்கரனது அருளின்றி எங்ஙனம்? உன்னால் கொல்லப்படுவோன் ஆவான்.*

**அதஸ்த்வாம்தீக்ஷயிஷ்யாமி விரஜாகமமாச்ரித :**
**தேநமார்க்கேணமர்த்யத்வம் ஹித்வாதேஜோமயோபவ 16**

(பொ-ரை):- அவ்விறைவனது அருள்வேண்டும் ஆதலால் விரசாக்கிரமத்தைக் கொண்டு உனக்குத் தீக்ஷைசெய்து வைக்கின்றேன் அம்முறையால் மனிதத்தன்மையைவிட்டு திவ்வியதேகம்உடையோன் ஆவாய்.

குறிப்பு : (சிவபெருமான் திருவருளினை அடைய வேண்டுமாயின் தீட்சை அத்தியாவசியம் ஆகலின் இராமனைத் தீட்சை செய்து கொள்ளும்படி அகத்தியர் கூறினர்).

**தேனஹத்வாரணேசத்ரூன் ஸர்வான்காமாநவாப்ஸ்வஸி ஸூதேஉவாச:**

**அதப்ரணம்யராமஸ்தம் தண்டவந்முனிஸத்தமம்**
**உவாசது:க்கநிர்முக்த: ப்ரஹ்ருஷ்டேநாந்தராத்மநா 17**

(பொ-ரை):- அவனது அருளால் பகைவர்களை யுத்தத்தில் கொன்று விருப்பம் எல்லாவற்றையும் பெற்றிடுவாயாக. பிறகு இராமன் துக்கம் நீங்கினவனாய் அம்முனிவரரை ஸாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, களித்த மனதை உடையோனாய்ச் சொல்லியதாவது,

**இராமர் வேண்டியது:**

**க்ருதார்த்தோஹம்முநேஜாதோ வாஞ்சிதார்த்தோமமாகத:**
**பீதாம்புதி: ப்ரஸந்நஸ்த்வம் யதிமேகிமுதுர்லபம்**
**அதஸ்த்வம்விரஜாம்தீக்ஷாம் ப்ரூஹிமேமுநிஸத்தம 19**

(பொ-ரை):- ஒ முனிவரே, யான் கிருதார்த்தனானேன். விரும்பியபொருள் கிடைத்தது. கடல் உண்டவரான தாங்கள் எனக்குப் பிரசன்னரானால் கிடைக்காதது யாதுளது, ஓ முனிவரரே, ஆதலால் விரசாதீக்ஷையைக் கூறுங்கள்.

**அகஸ்தியர் விடை**

**சுக்லபக்ஷேசதுர்தச்யா மஷ்டம்யாம்வாவிசேஷத:**
**ஏகாதச்யாம்சோமவாரே ஆர்த்ராயாம்வாஸமாரபேத் 20**

(பொ-ரை):- இங்கு முனிவர் விரசாதீக்ஷையின் காலத்தைக் கூறுகின்றார். வளர்பிறையில் சதுர்த்தசியில் அல்லது அஷ்டமி

யிலாவது ஏகாதசியிலாவது திங்கட் கிழமையில் அங்ஙனம் திருவாதிரை நட்சத்திரத்தில் ஆரம்பிக்கவேண்டும்.

**யம்வாமமாஹுர்யம்ருத்ரம் சாச்வதம்பரமேச்வரம்**
**பராத்பரதரம்சாஹு: பராத்பரதரம்சிவம் 21**

**(பொ-ரை):-** முன்னர் காலத்தைக்கூறி, இங்குத் தேவதை தியானக்கிரமத்தைக் கூறுகின்றார். மேலானவருக்கும் மேற்பட்டவரான எந்த சிவபெருமானை அழகிற் சிறந்தவன் என்றும், பிறப்பின் துக்கத்தைத் துலையச் செய்வோன் என்றும், எக்காலத்தும் உள்ளவனென்றும், பரமேச்சுரன் மும்மூர்த்திகளுக்கும் இறைவனென்றும் (மாயையிலும்) அவ்வியத்தத்திலும் பரனென்றும் கூறுகின்றார்களோ.

**ப்ரஹ்மணோஜநகம்விஷ்ணோர்வஹ்நேர்வாயோஸ்ஸதாசிவம்**
**த்யாத்வாக்நிநாவஸத்யாக்நிம் விசோத்யசப்ருதக்ப்ருதக் 22**

**(பொ-ரை):-** பிரம்ம விஷ்ணு அக்நி வாயுக்களை உண்டாக்கி யோனான ஸதாசிவனைத் தியானித்து அக்நியால் ஆவசத்யமென்ற அக்நியைத் தனித்துத் தனியே சோதித்து,

**குறிப்பு :** (அக்நியால் ஆவஸத்யாக்நியை என்றதினால், ஞான வைராக்கிய ஐசுவரிய உருவமான கார்ஹபத்திய, ஆவநிய, தக்ஷிணாக்கிநி என்ற திரேதாக்நியால், ஆவசத்திய அக்நியை என்றதினால் "அவஸத" என்பதற்குத் தேகமென்று பொருள் கொள்க. அங்கு அக்நிபோல பிரகாசிக்கின்றவன் ஆதலால் சீவனையே அக்நியாகக் கூறப்பட்டது. சீவனை இருபத்து நான்கு தத்துவங்களினின்றும் வேறு என விசாரித்து அறிந்து, 24 தத்துவங்களுக்கும் புறம்பேயுள்ளவன் சீவன் 25வது தத்துவமாவான் அவனிலும் புறம்பான 26ஆவது தத்துவத்தையுங் கடந்தவரே சிவபெருமான் ஆவார்.)

**பஞ்சபூதாநிஸம்யம்ய த்யாத்வாகுணவிதிக்ரமாத்**
**மாத்ரா: பஞ்சசதஸ்ரச்ச த்ரிமாத்ராத்விஸ்தத:பரம் 23**

**ஏகமாத்ரமமாத்ரம்ஹி த்வாதசாந்தவ்யவஸ்திதம்**
**ஸ்தித்யாஸ்தாப்யாம்ருதோ பூத்வா வ்ரதம்பாசுபதம்சரேத் 24**

(பொ-ரை):- ஐம்பூதங்களை அறிந்து, குணங்களது விதியின் முறைமையின்படி சிந்தித்து, ஐந்து மாத்திரைகளையும் நான்கு மாத்திரைகளையும், மும்மாத்திரைகளையும், இருமாத்திரை களையும், பிறகு ஒரு மாத்திரையும், மாத்திரையற்றதையும் துவாதசாந்தத்திலுள்ளவனையும் உற்பத்தியாதிக் கிரமத்தினால் சிந்தித்து, அமிருதனாய் இருந்து விரசாதீக்கை உருவமான பாசுபத விரதத்தைச் செய்வானாக.

*நுட்பம் : (ஐம்பூதங்களை = பிருதிவி-அப்பு-தேயு-வாயு ஆகாயங்களை அறிந்து, குணங்களின் முறைமையின்படி = சத்த பரிச ரூப ரச கந்தமெனும் குணங்களின் முறையின்படி, ஆகாயம் சத்தகுணமுடையது. வாயுக்குப் பரிசம், தேயுவுக்கு உருவம், அப்புவுக்கு இரஸம், பிருதிவிக்குக் கந்தம் என்றபடி சிந்தித்து, பிறகு ஐம்மாத்திரைகள் = பிரிதிவிக்குச் சத்த பரிச உருவ ரஸ கந்தம் என்ற ஐந்து குணங்களுளவாய், அங்ஙனமே ஜலத்திற்குக் கந்த நீங்கலாக மற்ற நான்கு குணங்களுளதாயும், தேயுவுக்குக் கந்தரசங்கள் நீங்கலாக மற்ற முக்குணங்களுளதாயும், வாயுவுக்குச் சத்தப்பரிசங்கள் உள்ளதாகவும், ஆகாயத்திற்குச் சுத்தமொன்றே யுளதாகவும் அறிந்து, மாத்திரையற்றதையும் = மாத்திரையற்றது மஹத்து அகங்காரமென்ற இருதத்துவங்களேயாம்.

இவைகளையும் அறிந்து, துவாதசாந்தத்திலுள்ளவனென்றால் = பரசிவம் என்று பொருள் கொள்க. எப்படியெனில் பூதங்கள் ஐந்து மாத்திரைகள் ஐந்து, மாத்திரையற்ற மஹத்தகங்காரங்கள் இரண்டு, ஆக இப்பன்னிரண்டுமே துவாதச என்று கூறப்படும், இவைகளுக்கு அந்தத்தில் அப்பாலுள்ளவன், சிவபெருமான் என்று பொருள் கொள்க, அல்லது துவாதசாந்தம் = யோகிகளால் தரிசிக்கப்படும் ஓர் இடம் அதாவது சிரசில் உள்ளது அந்த இடத்தில் இருப்பவனான சிவபெருமான் என்று பொருள் கொள்க.

உற்பத்திக் கிரமமாவது சிவபெருமானால் ஆகாயம் வாயு அக்நி ஜலம் மண் என்ற முறையே உற்பத்திகிரமமாம். இவ்விதம் சிந்தித்து, அமிருதனாய் நின்று [illegible]|| அக்நியெனது வாக்கிலுள்ளவன் வாக்கு இருதயத்தில், இருதயம் என்னிடத்தில், யான் அமிருதத்தில்,

அமிருதம் பிரும்ஹத்தினிடத்தில் = என்று மறைகூறியவாறு எல்லா வற்றையும் பரசிவத்தினிடம் ஒடுக்கியதனால் அமிருதனாய் நின்று பாசுபத விரதத்தைச் செய்தல் வேண்டுமெனப்பட்டது).

**இதம்வ்ரதம்பாசுபதம் கரிஷ்யாமிஸமாஸத:**
**ப்ராதரேவதுஸங்கல்பம் நிதாயாக்நிம்ஸ்வசாகயா 25**

**உபோஷிதச்சுசிஸ்நாத: சுக்லாம்பரதரஸ்வயம்**
**சுக்லயஜ்ஞோபவீதச்ச சுக்லமால்யானுலேபந: 26**

**ஜுஹுயாத்விரஜாமந்த்ரை: ப்ராணாபாநாதிபிஸ்ம்ருத:**
**அநுவாகாந்தமேகாக்ர ஸ்ஸமிதாஜ்யசரூந்பருதக். 27**

**ஆத்மந்யக்நீந்ஸமாரோப்ய யாதேஅக்நேதிமந்த்ரத:**
**பஸ்மாதாயாக்நிரித்யாத்யை: விம்ருஜ்யாங்கா**
**நிஸம்ஸ்ப்ருசேத் 28**

*(பொ-ரை):-முன்கூறிய பாசுபதவிரதத்தைச் சுருக்கமாய்ச் செய்கின்றேன். முதல்நாள் உபவாசமிருந்து ஆகாரமெடாது விடியற்காலத்தில் எழுந்து சுத்தி செய்து தீர்த்தமாடிச் சுசியாய், வெளுப்பு வஸ்திரங்களைத் தரித்துப், புதிய பூணூலை தரித்து, வெள்ளைமாலைப் பூச்சணிந்து சங்கல்பம்செய்து கொண்டு தனக்குறியசாகைக்குள்ள மந்திரத்தால் அக்நியை தாபித்துப் பிராணா பானாதி விரசாமந்திரங்களை அவ்வநுவாகம் முடிய ஒற்றுமைப் பட்ட மனதுடன் உச்சரித்துக்கொண்டு சமித்து நெய் அவிஸ் இவைகளைத் தனித்தனியே ஓமம் செய்தல்வேண்டும். பிறகு யாதெ தக்நெ ஹ என்று தொடங்கிய மந்திரங்களால் தன்னிடம் அக்நியை ஆரோபித்து அக்நிரிதி பஸ்ம, என்பது முதலாகிய ஆறுமந்திரங்களால் விபூதியை யெடுத்து ஜலத்துடன் கலக்காமல் முதலில் உடம்பில் பூசிப் பிறகு நீரிலிட்டு முப்பட்டையாய் அணிதல் வேண்டும்.*

**பஸ்மச்சநோத்விஜோவித்வான் மஹாபாதகஸம்பவை:**
**பாபைர்விமுச்யதேநித்ய ம்முச்யதெநசஸம்சய: 29**

(பொ-ரை):- விபூதியால் தேகமுழுதும் மறையப்பெற்று உபநயனாதி சடங்குகளைப் பெற்றுச் சிவபெருமானை வழிபடுவோன் பிரும்மவதை முதலிய பாவங்களினின்றும் எப்பொழுதும் விடுபட்டவனாகின்றான். பிறப்புஇறப்புகள் ஒழியப்பெற்ற முத்தியையும் அடைகின்றான். சந்தேகமில்லை.

**வீர்யமக்நேர்யதோபஸ்ம வீர்யவான்பஸ்மஸம்யுத:**
**பஸ்மஸ்நானரதோவிப்ரோ பஸ்மசாயீஜிதேந்த்ரிய: 30**

**ஸர்வபாபவிநிர்முக்த சிவஸாயுஜ்யமாப்நுயாத்**

(பொ-ரை):- எக்காரணத்தால் விரசாக்நியிலிருந்து உண்டாய விபூதி அக்நியின் வீர்யமோ? அதனால் விபூதி அணிவோன் வீர்யவானாவான். தேகமுழுதும் விபூதியைப் பூசுவதையே முக்கியமாய்க் கொண்டவனும், விபூதியிட்டுப் படுப்போனும் இந்திரியங்களை அதன் வழி செல்லவிடாது அடக்கியோனுமான அந்தணன் எல்லாப்பாவங்களினின்றும் விடுபட்டுச் சிவனோடு ஐக்கியமடைகின்றான். (ஸாயுச்சியமுத்தியை அடைகின்றான்).

**ஏவம்குருமஹாபாக சிவநாமஸஹஸ்ரகம் 31**

**இதம்துஸம்ப்ரதாஸ்யாமி தேனஸர்வார்த்தமாப்ஸ்யஸி**
**இத்யுக்த்வாப்ரததௌதஸ்மை சிவநாமஸஹஸ்ரகம் 32**

(பொ-ரை):- ஓ மஹாபாக்கியவனான இராம; இவ்விதம் சிவஸஹஸ்ரநாமம் அதாவது சிவனாயிரப்பெயரை உச்சரிப்பாயாக. இதையுனக்குக் கொடுத்தருள்கின்றேன். அதனால் விரும்பிய பொருளை எல்லாம் அடைவாயாக என்று கூறி ராமனுக்குச் சிவஸஹஸ்ரநாமத்தை உபதேசித்தனர்.

**வேதஸாராபிதம்நித்யம் சிவப்ரத்யக்ஷகாரகம்**
**உக்தஞ்சதேனராமத்வம் ஜபநித்யம்திவாநிசம் 33**

(பொ-ரை):- அம்முநிவரால் கூறப்பட்டதாவது ஓ ராமா, நீ வேதஸாரமென்று வழங்குவதும் சிவபெருமானைப் பிரத்தியக்ஷமாகச் செய்வதுமாகிய ஸஹஸ்ரநாமத்தைப் பிரதிதினமும் பகலும் இரவும் ஜபித்துக்கொண்டிரு.

**ததஃப்ரஸந்நோபகவாந் மஹாபாஶுபதாஸ்த்ரகம்**
**துப்யம்தாஸ்யதிதேந த்வம்ஶத்ரும்ஹத்வாப்ஸ்யஸிப்ரியாம் 34**

**தஸ்யைவாஸ்த்ரஸ்யமாஹாத்ம்யாத்ஸமுத்ரம்ஶோஷயிஷ்யஸி**
**ஸம்ஹாரகாலேஜகதாம் அஸ்த்ரம்தத்பார்வதீபதே: 35**

*(பொ-ரை):- பின்னர் இறைவன் பிரஸந்நராய் உன்பொருட்டு மஹாபாசுபதாஅஸ்திரத்தைக் கொடுப்பார். அதனால் நீ சத்துருவைக் கொன்று ஸீதையை அடைவாய், அதே அஸ்திரத்தின் மகிமையால் கடலை வற்றச்செய்வாய், (பிரளயகாலத்தில்) யுகாந்தத்தில் பார்வதீபதிக்கு அந்த அஸ்திரமேயுளது.*

**ததலாபேதாநவாநாம் ஜயஸ்தவஸுதுர்லப:**
**தஸ்மால்லப்தும்த்தேவாஸ்தம் ஶரணம்யாஹிஶங்கரம். 36**

*(பொ-ரை):- அது கிடைக்காவிடில், உனக்கு அரக்கர்களது ஜயம் கிடைக்காது. ஆகலின் அந்த அஸ்திரத்தையே அடைதற்குச் சங்கரனைச் சரணம் அடைவாயாக.*

*(மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.)*





அர்த்தநாரீசுவர மூர்த்தி

# நான்காவது அத்தியாயம்

*ஸ்ரீ இராமர் செய்த சிவ உபாசனாவிதியும், சாக்ஷாக்காரமும் - இதில் ஸ்ரீ இராமர் மேற்கொண்ட மகாபாசுபதவிரதமும், கோதாவரி நதிக்கருகே லிங்கம் அமைத்து சிவபூசனைகள் செய்த விரதமும் இராமரின் விரதபலத்தால் இறைவன் ஐந்துமுகமாக பராக்கிரமகாட்சி தந்ததும் குறிப்பிடப்படுகின்றது.*

**ஏவமுக்த்வாமுநிஸ்ரேஷ்டே கதேதஸ்மிந்நிஜாச்ரமம்**
**அதராமகிரௌராம: புண்யேகோதாவரீதடே** 01

*(பொ-ரை):- இங்ஙனம் கூறி அம்முனிவர்கோனாகிய அகத்தியர் தனதுஆச்ரமத்திற்குச் சென்ற பின்னர் இராமன் இராமகிரியென்னும் பெயரிய வரையினில் புண்ணியமாய கோதாவரிக் கரையில், (வரை-மலை).*

**சிவலிங்கம்ப்ரதிஷ்டாப்ய க்ருத்வாதீக்ஷாம் யதாவிதி**
**பூதிபூஷிதஸர்வாங்கோருத்ரா க்ஷாபரணைர்யுத:** 02

*(பொ-ரை):- சிவலிங்கத்தைத் தாபித்து விதிவழுவாமல் தீக்ஷை செய்து தேகமெங்கும் விபூதியணிந்து ருத்திராக்கங் களையும் தரித்து,*

*(ஈண்டு இஃதறிக. இராமாவதார காலத்தில் மாத்திரமேயன்றி மூலதேவராகிய ஸ்ரீமஹா விஷ்ணுவும் சிவபூஜை செய்து சிறப்புற்றவர் என்பதை,*

**பிரமாணம் ருக்வேதம்**

**தவஸ்ரியேமருதோமாஜயந்த ருத்வேயத்தேஜநிம**
**சாருசித்ரம் பதம்யத்விஷ்ணோ ருபமந்யதாயி.**

*என்ற பிரமாணத்தாலும், இதனுண்மைப் பொருளை விளக்கவந்த*

**பராசரபுராணம்**

**ரௌத்ரலிங்கம் மஹாவிஷ்ணுப்ரக்த்யா சுத்தம்சிலா**
**மயம்சாரசித்ரம் ஸமப்யர்ச லப்தவான் பரமம்பதம்**

*என்ற சுலோகத்தாலும் உணர்க.*

**அபிஷிச்யஜலை: புண்யைர்கௌதமீவஸிந்துஸம்பவை:**
**அர்ச்யயித்வாவந்யபுஷ்பைஸ் தத்வத்வந்யபலைரபி** 03

*(பொ-ரை):- புண்ணியமாய கௌதமீ நதீ தீர்த்தங்களால் அபிஷேகஞ் செய்து வனத்திலுள்ள மலர்களாலும் கனிகளாலும் அர்ச்சனை செய்து,*

**பஸ்மச்சந்நோபஸ்மஶாயீ வ்யாக்ரசர்மாஸநேஸ்தித:**
**நாம்நாம்ஹஸ்ரம்ப்ரஜபந்நக்தம்திவமநநயதீ:** 04

*(பொ-ரை):- விபூதியை உடம்பு முழுவதும் பூசி, விபூதி சயனம் செய்து புலித்தோல் ஆஸநத்திலிருந்து மற்றெதையும் சிந்தியாமல் இரவும்பகலும் ஸஹஸ்ரநாமத்தை ஜபஞ்செய்து,*

**மாஸமேகம்பலாஹாரோ மாஸம்பர்ணாஶநஸ்தித:**
**மாஸமேகம்ஜலாஹாரோ மாஸம்சபவநாஶந:** 05

*(பொ-ரை):- ஒருமாதம் கனியைப் புசிப்போனும், ஒருமாதம் இலைகளைப் புசிப்போனும், ஒருமாதம் நீரைப் புசிப்போனும், ஒருமாதம் காற்றைப் புசிப்போனும்,*

**ஶாந்தோதாந்த: ப்ரஸந்நாத்மா த்யாயந்நேவம்மஹேஶ்வரம்**
**ஹ்ருத்பங்கஜேஸமாஸீநம் ருமாதேஹார்ததாரிணம்** 06

**சதுர்புஜம்த்ரிணயநம் வித்யுத்பிங்கஜடாதரம்**
**கோடிஸூர்யப்ரதீகாஶம் சந்த்ரகோடிஸுஶீதலம்** 07

**ஸர்வாபரணஸம்யுக்தம் நாகயக்ஞோபவீதிநம்**
**வ்யாக்ரசர்மாம்பரதரம் வரதாபயதாரிணம்** 08

**வ்யாக்ரசர்மோத்தரீயம்ச ஸுராஸுரநமஸ்க்ருதம்**
**பஞ்சவக்த்ரம்சந்த்ரமள்ளி பிந்த்ரிஶூலடமருதரம்** 09

**நித்யம்சஶாஶ்வதம் ஶுத்தம் த்ருவமக்ஷரமவ்யயம்**
**ஏவம்நித்யம் ப்ரஜபதோ கதம்மாஸசதுஷ்டயம்.** 10

*குறிப்பு:- (ஈண்டு சென்ற ஐந்தாவதுசுலோகம் முதல் பத்தாவது சுலோகம் வரையில் ஒரே அன்வயம் ஆதலின் பொழிப்புரை இங்குக் கூறப்பட்டது.)*

*(பொ-ரை)*:- உட்கரண புறக்கரணங்களை அடக்கித்தெளிவான மனதுடையோனான இராமனின் இருதயகமலத்தின்கண் விளங்குவோனும், உமையோர் பாகனும், நான்கு கைகளை யுடையோனும் முக்கண்ணனும், மின்னல் வர்ணமுள்ள சடையைத் தரித்தோனும், கோடிசூர்யஸமனும், கோடி சந்திரன்போல ஆநந்தகரனும், சகலாபரணங்கள் உடையோனும், அரவப் பூணூல் உடையோனும், புலித்தோலாடையோனும், வரம் அபயம் இவைகளை யளித்தருளும் முத்திரை தரித்தவனும், புலித்தோலை மேலாடையாய்க் கொண்டவனும், தேவாஸுரர்களால் வணங்கப் பெற்றோனும், ஐந்து முகத்தோனும், சந்திரகலைதரித்தவனும், முச்சூலம் உடுக்கைகளைக் கைகளில் ஏந்தியோனும், காலவரையில் அடங்காதவனும், எல்லா அவஸ்தைகளிலும் விளங்குவோனும், மாயையைக் கடந்தவனும், மாற்றமுறாதவனும், அக்கரனும், நாசமற்றவனுமான சிவபெருமானை, இவ்வாறு பிரதி தினமும் ஜபஞ்செய்துகொண்டுவர நான்கு மாதங்கழிந்தது.

குறிப்பு : ஈண்டு மாஸமேகம் என்ற சுலோகத்தால் சிவோபாஸனையின் நியமமும், சாந்த: என்ற சுலோகத்தால் சிவோபாஸனையின் ஸாதனத்தையும், கூறிப் பின்னர் ''ஹ்ருத்பங்கஜே'' என்று தொடங்கி இருதய கமலத்தில் உபாஸிப்பதாகிய தகரவித்யோபாஸனையும், அவ்வாறு இறைவனது சொரூபத்தை 'உமாதேஹார்த்த தாரிணம்' என்று தொடங்கி 'த்ரிசூலடமரூ' என்பது ஈறாய் விளக்கி, அவனது மகிமையை 'நித்யஞ்சசாச்வதம்' என்ற சுலோகத்தால் விளக்கியதும் காண்க. (இதன் விரிவு உபாஸநாயோக அத்தியாயத்தில் நன்கு விரித்துரைக்கப்படும். ஆண்டுக் காண்க).

**அதஜாதோமஹாந்நாத: ப்ரளயாம்புதிபீஷண:**
**ஸமுத்ரமதநோத்பூத மந்தராவநிப்ருத்ஸநீ: 11**

**ருத்ரபாணாகநிஸம்தீப்த ப்ரஸ்யத்திரிபுரவிப்ரம:**
**தமாகர்ண்யா தஸம்ப்ராந்த: யாவத்பர்யேதிபுஷ்கரம் 12**

*(பொ-ரை)*:- பின்னர் பிரளயகாலத்து மேகம்போலப் பயங்கரமாயதும், கடலைக் கடைந்தபோது உண்டாய மந்தரகிரியின் ஒலிபோன்றதும், உருத்திரரது பாணாங்கியால் கொளுத்தப்பெற்ற திரிபுரங்களின் விப்பிரமத்தை உடையதுமாய்ஓர் பேரொலி

தோன்றியது, அதைச்செவியுற்றுக் கலக்கமுற்ற இராமன் தடாகத்திற்கு வருவதற்குள்,

**தாவதேவமஹாதேஜோ ராமஸ்யாஸீத்புரோத்விஜா:**
**தேஜஸாதேநஸம்ப்ராந்தோ நாபஸ்யத்ஸதிஸோதஸ 13**

*(பொ-ரை):- இராமனுக்கு எதிரில் ஓர் பெருஞ்சோதி தோன்றியது அச்சோதியால் கலக்கமுற்றவனாய் இராமன் பத்துத் திக்குகளையும் அறியாது பிரமித்தான்.*

**அந்தீக்ருதேக்ஷணஸ்தூர்ணம் மோஹம்யாதோந்ருபாத்மஜ:**
**விசிந்த்யதர்கயாமாஸ தைத்யமாய்ம்த்விஜேஸ்வரா:. 14**

*(பொ-ரை):- அரசகுமாரனான ராமன் ஒன்றையும் காணமாளாது கண் ஒளியிழந்து அறிவு கலங்கிநின்று பின்னர் தெளிந்து சிந்தித்து இஃதோர் அரக்கமாயை யென்று நினைத்தனன். ஓ அந்தணர்களே,*

**அதோத்தாயமஹாவீர: ஸஜ்யம்க்ருத்வா தநுஸ்ஸவகம்**
**அவித்யந்நிஸ்தைர்பாணைர் திவ்யாஸ்த்ரைரபிமந்த்ரிதை:15**

*(பொ-ரை):- பின்னர் எழுந்து மஹாவீரனாகிய ராமன் தனது வில்லை நாணேற்றித் திவ்வியாஸ்திரங்களால் அபிமந்திரிக்கப்பட்ட கூர்மையாகிய பாணங்களால் அடித்தனன்.*

**ஆக்நேயம்வாருணம்ஸௌம்யம் மோஹநம் ஸௌரபார்வதம்**
**விஷ்ணுசக்ரம் மஹாசக்ரம் காலசக்ரம்ச வைஷ்ணவம் 16**

**ரவுத்ரம்பாசுபதம் ப்ராஹ்மம் கௌபேரம் குலிசாநிலம்**
**பார்கவாதிபஹூந்யஸ்த்ராண்யம் ப்ராயுங்தராகவ 17**

*(பொ-ரை):- இந்த இராமன் அக்கினியாஸ்திரம், வருணாஸ்திரம், சந்திராஸ்திரம், மோஹனாஸ்திரம், சூரியாஸ்திரம், பருவதாஸ்திரம், வைஷ்ணவாஸ்திரம், ருத்திராஸ்திரம், பாசுபதாஸ்திரம், பிரமாஸ்திரம், குபேராஸ்திரம், வஜ்ஜிரவாயுவெஸ்திரம், பார்க்கவம் முதலிய பல அஸ்திரங்களைப் பிரயோகித்தான்.*

**தஸ்மிந்தேஜஸிஸஸ்த்ராணி சாஸ்த்ராண்யஸ்ய மஹீபதே:**
**விலீநாமிமஹாக்ரஸ்யகரகா யிவநீரதௌ 18**

**தத க்ஷணேநஜஜ்வால தநுஸ்தஸ்ய கராச்சியுதம்**
**தூணீரம்சாம்கூளித்ராணம் கோடிகாபிமஹீபதே: 19**

(பொ-ரை):- அந்தச் சோதியில் இந்த அரசனுடைய ஆயுதங்களும் அஸ்திரங்களும் சமுத்திரத்தில் மகாமேகத்தினது திவலைகள்போல ஒடுங்கிவிட்டன. பின்னர் ஓர் கணத்தில் அந்த அரசனது வில்லும் அம்பறாத்தூணியும் விரல் கவசமும் உடும்புத் தோலும் கையினின்றும் நழுவியதாய்ச் சொலித்தது.

**ததத்ருஷ்ட்வாலக்ஷ்மணோபீத: பபாதபுவிமூர்சித:**
**அதாகிம்சித்கரோராம: ஜாநுப்யாமவநீம்கத: 20**

**மீலிதாக்ஷோபயாவிஷ்டஶ் ஶம்கரம் ஶரணம்கத:**
**ஸ்வரேணாப்யுச்சரந்நுச்சை: ஶம்போர்நாமஸஹஸ்ரகம் 21**

**ஶிவம்சதண்டவத்பூமௌ ப்ரணபூநாம பூந: பூந:**

(பொ-ரை):- அதனைப்பார்த்து இலட்சுமணன் பயந்தவனாய்ப் பூமியில் மூர்ச்சையாக விழுந்தான். பிறகு இராமன் ஒன்றுஞ் செய்ய முடியாதவனாய் முழங்கால்களால் பூமியை அடைந்து பயங்கொண்டவனாய் மூடிய கண்களோடு சங்கரனைச் சரணமடைந்தனன். சிவபிரானது ஆயிரந்திருநாமங்களை உரத்த சத்தத்தோடு உச்சரித்துக் கொண்டு சிவபிரானைப் பூமியில் விழுந்து தடிபோலச் சாஷ்டாங்கமாய் மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தான்.

**பூநஶ்சபூஶிர் வச்சாஸீத் ஶப்தோதிங்மண்டலம்ஸ்வநந் 22**

**சசாலவஸூ தாகோரம் பர்வதாஶ்சசகம்பிரே**
**அதக்ஷணேநபரீதாம் ஶூஶீதலம்தேஜ: ஆதயத் 23**

**உந்மீலிதாக்ஷோராமஸ்து யாவத்யாவத்ப்ரபஶ்யதி :**

(பொ-ரை):- மீண்டும் முன்போலவே தொனிகளானவை திசைகளை ஒலிக்கச் செய்கின்றதாய் உண்டானது, பூமி பயங்கரமாய் சலித்தது, மலைகளும் அசைந்தன. பின்னர் கணத்தில் சந்திரனைப் போலக் குளிர்ந்ததாகிய சோதியைக் கண்டான். இராமன் கண்களைத் திறந்து கொண்டவனாய் எவ்வளவில் பார்க்கலாயினனோ;

**தாவத்ததர்ஶவ்ருஷபம் ஸர்வாலங்கார ஸம்யூதம் 24**

**பியூஷமதநோத்பூத நவநீதஸ்ய பிண்டவத்**
**ப்ரோதஸ்வர்ணம் மரகதச்சாயர்ஶம் கத்வயாம்சிதம் 25**

**நீலரத்நேக்ஷணம் ஹ்ரஸ்வகண்டகம் பலபூஷிதம்**
**ரத்நபல்யாணஸம்யுக்தம் நிபத்தம்ஶ்வேதவாமரை: 26**

**கண்டிகாகர்கரீஶபைபூரயந்தம் திஶோ தஶ**

(பொ-ரை):- அவ்வளவில் அமுதமதனத்தினால் உண்டாகிய நவநீதத்தினுடைய திரள் போன்றதும், பொன்னால் அலங்கரிக்கப் பட்டதும் மரகதம்போன்ற இரண்டு கொம்புகளையுடையதும், நீலமணி போன்ற கண்களையுடையதும், குறுகிய கழுத்துக் கம்பளம் போன்ற தசையால் அலங்காரம் பெற்றதும், இரத்தின கம்பளத்தோடு கூடியதும், வெண்சாமரங்களால் அலங்கரிக்கப் பட்டதும் மணிகளின் ஓசையால் பத்துத்திசைகளையும் நிரம்பச் செய்கின்றதும் சகல அலங்காரங்களோடு கூடியதுமாகிய இடபத்தைக் கண்டான்.

**தத்ராஸீநம்மஹாதேவம் ஶத்தஸ்படிகவிக்ரஹம் 27**

**கோடிஸூர்யப்ரதீகாஶம் கோடிஸீதாம் ஶுஶீதலம்**
**வ்யாக்ரசர்மாம்பரதரம் நாகயஜ்ஞோபவீதிநம் 28**

**ஸர்வாலங்காரஸம்யுக்தம் வித்யுத்பிங்கஜடாதரம்**
**நீலகண்டம்வ்யாக்ர சர்மோத்தரீயம் சந்த்ரஶேகரம் 29**

**நாநாவிதாயுதோத்பாதி தஶபாஹுந்தரிலோசநம்**
**யுவாநம்புருஷஶ்ரேஷ்டம் ஸச்சிதாநந்தவிக்ரஹம் 30**

(பொ-ரை):- அந்த இடபத்தின்மீது வீற்றிருக்கின்றவனும், சுத்தஸ்படிகம் போன்ற தேகமுடையவனும், கோடி சூரியன் போல் சொலிக்கின்றவனும், கோடிசந்திரன் போன்ற குளிர்ச்சி பொருந்தியவனும், புலித்தோலாடை தரிக்கின்றவனும், அரவப் பூணூலுடையோனும், சகல அலங்காரமுடையவனும், மின்னல் போன்ற பொன்னிறமாகிய சடைதரிக்கின்றவனும், நீலமாகிய கண்டமுடையவனும், புலித்தோலை மேலாடையாகக் கொண்ட வனும், சந்திரனைச் சிரசில் தரிக்கின்றவனும், பலவிதமான ஆயுதங்களால் விளங்கும் பத்துத் திருக்கைகளை உடையவனும்,

மூன்று திருக்கண்களை உடையவனும், யவ்வனமுடையவனும், புருஷசிரேஷ்டனும், சச்சிதானந்த வடிவனுமாகிய மஹாதேவனையுங் கண்டான்.

**தத்ரைவசஸுகாஸீநாம் பூர்ணசந்த்ரநிபாநநாம்**
**நீலேந்தீவரதா மாபாமுத்யந்முரகதப்ரபாம் 31**

**முக்தாபரணஸம்யுக்தாம் ராதீம்தாராம்சிதாதிவ**
**விந்த்யக்ஷிதரோத்துங்க குசபாரபராலஸாம் 32**

**ஸதஸத்ஸம்ஸயாவிஷ்ட மத்யதேஸாம் தராம்வராம்**
**திவ்யாபரணஸம்யுக்தாம் திவ்யந்தாநுலேபநாம் 33**

**திவ்யமால்யாம்பரதராம் நீலேந்தீவரலோசநாம்**
**அளகோத்பாஸிவதநாம் தாம்பூலக்ராஸஸோபிதாம் 34**

**ஸிவாலிங்கநஸம்ஜாத புலகோத்பாஸிவிக்ரஹாம்**
**ஸச்சிதாந்தரூபாட்யாம் ஜகந்மாதரமஞ்ஸிகாம் 35**

**ஸௌந்தர்யஸாரஸம்தோஹாம் ததர்ஸரகுநந்தந**

(பொ-ரை):- அவ்விடத்திலேயே சுகமாய் வீற்றிருக்கின்றவளும், பூரணசந்திரன் போன்ற முகமுடையவளும் நீலோற்பலகாந்தி உடையவளும், பிரகாசிக்கும் மரகதகாந்தி உடையவளும், முத்தாபரணம் அணிந்தவளும், நட்சத்திரங்களோடு கூடிய இராத்திரிபோன்றவளும், விந்தியகிரிபோலும் உன்னதமாகிய குசபாரங்களால் சிரமங்கொண்டவளும், உளதோ இல்லையோவெனும் ஐயத்திற்கிடமாகிய இடைப்பக்கத்தையுடையவளும், உத்தமியும், திவ்வியாபரணங்களை அணிந்தவளும், திவ்வியசந்தனம் பூசியவளும், திவ்வியமலர் வஸ்திரங்களைத் தரித்தவளும், நீலோற்பலம் போன்ற கண்களையுடையவளும், முன்னெற்றியிற்படிந்த சூர்ணகுந்தளம் என்னும் கேசங்களால் விளங்கும் முகமுடையவளும், தாம்பூலக் கவளத்தால் விளங்குகின்றவளும், சிவபிரானது ஆலிங்கனத்தால் உண்டாகிய புளகத்தால் பிரகாசிக்கும் தேகமுடையவளும், சச்சிதானந்த வுருவுடையவளும், சௌந்தரிய சாரத்திரளையுடையவளும், லோகமாதாவுமாகிய அம்பிகையை இராகவன் கண்டான்.

**ஸ்வஸ்வவாஹநஸம்பத்தாந நாநாயுதலஸத்கராந** 36

**ப்ரஹத்ரதம்தராதீநி ஸாமாநிபரிகாயத**
**ஸ்வஸ்வகாம்தாஸ மாயுக்தாந்திக்பாலாந் பரிதஸ்திதாந்** 37

**அக்ரகம்ருடாரூடம் ஶங்கசக்ரகதாதரம்**
**காலாம்புஜப்ரதீகாஶம் வித்யுத்காம்த்யாச்ரியாயுதம்** 38

**ஜபம்தமேகமநஸாருத்ராத்யாயம் ஜநார்தநம்**

(பொ-ரை):- தத்தம் வாஹனத்தின் மீதேறியவர்களும், பற் பல ஆயுதங்களால் விளங்கும் கைகளையுடையவர்களும், பிருஹத்ரதந்தரம்முதலியனவாகிய ஸாமங்களை கானம் செய்கின்றவர்களும், தத்தம் மங்கையோடு கூடியவர்களும், நான்கு பக்கங்களிலும் நிற்கின்றவர்களுமாகிய திசைத்தலைவர்களையும், முந்திவருகின்றவரும் கருடன் மீதேறியவரும் சங்கசக்கரக் கதைகளைத் தரிக்கின்றவரும் நீலோற்பலம்போல விளங்கு கின்றவரும் மின்னல்போன்ற காந்தியுடையவளாகிய இலக்குமி யோடு கூடியவரும் உருத்திராத்தியாயத்தை ஒரே மனதோடு ஜபிக்கின்றவருமாகிய விஷ்ணுவைக் கண்டான்.

**பஶ்சாச்சதுர்முகம்தேவம் ப்ரஹ்மாணம் ஹம்ஸவாஹநம்** 39

**சதுர்வக்த்ரைஶ்ச துர்வேதருத்ரஸூக்தைர்மஹேஶ்வரம்**
**ஸ்துவந்தம்பாரதீயுக்தம் தீர்கஶ்மச்ரம்ஜடாதரம்** 40

**அதர்வஶிரஸாதேவம்ஸ்து வந்தம்முநிமண்டலம்**
**கங்காதிதடிநீயுக்தமம்புதிம்நீலவிக்ரஹம்** 41

**ஶ்வேதாஶ்வதரமந்த்ரேண ஸ்துவந்தம்கிரிஜாபதிம்**

(பொ-ரை):- பின்னால் அன்னவாஹனத்தின்மீது வீற்றிருக் கின்றவனும் நான்கு முகங்களாலும் நான்குவேதங்களிலுள்ள உருத்திர ஸூக்தங்களால் மகேச்வரனை ஸ்துதிசெய்கின்றவனும் ஸரஸ்வதியோடு கூடியவனும் நான்முகனாகிய பிரம தேவனையும், அதருவசிரசுஉபநிடதத்தால் இறைவனை தோத்திரஞ் செய்கின்ற வரும் நீண்ட தாடிகளையுடையவருமாகிய முனிக் கூட்டத்தையும், உமாபதியாகிய இறைவனை சுவேதாச்வர உபநிடதத்தால்

ஸ்தோத்திரம் செய்கின்றவனும் கங்கை முதலிய நதிகளோடு கூடியவனும் கறுத்தமேனியனுமாகிய ஸமுத்திர ராஜனையுங் கண்டான்.

**அநந்தாதிமஹாநாகாந கைலாஸகிரிஸந்நிபாந் 42**

**கைவல்யோபநிஷத்பாடாந் மணிரத்நவிபூஷிதாந**
**ஸுவர்ணவேத்ரஹஸ்தாட்யம் நந்திநம்புரதஸ்திதம் 43**

(பொ-ரை): மேன்மையான ரத்தினங்களால் அலங்கரிக்கப் பட்டவர்களும் கைவல்யோபநிடதத்தைப் பாராயணஞ் செய்கின்ற வர்களும், கைலையங்கிரி போன்றவர்களுமாகிய அனந்தன் முதலிய மகா நாகர்களையும், முன்னால் நிற்கின்றவரும் பொற் பிரம்பு கையிற் பிடித்தவருமாகிய நந்திதேவரையுங் கண்டான்.

**தக்ஷிணேமூஷகாரூடம் கணேஶம்பர்வதோபமம்**
**மயூரவாஹநாரூடமுத்தரேஷண் முகம்ததா 44**

**மஹாகாலம்ச சண்டேஶம் பார்ஶ்வயோர்பீஷணாக்ருதிம்**
**காலாக்நிருத்ரம்தூரஸ்தம் ஜ்வலத்தாவாக்நிஸந்நிபம் 45**

**த்ரிபாதம்குடிலாகாரம் நடத்ப்ருங்கிரிடிம்புந:**
**நாநாவிகாரவதநாந் கோடிஶ:ப்ரமதாதிபாந் 46**

(பொ-ரை) : தென்பக்கத்தில் மூஷிகத்தின் மீது ஆரோகணித் தவரும் மலைபோன்றவருமாகிய கணபதியையும், வடபக்கத்தில் மயில் வாகனத்தின்மீது வீற்றிருக்கின்றவராகிய ஆறுமுகக் கடவுளையும், பக்கங்களில் பயங்கரமாகிய உருவமுடையவராகிய மகாகாளரையும், சண்டேசரையும், சற்றுத் தூரத்திலுள்ளவரும் சொலிக்கும் காட்டுத்தீ போன்றவருமாகிய காலாக்கினி ருத்திரரையும், மூன்று கால்களை உடையவரும் கோணலாகிய தேகமுடையவரும் நடனஞ்செய்யும் பிருங்கிஇரிடியையும், பற்பலவிகாரமுடைய முகத்தினர்களாகிய கோடிக்கணக்காயுள்ள பிரமத கணாதிபர்களையுங் கண்டான்.

**நாநாவாஹநஸம்யுக்தம் பரிதோமாத்ருமண்டலம்**
**பஞ்சாக்ஷரீஜபாஸக்தாந் ஸித்தவித்யாதராதிகாந் 47**

**திவ்யருத்ரககீதாநி காயத்கிந்நரப்ருந்தகம்**
**தத்ரத்ரையம்பகம்மந்த்ரம் ஜபத்விஜகதம்பகம் 48**

*(பொ-ரை ): பற்பல வாகனங்களில் ஆரோகணித்தவர்களும், சூழ்ந்து நிற்கும் மாதிருக்கூட்டத்தையும், பஞ்சாட்சரஜபத்தில் விருப்பமுற்றவர்களாகிய சித்தர் வித்தியாதரர் முதலியவர்களையும், திவ்வியருத்திர சரிதகீதங்களை பாடுகின்ற கின்னரக் கூட்டத்தையும், அங்குதிரியம்பக மென்று தொடங்கிய மந்திரத்தை ஜபிக்கும் அந்தணர்கூட்டத்தையுங் கண்டான்.*

**காயந்தம்வீணயாகீதம்ந்ருத் யந்தம்நாரதம்திவி**
**ந்ருத்யதோநாட்யந்ருத்யேந ரம்பாதீநப்ஸரேகணாந் 49**

*(பொ-ரை): ஆகாயத்தில் வீணையினால் பாட்டைப் பாடுகின்றவரும் நடனம் செய்வோருமாகிய நாரதரையும், நாட்டிய சாஸ்திரத்தின்படி நடனம் செய்வோர்களாகிய அரம்பைமுதலிய அப்ஸர ஸ்திரீகளையும் கண்டான்.*

**காயத்சித்ரரதாதீநாம் கந்தர்வாணாம்கதம்பகம்**
**கம்பலாச்வதரௌசம்பு கர்ணகுண்டலதாம்கதௌ 50**

*(பொ-ரை): பாடும் சித்திரரதர்முதலிய கந்தர்வக் கூட்டத்தையும், சிவபெருமானுக்குக் காதணியாயுள்ள கம்பல அச்வதரர்களையும் கண்டான்.* (தோடுடைய செவியன்-சம்பந்தர் தேவாரம்)

**காயந்தௌபந்நகௌகீதம் கபாலம்கம்பலம்ததா**
**ஏவம்தேவஸபாம்த்ருஷ்ட்வா க்ருதார்த்தோரகுநந்தன: 51**

*(பொ-ரை): கீதத்தைப் பாடுகின்றவர்களாகிய பந்நகர்களாகிய கபால கம்பலர்களையும் கண்டான். இவ்வாறு தேவஸபையைக் கண்டு ராமன் கிருதார்த்தனானான்.*

**ஹர்ஷகத்கதயாவாசாஸ்துவந்தேவம்மஹேச்வரம்**
**திவ்யநாமஸஹஸ்ரேண ப்ரணநாமபுந: 52**

*(பொ-ரை): ஸந்தோஷத்தால் தழுதழுத்த வாக்கியத்தால் இறைவனாகிய சிவனை ஸ்தோத்திரம் செய்துகொண்டு திவ்யநாம ஸஹஸ்ரத்தால் பன்முறை நமஸ்கரித்தான்.*

*(நான்காவது அத்தியாயம் முற்றிற்று.)*

# ஐந்தாவது அத்தியாயம்

*அஸ்திரப்பிராப்தி - ஸ்ரீ இராமரின் மகாபாசுபதவிரதத்தால் மனமகிழ்ந்த சிவபெருமான் மகாபாசுபதத்தை அவருக்கு வழங்கி அதன் மகிமையை விளக்குகின்றார். பின்பு தேவர்களை அழைத்து அவர்களுடைய ஆயுதங்களை ஸ்ரீ இராமருக்கு வழங்கச்செய்கின்றார். தேவர்கள் அனைவரும் வானரராய் மாறி ஸ்ரீ இராமருக்கு உதவச்செய்கின்றார்.*

ஸ்ரீஸூதர்உவாச:

**அதப்ராதுரபூத்தத்ர ஹிரண்மயரதோமஹாந்**
**அநேகதிவ்யரத்நாம் சுகிம்மீரிததிகந்தர: 01**

ஸ்ரீஸௌதர் கூறியது

*பொழிப்புரை :- பிறகு அங்கு எண்ணிறந்த திவ்ய ரத்நங்களின் காந்தியால் சித்திரவர்ணமாக்கப்பட்ட திசைவெளிகளை உடையதும் பெரிதுமாகிய பொன்மயமாகிய ரதம் தோன்றியது.*

**நத்யுபாந்திகபங்காட்ய மஹாசக்ரசதுஷ்டய**
**முக்தாதோரணஸம்யுக்த: ச்வேதச்சத்ரசதாவ்ருத: 02**

**சுத்தஹேமகுரைராட்ய துரங்ககணஸம்யுத:**
**முக்தாவிதாநவிலஸதூர்த் வதிவ்யருஷத்வஜ: 03**

**மத்தவாரணிகாயுக்த: பஞ்சதத்வோபசோபித:**
**பாரிஜாததருத்பூத புஷ்பமாலாபிரஞ்ஜித: 04**

**ம்ருகநாபிஸமுத்பூத கஸ்தூரிமதபங்கில:**
**கர்பூராகருதூபோத்த கந்தாக்ருஷ்டமதுவ்ரத் 05**

**ஸம்வர்த்தகனகோஷாட்ய: நாநாவாத்யஸமந்வித:**
**வீணாவேணுஸ்வநாஸக்த கிந்நரீகணஸங்குல: 06**

*(பொ-ரை) : அது கௌதமீநதிக்கரையிலுள்ள சேற்றினால் பூசப்பட்ட நாலுபெருஞ்சக்கரங்களை யுடையதும், முத்துத் தோரணங்களையுடையதும், வெண்குடைகளால் சூழப் பட்டுள்ளதும், சுத்தமாகிய பொற்குளம்புகளையுடைய குதிரை வரிசைகளையுடையதும், முத்துக்களால் நிர்மிக்கப்பட்ட மேல்*

*விதானத்தில் விளங்கும் விருஷபத்துவஜம் உடையதும், மதித்த யானைகளை யுடையதும், ஜந்துகத்துவ அதிஷ்டான தேவர்களோடு கூடி விளங்குவதும், பாரிஜாதபுஷ்பமாலைகளால் அலங்கரிக்கப் பட்டதும் அற்புதமாகிய கஸ்தூரிமதபங்கம் படியப்பெற்றதும், பிரளயகாலமேகங்களினது போன்ற ஒலிமுழக்கத்தை யுடையதும், எண்ணிறந்த வாத்திய விசேஷங்களோடு கூடியதும் வீணை புல்லாங்குழல் மிருதங்கம் இவைகளின் நாதத்தில் விருப்புற்ற கிந்நரஸ்திரீக் கூட்டத்தோடு கூடியதுமாய் இருந்தது.*

**ஏவம்க்ருத்வாரதச்ரேஷ்டம் வ்ருஷாதுத்தீர்யசங்கர**
**அம்பயாஸஹிதஸ்தத்ர படதல்பேஅவிசத்ததா** 07
**ஸுரநீரஜநேத்ராணாம் ச்வேதசாமரசாலநை:**
**திவ்யவ்யஜநவாதைஸ்சப்ரஹ்ருஷ்டோநீலலோஹித:** 08

***(பொ-ரை):*** *இவ்வாறு ரதச்ரேஷ்டத்தைத் தோன்றச் செய்து சங்கரன் விருஷபத்திலிருந்து இறங்கி அம்பிகையோடு கூடியவராய் ரதத்தையடைந்து அதிலுள்ள வஸ்திராஸனத்தில் உட்கார்ந்து கொண்டனர். தேவமங்கையர்களது வெண்சாமரங்களாலும் சிறந்தவிசிறியின் காற்றினாலும் சிவபெருமான் மிகவும் திருப்தியடைந்தனர்.*

**க்வணத்கங்கணநித்வானை: மஞ்ஜுமஞ்ஜீரசிஞ்ஜிதை**
**வீணாவேணுஸ்வநை கீதை பூர்ணமாஸீஜ்ஜகதத்ரயம்** 09
**சுகவாக்யகலாராவை: ச்வேதபாராவதஸ்வநை:**

***(பொ-ரை):*** *ஒலிக்கும் கடகநாதங்களாலும், இனியதண்டை ஒலிகளாலும், வீணாவேணுக்களின் நாதங்களாலும், கீதங்களாலும், கிளிகளின் இனியகுரல்களாலும், வெண்மாடப்புறாக்களின் சப்தங்களாலும் மூவுலகமும் நிரம்பியது.*

**உந்நித்ரபூஷாபணிநாம் தர்சநாதேவபர்ஹிண:** 10
**நந்ருதுர்தர்சயந்தஸ்ஸ்வாந் சந்த்ரகாந்கோடிஸங்க்யயா**

***(பொ-ரை):*** *உல்லாஸமாயுள்ள ஆபரண ஸர்ப்பங்களைக் கண்டதனாலேயே மயில்கள் தங்களது கோடிக்கணக்கான புள்ளிகளைக் காண்பிக்கின்றனவாய்க் கூத்தாடின.*

**ப்ரணமந்தம்ததோராம முத்தாபயவ்ருஷபத்வஜ: 11**
**ஆநிநாயரதம்திவ்யம் ப்ரஹ்ருஷ்டேநாநதராத்மநா**

(பொ-ரை): அதற்குப்பிறகு சிவபெருமான், நமஸ்கரித்துக் கொண்டு இருக்கின்றவனாகிய இராமனை எழுந்திருக்கச்செய்து மிக்கத் திருப்தியடைந்த மனதோடு அவனைத் தமது அற்புதமாகிய ரதத்திற்கு வரவழைத்தனர்.

**கமண்டலுஜலை: ஸ்வச்சைஸ்ஸ்வயமா சம்யயத்நத 12**
**ஸமாசாம்யாதபுரத ஸ்வாங்கேராமமுபாநயத்**

(பொ-ரை): சுத்தமாகிய கடத்திலுள்ள ஜலத்தால் ஆசமனஞ் செய்து, பின்னர் எதிரில் விதிப்படி ஆசமனஞ்செய்வித்து, ராமனை தமது மடிமீது வைத்துக் கொண்டனர்.

**அததிவ்யம்தநுஸ்தஸ்மை ததெளதூணீரமக்ஷயம் 13**

**மஹாபாஶுபதம்நாம திவ்யமஸ்த்ரம்ததெளதத:**
**உக்தஶ்சதேநராமோபிஸாதரம் சந்த்ரமெளளிநா 14**

(பொ-ரை): பின்னர் அந்தராமன் பொருட்டுத் திவ்விய வில்லையும் குறைவற்ற அம்புறாத்தூணியையும் கொடுத்தார். அதன் பின்னர் மஹாபாசுபதம் எனும் திவ்விய அஸ்திரத்தையும் அளித்தார். அன்றியும் அந்த சந்திரசூடனாகிய இறைவனால் ராமன் மிக்க ஆதரவுடன் கூறவும் பட்டான்.

**ஜகந்நாஶகரம்ரெளத்ர முக்ரமஸ்த்ரமிதம்ந்ருப**
**அதோநேதம்ப்ரயோக்தவ்யம் ஸாமாந்யஸமராதிகே 15**

**அந்யந்நாஸ்திப்ரதீகாத மேதஸ்யபுவந்த்ரயே**
**தஸ்மாத்ப்ராணாத்யயே ராமப்ரயோக்தவ்யமுபஸ்திதே 16**
**அந்யதைதத்ப்ரயுக்தம்சேத் ஜகத்ஸம்க்ஷயக்ருத்பவேத்**

(பொ-ரை): ஓ அரசனே, இந்த அஸ்திரமானது தீக்ஷணமாயும் பயங்கரமாயும் உலகையழிப்பதாயும் உள்ளது. ஆதலால் இது ஸாமான்னிய யுத்தம் முதலியதில் பிரயோகிக்கக் கூடியதல்ல.
S3 இவ்வஸ்திரத்திற்கு மூவ்வுலகிலும் தடுக்கக்கூடியது வேறுஒன்று

இல்லை. ஆதலால் இராமா, ப்ராணஆபத்து வந்தபோது இது பிரயோகிக்கக் கூடியது. மற்றஸமயத்தில் பிரயோகித்தால் உலகை அழிக்கிறதாகும்.

**அதாஹூயஸுரச்ரேஷ்டாந் லோகபாலாந்மஹேஶ்வர: 17**

**உவாசபரமப்பீரத ஸ்வம்ஸ்வமஸ்த்ரம் ப்ரயச்சத**
**ராகவோயம்சதைரைஸ்தரை ராவணம்நிஹநிஷ்யதி 18**

**தஸ்மைதேவைரவத்ய த்வமிதிதத்தோவரோமயா**
**தஸ்மாத்வாநரதாமேத்யபவம்தோ யுத்ததுர்மதா: 19**

**ஸாஹாய்யமஸ்யகுர்வம்து யேநஸ்வஸ்தாபவிஷ்யத**

(பொ-ரை): பின்னர் மகேச்வரன் உலகபாலகர்களாகிய தேவச்ரேஷ்டர்களைக் கூப்பிட்டு மிக்கப்பிரீதியுடையவராய்க் கூறலானார். ஓ தேவர்காள், நீங்கள் தத்தம் அஸ்திரத்தைக் கொடுங்கள், அந்த அஸ்திரங்களால் இந்த ராகவன் ராவணனை வதஞ்செய்வான், அந்த ராவணனுக்கு என்னால் தேவர்களால் வதமடையாது இருத்தலாகிய வரம் கொடுக்கப்பட்டுளது, ஆதலால் வானரத் தன்மையைப் பெற்று யுத்தத்தில் ஆவலுள்ளவர்களாய் நீங்கள் இவனுக்குச் சகாயம் செய்வீர்களாக, (என்றனர்.)

**ததாஜ்ஞாமஶிரஸாக்ருஹ்ய ஸுரா ப்ராஞ்ஜலயஸ்ததா 20**
**ப்ரணம்யசரணௌஶம்போ ஸ்வம்ஸ்வமஸ்த்ரம்தத்யர்முதா**

(பொ-ரை): அப்போது அவ்விறைவனது ஆணையை தலையால் பெற்று அஞ்சலிசெய்தவர்களாய்த் தேவர்கள் சிவனது கால்களை நமஸ்கரித்து ஸந்தோஷத்தோடு கூடியவர்களாய்த் தத்தம் அஸ்திரத்தைக் கொடுத்தனர்.

**நாராயணாஸ்த்ரம்தைத்யாரி: ரௌத்ரமஸ்த்ரம்புரம்தர: 21**

**ப்ரஹ்மாபிப்ரஹ்மதண்டாஸ்த்ரமாக்நேயாஸ்த்ரம்தநம்ஜய:**
**யாமியம்யமோபிமோஹாஸ்த்ரம் ரக்ஷோராஜஸ்ததாததௌ 22**

**வருணோவாருணம்ப்ராதாத் வாயவ்யாஸ்த்ரம்ப்ரபம்ஜந**
**கௌபேரம்சகுபேரோபி ரௌத்ரமீஶாநஸ்வச 23**

(பொ-ரை): அப்போது விஷ்ணு நாராயண அஸ்திரத்தையும், ருத்திரன் ரௌத்திர அஸ்திரத்தையும், பிரமன் பிரும்ம தண்டாஸ்திரத்தையும், அக்நி ஆக்நேயாஸ்திரத்தையும், யமன் யமாஸ்திரத்திரத்தையும், நிருதி மோஹாஸ்திரத்தையும், வருணன் வருணாஸ்திரத்தையும், வாயு வாயு அஸ்திரத்தையும், குபேரன் குபேராஸ்திரத்தையும், ஈசானன் ஈசான அஸ்திரத்தையும் கொடுத்தனர்.

**ஸௌரமஸ்த்ரம்ததௌஸூர: ஸௌம்யம்ஸோமஸ்துபாவகம்**
**விஶ்வேதேவா ததுஸ்தஸ்மை வஸவோவாஸவாபிதம் 24**

(பொ-ரை): சூரியன் சூரிய அஸ்திரத்தையும், சந்திரன் சந்திர அஸ்திரத்தையும், விஸ்வதேவர் பாவகாஸ்திரத்தையும் வஸுக்கள் வாஸவமென்னும் அஸ்திரத்தையும் அந்த இராமன் பொருட்டுக் கொடுத்தனர்.

**அததுஷ்ட ப்ரணம்யேஶம் ராமோதஶரதாத்மஜ:**
**ப்ராஞ்ஜலி ப்ரயதோபூத்வா பக்தியுக்தோவ்யஜிஜ்ஞிபத் 25**

(பொ-ரை): பிறகு தசரதன் தநயனாகிய ராமன் களிப்புமிகுந்தவனாய் ஈச்வரனை நமஸ்கரித்து அஞ்ஜலி செய்தவனாய் வணக்கமுடையோனாய் பக்தியுடையோனாய் விண்ணப்பம் செய்துகொண்டான்.

**இராமன் விண்ணப்பம்:**

**பகவந்மாநுஷேணைவ நோல்லங்க்யோலவணாம்புதி**
**தத்ரலங்காபிதம்துர்கம் துர்ஜயம்தேவதாநவை 26**

**அநேககோடயஸ்தத்ர ராக்ஷஸாபலவத்தரா**
**ஸர்வேஸ்வாத்யாயநிரதாஶ ஶிவபக்தாஜிதேந்த்ரியா 27**

**அகநகமாயாஸம்யுக்தா புத்திமந்தோக்நிஹோத்ரிண**
**கதமேகாகிநாஜேயா மயாப்ராத்ராச ஸம்யுகே 28**

(பொ-ரை): ஓ பகவானே, மனிதனால் உப்புக்கடலானது தாண்டக்கூடியதேயல்ல. அங்குத் தேவாஸுரர்களால் ஜயிக்கக்கூடியதல்லாத இலங்கையென்னும் கோட்டையுளது மிக்கப் பலவான்

களாகிய அரக்கர் கோடிக்கணக்காய் இருக்கின்றனர். அவர்கள் எல்லோரும் வேதாத்தியயன சீலர்களும், சிவபக்தர்களும், இந்திரியங்களை அடக்கியவர்களும், பலமாயை உள்ளோர்களும், புத்திமான்களும், அக்கினிஹோத்திரம் உடையவர்களுமாய் இருக்கின்றனர். ஏகாகியாகிய என்னாலும் என் சகோதரனாலும் யுத்தத்தில் எப்படி ஜயிக்கக் கூடியவர்களாவார்.

**ஸ்ரீமஹாதேவர் உவாச:**

**ராவணஸ்யவதேராமரக்ஷஸாமபிமாரணே**
**விசாரோநத்வயாகார்யஸ்தஸ்ய ம்ருத்யுஸ்ஸமாகத** 29

**அதர்மேதுப்ரவ்ருத்தாஸ்தே தேவப்ராஹ்மணபீடநே**
**தஸ்மாதாயு க்ஷயம்யாதி தேஷாம்ஶ்ரீ ரபிஸுவ்ரத** 30

**ஸ்ரீமஹாதேவர் கூறுகிறார்:**

*(பொ-ரை): ஓ ராமனே, உன்னால் ராவணனது வதத்திலும் அரக்கர்களைக் கொல்லுவதிலும் விசாரஞ் செய்யத்தக்கதல்ல. அவனுக்கு மிருத்யு வந்திருக்கின்றான். அவர்கள் தேவர்களையும் அந்தணர்களையும் பீடித்தலாகிய பாவத்திற் சென்றிருக்கின்றனர். ஆதலால் அவர்களுக்கு ஆயுளும் செல்வமும் குன்றுகின்றது.*

**ராஜஸ்த்ரீலங்கநாஸக்தம் ராவணம்நிஹநிஷ்யஸி**
**பாநாஸக்த: ரிபுர்ஜேதும் ஸுகரஸ்ஸமராங்கணே** 31

**அதர்மஸஹிதஶ்ஶத்ருர்பாக்யே நைவஹிலப்யதே**
**அதீதவேதஶாஸ்த்ரோபி ஸதாதர்மரதோபிவா** 32

*(பொ-ரை): இராஜஸ்த்ரீயை அடைவதில் விருப்புற்றவனான ராவணனை வதைப்பாய், கட்குடிப்போனாகிய சத்துரு யுத்தகளத்தில் எளிதில் ஜயிக்கப்படுவானன்றோ, அதருமம் உடையோனாகிய சத்துரு பாக்கியத்தினாலேயே கிடைக்கின்றான். வேதசாஸ்திர அத்தியயனம் செய்தவனாயினும் எப்போதும் தருமத்திலேயே விருப்புற்றவன் ஆயினும்,*

**விநாஶகாலேஸம்ப்ராப்தே தர்மமார்காத்ச்யுதோபவேத்**
**பீட்யந்தேதேவதாஸ்ஸர்வாஸ்ஸததம்யேநபாபிநா** 33

**ப்ராஹ்மணார்ஷயஶ்சைவதஸ்ய நாஶஸ்ஸ்வயம்ஸ்தித:**
**கிஷ்கிந்தாநகரேராம தேவாநாமம்ஶஸம்பவா: 34**

**வாநராபஹவோஜாதா துர்ஜயாபலவத்தரா**
**ஸாஹாய்யந்தேகரிஷ்யநதி தைர்பதாநபயோநிதிம் 35**

*(பொ-ரை):* விநாசகாலம்வரின் தருமமார்க்கத்தினின்றும் நழுவியவனாவான். எந்த பாபியால் எப்போதும் ஸகலதேவர்களும் பிராமணர்களும் ருஷிகளும் பீடிக்கப்படுகின்றனரோ, அவனுக்கு நாசம்தானேயுளது. ஓ ராமா, கிஷ்கிந்தாநகரில் தேவாம்சத் தோற்றமுடையவர்களாய் ஜயிக்கப்படாதவர்களும் மிக்க பலவான்களுமாகிய வாநரர்கள் பலர் உண்டாயிருக்கின்றனர். அவர்கள் உதவி செய்வார்கள். அவர்களால் கடலைத் தகைந்து அணைபோடுவாயாக;

**அநேகஶைலஸம்பத்தேஸேதௌ யாந்துபலீமுகா**
**ராவணம்ஸகணம்ஹத்வா தாமாநயநிஜாம்ப்ரியாம். 36**

*(பொ-ரை):* பற்பல மலைகளால் ஆகிய அணையில் வாநரர்கள் செல்லட்டும், கூட்டத்தோடுகூட ராவணனை வதைத்து உன் பிரியையாகிய சீதையை கூட்டிக்கொண்டு வருவாயாக;

**ஶஸ்த்ரைர்யுத்தேஜயோயத்ர தத்ராஸ்த்ராணி நயோஜயேத்**
**அஸ்த்ராணிமுசநதிவ்யா நிஸ்வயமேவவிநஶ்யதி 37**

*(பொ-ரை):* எந்த யுத்தத்தில், ஆயுதங்களால் ஜயம் வருமோ அங்கு திவ்ய அஸ்திரங்களைப் பிரயோகிக்கக் கூடாது. பிரயோகிப்பவன் தானே அழிகின்றான்.

**அதவாகிம்பஹூக்தேந மயைவொத்பாதிதம்ஜகத்**
**மயைவபால்யதேநித்யம் மயாஸம்ஹ்ரியதேபிச 38**

**அஹமேகோஜகந்ம்ருத்யுர்ம்ருத்யோர பிமஹீபதே**
**க்ரஸேஹமேவஸகலம் ஜகதேதச்சராசரம் 39**

**மமவக்த்ரகதாஸ்ஸர்வே ராக்ஷஸாயுத்ததுர்மதா:**
**நிமித்தமாத்ரம்த்வம்பூயா கீர்திமாப்ஸ்யஸிஸங்கரே 40**

*(பொ-ரை):* இனி விரிக்கக் கூறுவதால்; யாது உலகு என்னாலேயே உண்டாக்கப்பட்டுளது, என்னாலேயே எப்போதும் காக்கப்படுகின்றது. என்னால் சங்கரிக்கப்படுகின்றது. யான் ஒருவனே உலகத்திற்கும் ம்ருத்யு. அரசனே, ம்ருத்யுவுக்கும் ம்ருத்யு நானே, சராசரமாகிய இச்சகம் எல்லாவற்றையும் விழுங்குகின்றேன், யுத்தத்தில் மதங்கொண்டவரான அரக்கர்கள் எல்லோரும் எனது வாயில் அகப்பட்டிருக்கின்றனர். நீ நிமித்த மாத்திரம் ஆவாயாக. யுத்தத்தில் கீர்த்தியை அடைவாய், என்றார் சிவபெருமான். (நிமித்தம் - காரணம்)

**(ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.)**





**மகாசதாசிவ மூர்த்தி**

# விபூதியோகம் என்னும் ஆறாம் அத்தியாயம்

*விபூதியோகம் - சிவனின் வல்லமைகளைப் பற்றி இராமர் வினவ, சகலமுமே சிவமயம் என்று சிவமே விளக்குகின்றார். பரமாத்மாவின் பரிபூரண பண்புகளை இந்த விபூதியோகத்தில் காணலாம்.*

**இராமன் உவாச:**

**பவந்ந த்ரமேசித்ரம் மஹதேதத்ப்ரஜாயதே**
**ஶுத்தஸ்படிகஸம்காஶஸ்திரிணேத்ஶ் சந்தரஶேகர 01**

**மூர்தஸ்த்வம்துபரிச்சிந்நாக்ருதி புருஷரூபத்ருக்**
**அம்பயாஸஹிதோத்ரைவரமஸேப்ரமதைஸ்ஸஹ 02**

**இராமன் வேண்டியதாவது:**

*பொழிப்புரை:* ஓ பகவனே, எனக்கு இவ்விஷயத்தில் இப்பெரிய வியப்பு உண்டாகின்றது. அதாவது சுத்தஸ்படிகம் போன்றவரும், முக்கண்ணரும் சந்திர சேகரரும், உருவங் கொண்டவருமாகிய, நீரோவெனின் ஏகதேச மூர்த்தியாய் அதாவது பிண்டப்பொருளாய் உள்ளவர். புருட உருவங்கொண்டு தேவியுடன் கூடியவராய் இவ்விடத்திலேயே பிரமத கணங்களோடுங்கூட விலாஸம் செய்கின்றீர்.

**த்வம்கதம்பஞ்சபூதாதி ஜகதேதச்சராசரம்**
**தத்ப்ரூஹிகிரிஜாகாந்த மயிதேநுக்ரஹோயதி 03**

*(பொ-ரை):* நீர் எப்படி பஞ்சபூதாதியும் சராசரமுமாகிய இப்பிரபஞ்சமாகக் கூடும், ஓ பார்வதீநாதா, உமக்கு என்னிடம் அனுக்கிரஹம் இருக்குமாயின் அதனைக் கூறும்.

**சிவபெருமான் அருளியது:**

**ஶ்ருணுராமமஹாபாக துர்ஜ்ஞெயமமரைரபி**
**தத்ப்ரவக்ஷ்யாமியத்நேந ப்ரஹ்மசர்யேணஸுவ்ரத 04**
**பாரம்யாஸ்யஸ்யநாயா ஸாத்யேநஸம்ஸாரவாரிதே**

*(பொ-ரை): ஸ்ரீ சிவபெருமான் கூறியதாவது; ஓ ராமா, மஹாபாக்கியவானே யாதொன்று தேவர்களாலும் அறிதற்கரிதோ அத்தகைய அத்துவிதத் தன்மையைக் கூறுகின்றேன். நியமவானே, பெருந்தைர்யத்தோடும் ஏகாக்கிரசித்தத்தோடுங் கேட்பாயாக. எதனைக் கேட்டதினால் ஸம்ஸாரக் கடலினின்றும் சுலபமாய்க் கரையேறுவாயோ,*

**த்ருஸ்யந்தேபஞ்சபூதாநி யேசலோகாஶ்சதுர்தஶ 05**

**ஸமுத்ரா: பர்வதாதேவா ராக்ஷஸாருஷயஸ்ததா**
**த்ருஶ்யந்தேயாநிசாந்யாநி ஸ்தாவராணிசராணிச 06**

**கந்தர்வா: ப்ரமதாநாகாஸ்ஸர்வே தேமத்விபூதய:**

*(பொ-ரை): பஞ்சபூதங்களும், யாதொரு பதினான்கு உலகங்களும், கடல்களும், மலைகளும், தேவர்களும், அரக்கர்களும், ருஷிகளும் காணப்படுகின்றனவோ, மற்றுமுள்ள யாதொரு ஸ்தாவர ஜங்கமங்களும், கந்தர்வர்களும் பிரமதர்களும் நாகர்களும் காணப்படுகின்றனவோ, அவர்கள் எல்லோரும் எனது அம்சங்கள் ஆகின்றனர்.*

**புராப்ரஹ்மாதயோதேவா: த்ரஷ்ட்டுகாமாமமாக்ருதிம் 07**

**மந்தரம்ப்ரயயுஸ்ஸர்வே மமப்ரியதரங்கிரிம்**
**ஸ்துத்வாப்ராஞ்ஜலயோதேவா மாந்ததாபுரஸ்திதா 08**

*(பொ-ரை): பூர்வம் பிரம்மாதியரான தேவர்கள் எல்லோரும் என் உருவத்தைக் காண விரும்பியவர்களாய் எனக்கு மிக்கப்பிரியமான மந்தரபர்வதத்தை யடைந்தனர். தேவர்கள் என்னைத் துதிசெய்து அஞ்ஜலிகட்டிக்கொண்டு முன் நின்றார்கள்.*

**தாந்த்ருஷ்டா தமயாதேவாந் லீலாகுலிதசேதஸ: தேஷாம்**
**அபஹ்ருதம்ஜ்ஞாநம் ப்ரஹ்மாதீநாம்திவௌகஸாம் 09**

*(பொ-ரை): பின்னர் விளையாட்டில் குதூஹலமான சித்தமுடையவர்களான அத்தேவர்களைக் கண்டு என்னால் அப்பிரும்மாதி தேவர்களுடைய ஞானமானது அபகரிக்கப்பட்டது.*

**ஆஸம்ஸ்த்தேஸக்ருதஜ்ஞாநாந் மாமாஹு கோபவாநிதி**
**அதாப்ருவமஹம்தேவா நஹமேவபுராதந 10**

**ஆஸம்ப்ரதமமேவாஹம வர்தாமிசஸுரேஶ்வரா:**
**பவிஷ்யாமிசலோகேஸ்மிந மத்தோதாந்யோஸ்திகஶ்சந 11**

*(பொ-ரை): அத்தேவர்கள் உட்கார்ந்து கொண்டனர். அறியாமையால் என்னை நீ யார்? என்று அடிக்கடிகேட்டனர். பின்னர் நான் அத்தேவர்களை நோக்கிக் கூறினேன். (அதாவது) ஓ தேவச்ரேஷ்டர்காள் யானே பூர்வகாலத்தில் இருந்தேன், ஸ்ருஷ்டிக்கு முன் (அதாவது பிரளயத்திலும்) இருந்தேன், இப்பொழுதும் இருக்கின்றேன், இனியுமிருப்பேன், இச்சகத்தில் என்னிலும் இதரன் யாருமில்லை.*

*குறிப்பு:- (இங்கு யானே புராதனன் என்றதனால் தான் தோற்றமுடையவரல்ல என்பதும், ஸ்ருஷ்டிக்குமுன் இருந்தவன் என்றதனால் தானே பிரம்மனை உண்டாக்கி அவரால் பிரபஞ்சங்களை ஸ்ருஷ்டிக்கச் செய்தவர் என்பதும் அறிக. இருக்கின்றேன் இருப்பேன் என்றதனால் எக்காலத்திலும் அழிவில்லாதவர், காலவரைக்கு உட்படாதவர் என்பதும் ஏகாரத் தேற்றத்தால் அங்ஙனம் தன்னைத் தவிர யாருமில்லை என்றனர்).*

**வ்யதிரிக்தம்சமத்தோஸ்தி நாந்யத்கிஞ்சித்ஸுரேஶ்வரா**
**நித்யோநித்யோஹமநகோ ப்ரஹ்மணாம்ப்ரஹ்மணஸ்பதி 12**

*(பொ-ரை): ஓ தேவசிரேஷ்டர்காள், யானில்லாத மற்றை யாதுமில்லை. நித்தியனும் அநித்தியனும் யான். சுத்தனும் ஸத்யோஜாதம் முதலிய பஞ்சப்பிரும்ஹங்களுக்கும் பிரும்ஹம் என்ற பெயருக்கு ஏதுவாய் உள்ளவனும் யானே.*

*குறிப்பு:- (இங்கு நித்தியனும் அநித்தியனும் என்றதனால் அவரவர் வினைக்கேற்ப மாயையைத் துணையாச் சேர்த்து வெளிப்படுத்தலின் சீவர்களும், காரியப்படுத்தலின் சடங்களும் யான் என்றார்.)*

**தக்ஷிணாம்சஉதம்சோஹம் ப்ராஞ்ச: ப்ரத்யஞ்சஏவச**
**அதஶ்சோர்த்வஞ்சவிதிஶ: திஶஶ்சாஹம்ஸுரேஶ்வரா: 13**

(பொ-ரை): ஓ தேவச்ரேஷ்டர்களே, தென்திசையில் உள்ளவையும், வடக்குத்திக்கில் உள்ளவையும், கிழக்கில் உள்ளவையும், மேற்றிசையில் உள்ளவையும் யானே; கீழ்ப்பக்கமும் மேற்பக்கமும் இடைத்திசைகளும் திசைகளும் யானே.

**ஸாவித்ரீசாபிகாயத்ரீஸ்த்ரீ புமாநபுமாநபி**
**த்ரிஷ்டுப்ஜகத்யநுஷ்டுப்ச பங்திஶ்சம்தஸ்த்ரயீமய:** 14

(பொ-ரை): ஸாவித்திரீயும், காயத்ரீயும், பெண்ணும், ஆணும், அலியும், திருஷ்டுப்ஜகதீ அநுஷ்டுப் பங்தி எனும் சந்தங்களும் மூன்று வேதங்களும் யானே.

(ஈண்டு திரிஷ்டுப் என்றதும் முப்பாதமுடைய காயத்ரி எனும் சந்தம், ஜகதி பன்னிரெண்டு அக்ஷரசந்தம், அநுஷ்டுப் எட்டுஅக்ஷர பாதசந்தம், பங்கி ஐந்துஅக்ஷர பாதசந்தம் என்பதும், த்ரயீ (மூன்றுவேதம்) இருக்கு எஜுஸ் ஸாமம் என்ற வேதங்கள் என்பதும் அறிக.)

**ஸத்யோஹம்ஸர்வதஶ்ஶாந்த ஸ்த்ரேதாக்நிர்கௌரவம்குரு:**
**கௌரஹம்கஹ்வரம்சாஹம் த்யௌரஹம்ஜகதாம்விபு** 15

(பொ-ரை): யான் ஸத்தியன், மிக்கசாந்தன், கார்ஹபத்தியம் ஆஹவனீயம் தக்ஷிணாக்கிநி, குருத்துவம் உபதேசம் செய்வோன் யான் வாக்கு. குஹையும் யான். ஆகாயமும் ஜகதீசனும் யான். (இங்கு குஹையெனின் இருதயகுஹை என்றறிக.)

**ஜ்யேஷ்டஸ்ஸ்ர்வஸுரஶ்ரேஷ்ட: வர்ஷிஷ்டோஹமபாம்பதி:**
**ஆர்யோஹம்பகவாநீஶ: தேஜோஹம்சாதிரப்யஹம்** 16

(பொ-ரை): வயதிற்பெரியோனும், சகலதேவச்ரேஷ்டனும், மழைபெய்யச் செய்வோனும், சமுத்திரனும் நானே. ஸகல பூஜ்யனும் யான். உற்பத்திவிநாசங்கள், பூதங்கள் வருதல் போதல், வித்தை அவித்தை யிவைகளை யறிந்தவனும் ஆள்வோனும் சோதியும் யானே. காரணனும் யானே.

**ருக்வேதோஹம்யஜுர்வேத: ஸாமவேதோஹமாத்மபூ**
**ஆதர்வணஶ்சமந்த்ரோஹம் ததாசாங்கிரஸௌவர** 17

(பொ-ரை): நான் இருக்குவேதம், யஜுர்வேதமும் ஸாம வேதமும் நான். தருமதேவனும் அதருவவேதமும் நான். ஆங்கிர ஸமந்திர (பிருகஸ்பதிநூலும்) நானே.

**இதிஹாஸபுராணாநி கல்போஹம்கல்பவாநஹம்**
**நாராஶம்ஸீசகாதாஹம் வித்யோபநிஷதோஸ்ம்யஹம் 18**

(பொ-ரை): சிவரகஸியம் முதலிய இதிகாசங்களும், பதினெண் மஹாபுராணங்களும், கல்ப்பமும் நான். கல்ப்பத்தை செய்தவனும் நான். நாராஶம்ஸீ எனும் வைதிககாதையும் நான். பிரும்ம வித்தையைப் பிரதிபாதிக்கும் உபநிடதங்களும் நானாகின்றேன்.

**ஶ்லோகாஸ்ஸூத்ராணிசைவாஹ மநுவ்யாக்யாநமேவச**
**வ்யாக்யாநாநிததாவித்யா இஷ்டம்ஹுதமதாஹுதி: 19**

**தத்தோதத்தமஹம்லோக: பரலோகோஹமக்ஷரம்**
**பஹிஶ்சாஹம்ததாசாந்த: புரஸ்தாதஹமவ்யயம் 20**

(பொ-ரை): சுலோகங்களும் ஸூத்திரங்களும் நானே. உபவியாக்கியானமும், வியாக்கியானங்களும், வித்தையும், யாகமும், வைஶ்வதேவாதி ஹோமமும், பிராணாஹுதியும், தானம் செய்யப்பட்டதும் தானம் செய்யப்படாததும் நான். பூவுலகம் சுவர்க்கம் முதலிய உலகும் நான். அக்ஷரமான பிரும்ஹமும் நான். உள்ளும் வெளியிலும் எதிரிலும் நான். நாசமற்றதும் நான்.

**ஜ்யோதிஶ்சாஹந்தமஶ்சாஹம்தந்மாத்ராணீந்த்ரியாண்யஹம்**
**புத்திஶ்சாஹமஹம்காரோ விஷயாண்யஹமேவஹி 21**

(பொ-ரை): சோதியும்நான், அஞ்ஞானமும் நான், சப்த முதலியவையை அறிவனவாகிய இந்திரியங்களும் நான், புத்தியும் நான், அஹங்காரமும் நான், சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்களும் நானே.

**ப்ரஹ்மாவிஷ்ணுர்மஹேஶோஹ முகாஸ்கந்தோவிநாயக:**
**இந்த்ரோக்நிஶ்சயமஶ்சாஹம் நிருதிர்வருணோநில: 22**

**குபேரோஹந்ததேஶாநோ பூர்புவஸ்ஸ்வர்மஹர்ஜந:**
**தபஸ்ஸத்யம்சப்ருதிவீ சாபஸ்தேஜோநிலோஸ்ம்யஹம் 23**

(பொ-ரை): பிரமனும் விஷ்ணுவும் உருத்திரனும் நான். பார்வதியும் ஸ்கந்தரும் விநாயகரும் நான். இந்திரனும் அக்நியும் யமனும் நான். நிருருதியும் வருணனும் வாயுவும் நான். குபேரனும் நான். ஈசானனும் நான். பூவுலகும், புவர்லோகமும், ஸ்வர்லோகமும், மஹோலோகமும், ஜநோலோகமும், தபோலோகமும், ஸத்திய லோகமும் நான். பிருதிவியும் ஜலமும் தேயுவும் நானே ஆகின்றேன்.

**ஆகாஸோஹம்ரவிஸ்ஸோமோ நக்ஷத்ராணிக்ரஹாஹ்யஹம்**
**ப்ராண: கால: ததாம்ருத்யு ரம்ருதம்பூதமப்யஹம்** 24

(பொ-ரை): ஆகாயம் நான். சூரியனும் சந்திரனும் நக்ஷத்திரங்களும் அங்காரகன் முதலிய கிரகங்களும் நானே. ப்ராணனும் நிமிஷம் முதலிய காலமும் சகலப்பிராணசங்காரனும் முக்தியும் (இதுவரையில்) சென்றதும் யானே.

**பவ்யம்பவிஷ்யக்ருத்யஞ்ச விஸ்வம்ஸர்வாத்மகோப்யஹம்**
**ஓமாதௌஸததாமத்யே பூர்வபுவஸ்ஸ்வஸ்ததைவச** 25

(பொ-ரை): நிகழ்கின்றதும் இனிவருவதும் சகலசராசரமும் சகலஜீவ ஸ்வரூபனும் நானே. பிரணவாதி யந்தமத்தியிலும் பூர்புவஸ்ஸுவ: என்னும் வியாஹ்ருதிகளும் நானே.

**தாத்பரியம்:** இவ்வத்தியாயம் தொடங்கி இதுகாறும் சிவபெருமான் தானே சகலரும் என்று கூறப்பட்டது. இதெங்ஙனம் பொருந்துமெனின் அடியிற்குறித்த பிரமாணங்களாற் காண்க.

**பிரமாணம் - தைத்திரீயம்**

**விஸ்வம்பூதம்புவநம்சித்ரம் பஹுதாஜா தம்ஜாயமாநம்சயத்**
**ஸர்வோஹ்யேஷருத்ரஸ்தஸ்மை ருத்ராயநமோ அஸ்து**

(இ-ள்): சகலமும் உண்டானதும், ஆச்சரியமான உலகும் பற்பலவாய் உண்டானதும் உண்டாவதுமாய் யாதொன்றோ சகலமும் இவ்வுருத்திரனே, அவ்வுருத்திரன் பொருட்டு நமஸ்காரம்.

**தைத்திரீயம்**

"ததா த்மாநம்ஸ்வயமகுருத"

(இ.ள்.) அவர் தன்னைத்தானே செய்து கொண்டார்.

''ஸச்சத்யச்சாபவத்''

(இ.ள்.) பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயமானான்.

**பிரமாணம்**

''ததைக்ஷதபஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி''

(இ.ள்.) அது பற்பலபிரஜைகளாவோமென்று சங்கற்பித்தது.

**சதருத்திரீயம்**

''நம: பர்ண்யாயசபர்ணஶத்யாயச''

(இ.ள்.) என்பதீறாயும் அதருவசிரம் பிரதமகண்டமுழுதும் (ஜகதாகாரனென்று) ஸகலாகாரனென்று கூறப்பட்டுளது. இங்ஙனமே:

**வாயுஸம்ஹிதை**

''ஶக்த்யாதிசப்ருதிவ்யந்தம் ஶிவதத்வஸமுத்பவம்
தேனைகேநதுதத்வ்யாப்தம் ம்ருதாகும்பாதிகம்ய தா''

(இ.ள்.) சக்தி முதல் பிருதிவியீறாகச் சிவதத்துவத்தினின்றும் தோன்றியது. மண்ணினால் குடம்போல அவ்வொருவனால் அது வியாபிக்கப்பட்டுளது. இங்ஙனமே எண்ணிறந்த பிரமாண வாக்கியங்கள் சிவபெருமான் ஜெகதாகாரனென்று கூறுகின்றன.

**இனி : கைவல்யோபநிடதம்**

''ஸர்வைஶ்சர்ய ஸம்பந்நஸ் ஸர்வேஶ்வர:''

(இ.ள்.) சகல ஐசுவரியமுடையோன், சகலேசுவரன்.

**சுவேதாச்சுவத ரோபநிடதம்**

''விஶ்வாதிகோருத்ராமஹர்ஷி''

(இ.ள்.) விசுவாதிகன் ருத்திரன்மகருஷி.

''வித்யாவித்யே ஈஶதேயஸ்துஸோந்ய:''

(இ.ள்.) பசுபாசங்களை நடாத்துவோன் ஈசன் அந்நியனே.

**தைத்திரீயம்**

ஈஶாநஸ்ஸர் வவித்யாநாமீஶ் வரஸ்ஸர்வபூதாநாம்

(இ.ள்.) சகல வித்தைகளுக்கும் ஈசன், சகல பூதங்கட்கும் ஈசன்.

**சதருத்திரீயம்**

"நமோஹிரண்யபாஹவே" (என்றாரம்பித்து) "குலுஞ்சாநாம் பதயே" என்பதீறாய் அதருவசிரஸில் உத்தரகாண்டம் இரண்டாங் காண்டத்திலும் சகலாதிபதியென்றும் கூறப்பட்டுளது. இங்ஙனம் கூறிய ஜகதாகாரத்துவம் ஜகதீசுவரத்துவம் என்றிரண்டு தருமங் களையே இவ்வத்தியாயத்திலும் கூறியிருப்பதுகாண்க. இதுகாறும் ஜகத் ஸ்வரூபத்துவங் கூறப்பட்டாலும் இனி ஜகதீசுவரத்துவமும் கூறப்பட்டிருப்பது வரும் சுலோகங்களாறிக. சகலசேதனா சேதனங்களிலும் அந்தரான்மாவாய் விளங்குகின்றமையாலும் ஸர்வ வியாபகன் ஆதலாலும் சகல சொல்லுக்கும் பொருளாய் இருக்கின்றமையால் ஜகத்ஸ்வரூபத்துவம் கூறுதல் ஒவ்வும்.

**இது பற்றியன்றோ: அதருவசிரம்**

**யஸ்சவிஷ்ணு யஸ்சமஹேஸ்வர யாசோமா யஸ்டவிநாயக:**
**யஸ்சஸ்கந்த: யஸ்சேந்த்ர: யஸ்சாக்நி: யாசபூ:**

யாதொருவன் விஷ்ணுவோ, யாதொருவன் மஹேச்வரனோ, யாதொருவன் சோமனோ, யாதொருவன் விநாயகரோ, யாதொருவன் ஸ்கந்தரோ, யாதொருவன் இந்திரனோ, யாதொருவன் அக்நியோ, யாதொருவன் பூமியோ எனக் கூறியிருக்கின்றது.

இதனைச் சீகண்டபாஷ்யத்தில்(க) அத்தியாயம் (ச) பாதம் வாக்கியாந்வயாதிகரணத்தில் (அந்வஸ்திதேரிதிகா) என்ற ஸூத்திரத்தின் பாஷ்யத்தில் விரிவாய்க் காண்க.

அன்றியும் மேற்போந்தசுலோகங்களினாலும் பிரமாணங்களி னாலும் பெருமான் நானே என்றதனால் பிரமமே பிரபஞ்சமாகப் பரிணமித்திருப்பவன் என ஒரு சாரார் கூறும் கூற்றன்று. மற்றென்னையோ வெனின்? முதல்வன் சேதனோசேதனப் பிரபஞ்சத்தில் பாலில் நெய்போலவும், பழத்தில் மதுரம்போலவும், எள்ளில் எண்ணெய் போலவும் ஔபச்யேஷிக வியாப்திகொண்டு ஆன்மாக்களுடன் பிறிவற நின்று அறிவித்தும், மாயாகாரியங்களைச் சங்கோசவிரிவுசெய்தும் நடத்தலின் எல்லாம் நானே யென்றது காண்க.

இக்கருத்துப்பற்றியே, "எல்லாவுலகுமானாய் நீயே" எனவும், "இருநிலனாய்" எனவும் "வானாகி" எனவும்.

''நினைப்புறநினைந்தால்நீயலாற் பிரிது மற்றின்மை'' எனவும், தேவார திருவாசகங்களில் உண்மைநாயன்மார் திருவாய் மலர்ந்தருளினர்.

**ததொஹம்விஶ்வரூபோஸ்மி ஶீஷ்டம்சஜபதாம்ஸதா**
**அஶிதம்பாஶிதம்சா ஹம்க்ருதாந மப்யஹம் 26**

**பரம்சைவாபரம்சாஹமஹம் ஸர்வபராயண**
**அஹம்ஜகத்திதம் திவ்யமக்ஷரம்ஸூக்ஷ்மமவ்யயம் 27**

(பொ-ரை): ஆதலால் நான் விசுவரூபன் ஆகின்றேன். ஜபிக்கின்றவர்களுக்குச் சிரஸுமாகின்றேன். புசிக்கப்பட்டதும் ஜீர்ணமானதும் நானே. செய்யப்பட்டதும் செய்யப்படாததும் நானே. ஸாமான்னியஸத்தையும் திரவியத்துவஸத்தையும் நானே. யானே ஸகலமும் நிலைபெறுமிடம். ஸகலருக்கும் பிரேமைக்கு இடமாய்த் தகாராகாயத்தில் உள்ளதும் நானே, அக்ஷரமாய் உள்ளதும் ஸூக்ஷுமமாய் உள்ளதும் நாசமற்றதும் நானே.

**ப்ராஜாபத்யம்பசித்ரம்ச ஸௌமியமக்ராஹ்யவக்ரியம்**
**அஹமேவோபஸம்ஹர்தா மஹாக்ராஸௌஜஸாந்நிதி 28**

(பொ-ரை): புண்ணியமாகிய பிரஜோற்பத்தி செய்வித்தலும் நானே. அழகாய் உள்ளதும் அறியக் கூடாததும் முந்தியதும் நானே. பெருங்கவளத்தோனான உபசங்காரகன் நானே. தேஜஸுக்கு இருப்பிடமானவனும் யானே. (புண்ணியமாகிய பிரஜோத்பத்தி என்றது, பிதிரர் கடனை நற்புதல்வனாலேயே தீர்க்கவேண்டும்)

**ஹ்ருதயம்தேவதாத்வேந ப்ராணத்வேநப்ரதிஷ்டித:**
**ஶிரஶ்சோத்தரதோயஸ்ய பாதௌதக்ஷிணத்ததா 29**

**யஸ்யஸர்வோத்தரஸ்ஸாக்ஷாதோங்கா ரோஹந்த்ரிமாத்ரக:**
**ஊர்த்வமுந்நாமயேயஸ்மாத்யதஶ்சாபநயாம்யத 30**

**தஸ்மாதோம்காரமேவாஹம் ஏகோநித்யஸ்ஸநாதந:**

(பொ-ரை): தேவதையாகவும் பிராணனாகவும் இருதயத்தில் இருக்கின்றவன் நானே. மேற்பக்கத்தில் சிரஸும் அதாவது அகாரமும், பாதங்கள் மகாரங்கள், வலது பக்கத்திலும் உளவோ

அப்படிப்பட்ட மும்மாத்திரை வடிவமும் சகல ச்ரேஷ்டமுமாகிய ஓங்காரம் நானே. யாதொருகாரணத்தினால் உச்சரித்தல் மாத்திரத்தால் ஜீவனை மேல்வரச் செய்கின்றேனோ கீழ்ப்போகச் செய்கின்றேனோ ஆதலால் நான் ஓங்காரம் ஆகின்றேன். ஏகனாய் உள்ளவனும் நித்தியனும் பன்னெடுங்காலமாய் உள்ளவனும் நானே.

**ருசோயஜூம்ஷிஸாமாநியோ ப்ரஹ்மாயஜ்ஞுகர்மணி 31**

**ப்ரணாமயேப்ராஹ்மணேபயஸ்தே நாஹம்ப்ரணவோமத**
**ஸ்நேஹோயதாமாம் ஸகண்டம்வ்யாப்நோதிவ்யாபயத்யபி 32**

**ஸர்வலோகாநஹந்தத்வத்ஸர்வ வ்யாபீததோஸ்ஸ்ம்யஹம்**

(பொ-ரை): யாதொருவன் வேள்வியில் யஜமானனாய் இருந்து ருக்கு யஜுஸ் ஸாம வேதங்களை இருத்துவிக்கு முதலிய ப்ராமணர்களின் பொருட்டு வணங்கச் செய்கின்றேனோ அதனால் நான் **பிரணவம்** எனப்படுகின்றேன். எண்ணெயானது எப்படி மாம்ஸந்துண்டை வியாபித்தும் வியாபிக்கச்செய்தும் இருக்கின்றதோ அதுபோல நான் ஸகலலோகங்களையும் வியாபிக்கச் செய்கின்றேன் ஆதலால் **ஸர்வவியாபி** எனப்படுகின்றேன்.

**ப்ரஹ்மாஹரிஸ்சபகவாந் ஆத்யந்தம் நோபலப்நவாந்**
**ததோந்யேசஸுராயஸ்மாத் அநந்தோஹமதோமத: 33**

(பொ-ரை): யாதொருகாரணத்தால் பிரம்மாவும் ஹரியும் அடிமுடிகளைக் காணவில்லையோ மற்றுமுள்ள தேவர்களும் காணவில்லையோ ஆதலால் நான் அனந்தன் எனப்படுகின்றேன்.

**பிரமாணம் : திராவிட வேதம்**

"செங்கண்நெடுமாலுந் சென்றிடந்துங் காண்பரிய
பொங்குமலர்ப்பாதம் பூதலத்தைப் போந்தருளி"

**மகாபாரதம்**

"ஓரேனந் தனைத்தேட ஒளித்தருளும் இருபாதத் தொருவனந்த
போரேனந் தனைத்தேடிக் கணங்களுடன் புறப்பட்டான்"

எனக் காண்க.

**கர்பஜந்மஜராம்ருத்யுஸம்ஸார பயஸாகராத் 34**
**தாரயாமியதோபக்தம் தஸ்மாத்தாரோ ஹமீரித:**

*(பொ-ரை): யாதொருகாரணத்தால் கருப்பவாஸப் பிறவி ஜரை மரணஸம்ஸாரமாகிய பயக்கடலினின்றும் பக்தனைக் கரையேறச் செய்கின்றேன் ஆதலால் நான்* **தாரன்** *என்னப்படுகின்றேன்.*

**சதுர்விதேஷுதேஹேஷு ஜீவத்வேநவஸாம்யஹம் 35**
**ஸூக்ஷ்மாபூத்வாதுஹ்ருத்தேஸே யதஸ்ஸூக்ஷ்ம:ப்ரகீர்த்தித:**

*(பொ-ரை.): யாதொரு காரணத்தால் நான் நால்வகைச் சரீரங்களிலும் இருதயதேசத்தில் சூக்ஷ்மனாயிருந்து ஜீவத் தன்மையோடு வஸிக்கின்றேன். ஆதலால்* **சூக்ஷுமன்** *எனப்படு கின்றேன்.*

**மஹாதமஸிக்நேப்யோ பக்தேப்யோயத்ப்ரகாஸயே 36**
**வித்யுத்வததுலம்ரூபம் தஸ்மாத்வைத்யுதமஸ்ம்யஹம்**

*(பொ-ரை): யாதொரு காரணத்தால் பேரிருளாகிய ஸம்ஸாரத்தில் மூழ்கியிருக்கும் பக்தர்களின்பொருட்டு, நிகரற்ற உருவத்தை மின்னலைப்போல விளங்கச்செய்கின்றேன் ஆதலால் நான்* **வைத்யுதன்** *எனப்படுகின்றேன்.*

**ஏகஏவயதோலோகாந் விஸ்ருஜாமிஸ்ருஜாமிச 37**

**விவாஸயாமிக்ருஹ்ணாமி தஸ்மாதேகோஹமீஸ்வர**

*(பொ-ரை): யாதொரு காரணத்தால் நான் ஒருவனே உலகங்களை ஸ்ருஷ்டிக்க ஸங்கல்பஞ் செய்கின்றேனோ, ஸ்ருஷ்டிக்கின்றேனோ, ஸங்கரிக்கின்றேனோ, என்னிடம் கிரஹித்துக்கொள்ளுகின்றேனோ ஆதலால் அப்பவரனாகிய நான்* **ஏகன்** *எனப்படுகின்றேன்.*

**நத்விதீயோயதஸ்தஸ்தேதுரீயம் ப்ரஹ்மயத்ஸ்வயம் 38**

**பூதாந்யாத்நிஸம்ஹ்ருத்ய சைகோருத்ரோவஸாம்யஹம்**

*(பொ-ரை): யாதொருகாரணத்தால் இரண்டாகுபவன் இல்லையோ யாதொருகாரணத்தால் துரியப்பிரும்மமான நான் தானே பூதங்களைத் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டு வஸிக்கின் றேனோ? ஆதலால்* **ஏகோருத்திரன்** *எனப்படுகின்றேன்.*

**ஸர்வாந்லோகாந்யதீஸோ ஹமீஸிநீபிஸ்சஸக்திபி: 39**

**ஈஶாநமஸ்யஜகத:ஸ்வர்த்ரு ஶஞ்சக்ஷுரீஶ்வரம்.**
**ஈஶாநமிந்த்ரஸ்துஷ:ஸர்வே ஷாமிபிஸர்வதா** 40

**ஈஶாநஸ்ஸர்வவித்யாநாம் யதீஶாநஸ்ததஸ்ம்யஹம்**

*(பொ-ரை): ஈசனான நான் யாதொருகாரணத்தால் ஈசிநீ சக்திகளால் ஸகலலோகங்களையும் ஆள்கின்றேனோ? யாதொருகாரணத்தால் இவ்வுலகிற்கு ஈசானனும் ஸ்வர்க்காதி உலகங்களைக் காண்போனும் கண்போன்றவனும் இறைவனும் இந்திராதியர்க்கும் சகலருக்கும் ஈசானனுமாகிய (உம்மை வணங்குவோம்) என்று கூறப்படுகின்றேனோ? யாதொருகாரணத்தால் நான் ஸகல வித்தைகளுக்கும் மீசன்? ஆதலால் நான்* **ஈசானன்** *என்னப்படுகின்றேன்.*

**ஸர்வபாவாந்நிரீக்ஷேஹ மாத்மஜ்ஞாநம்நிரீக்ஷயே** 41

**யோகம்சகமயேயஸ்மாத் பகவாந்மஹதோமத:**

*(பொ-ரை): யாதொரு காரணத்தால் நான் உற்பத்தியாதி ஸகலபாவங்களையும் காண்கின்றேனோ, ஆன்மஞானத்தை பக்தர்களுக்கு அளிக்கின்றேனோ, இயமநியமாதி அங்கங்களுடன் கூடிய யோகஸித்தியையும் அடையச்செய்கின்றேனோ, ஆதலால்* **பகவான்** *என்று மஹான்களால் எண்ணப்படுகின்றேன்.*

**அஜஸ்ரம்யத்ப்ரக்ருஹ்ணாமி விஸ்ருஜாமிஸ்ருஜாமிச** 42

**ஸர்வாந்லோகாந்ஸ்வமாயாபி: தேநாஹம்வைமஹேஶ்வர:**

*(பொ-ரை): யாதொரு காரணத்தால் நான் எனதுமாயைகளால் பிரளய காலந்தோறும் ஸகல லோகங்களையும் என்னிடம் ஒடுக்கிக் கொள்ளுகின்றேனோ, ஸ்ருஷ்டிக்க எண்ணுகின்றேனோ, அங்ஙனம் ஸ்ருஷ்டிக்கின்றேனோ, ஆதலால் நான்* **மஹேச்வரன்** *எனப்படு கின்றேன்.*

**மஹத்ஸ்வாத்மஜ்ஞாநயோகைரைஶ்வர்யைஸ்துமஹீயதே**
**ஸர்வாந்பாவாந்மஹாதேவஸ்ஸ்ருஜத்யவதிஸோஸ்ம்யஹம்** 43

*(பொ-ரை): யாதொருவன் மஹத்தாகிய சுவாத்மஞான யோக ஐஸ்வர்யங்களால் ஸகலர்களாலும் பூஜிக்கப்படுகின்றானோ சகல*

ஜகங்களையும் உண்டாக்குகின்றானோ காக்கின்றானோ அம் மஹாதேவன் யானாகின்றேன்.

**எஷோஸ்மிதேவ ப்ரதிஸோநு ஸர்வா**
**பூர்வோஹிஜாதஸ்த்வஹமே வகர்பே 44**

**அஹம்ஹிஜாதஸ்ர ஜநிஷ்யமாண ப்ரத்யக்ஜநாஸ்திஷ்**
**டதிவிஸ்வ தோமுக**

(பொ-ரை): சகலதிசைகளும் மஹாதேவனாகிய யானே யாகின்றேன். புவனகோசமத்தியில் முதற்றோன்றியவனாகிய ஹிரண்யகர்ப்பனும் நானே. தோன்றிய உலகும் இனி தோன்றுவதும் நானே. என்னிடம் பக்திநிலைபெற்றவர்களும் அக்நியுமாய் இம்மஹாதேவனாகிய யானேயிருக்கின்றேன்.

**விஸ்வதஸ்சக்ஷுருதவிஸ்வதோ முகோவிஸ்வதோஹஸ்த**
**உதவிஸ்வ தஸ்பாத் 45**

**ஸம்பாஹுப்யாம்தமதிஸம்பதத்ரைர் த்யாவாபூமிஜநயந்தேவஏக:**

(பொ-ரை): எங்குங் கண்களுடையவனும், எங்கும் முகமுடையவனும், எங்குங் கைகளுடையவனும், எங்குங் கால்களுடையவனும், நானே. இவனே பட்சிகளுடன் கைகளாற் பறக்கின்றான், ஒருவனாக ஆகாயபூமிகளை உண்டாக்கும் தேவனும் நானே.

**வாலாக்ரமாத்ரம்ஹ்ருதயஸ்யமத்யே**
**விஸ்வம்தேவம் ஜாதவேதம்வரேண்யம் 46**

**மாமாத்மாஸ்தம்யேநுபஸ்யந்தி**
**தீராஸ்தேஷாம்ஸாஸ்வதீநேதரேஷாம்**

(பொ-ரை): இருதயத்தின் நடுவில் மிக்க சூக்ஷ்மனும், விஸ்வவியாபகனும், எல்லாராலும் அடையப்படுவோனும், வைஸ்வாநரனுமாய்த் தன்னிடம் இருப்பவனுமாகிய என்னை எந்த தீரர்கள் காண்கின்றனரோ அவர்களுக்கே எப்பொழுதும் சாந்தியுளது மற்றவர்க்கல்ல.

**அஹம்யோநிம்யாநிமதிதிஷ்டாமி சைகோமயே**
**தம்பூர்ணம்பஞ்ச விதஞ்சஸர்வம் 47**
**மாமீஶாநம்புருஷம்தேவ**
**மித்தம்விசார்யமாம்ஶாநதிமத்யந்தமேதி**

*(பொ-ரை): யான் ஒருவனே காரணந்தோறும் அதிஷ்டித்து இருக்கின்றேன். ஐம்பூதமாகிய ஈதெல்லாம் என்னாலேயே வியாபிக்கப்பட்டுள்ளது. புருஷஉருவமாய் விலாஸஞ் செய்வோனும் ஈசானனுமாகிய என்னை இவ்வாறு விசாரித்துப் பரமசாந்தியை அடைகின்றான்.*

**ப்ராணேஷ்வநதர்மநஸோலிங்கமாஹுர்ய 48**

**ஸ்மிந்நஶநாயா சத்ருஷ்ணாக்ஷமாச த்ருஷ்ணாம்சித்வா**
**ஹேதுஜாலஸ்யமூலம் புத்யாசித்தம்ஸ்தாபயித்வாமயீஹ 49**

**ஏவம்யேமாம்த்யாயமாநாபஜந்தேதேஷாம்**
**ஶாந்திஶ்ஶாஶ்வதீநேதரேஷாம் 50**

*(பொ-ரை): யாதொருவனை ப்ராணன்களுக்கும் மனதிற்கும் உள்ளில் சூக்ஷ்மமாய் இருக்கின்றவன் என்று கூறுகின்றனரோ, எவனிடம் பசியும் தாகமும் கோபமும் இருக்கின்றனவோ, ஹேதுஜாலங்களுக்கு மூலமாகிய அவனது ஆசையை ஒழித்து என்னிடம் புத்தியால் மனதை நிறுத்தி இவ்வாறு எவர் என்னை தியானிக்கின்றவர்களாய்க் கொண்டு உபாஸிக்கின்றனரோ; அவர்களுக்கே சாச்வதமாகிய சாந்தியுளது ஏனையர்க்கு அல்ல.*

**யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ**
**ஆநந்தம்ப்ரும்மாம்த்யாத்வா நபிபேதிகுதஶ்சந 51**

*(பொ-ரை): வாக்கும் மனமும் எவனை அடையமுடியாமல் திரும்புகின்றனவோ, அப்படிப்பட்ட ஆனந்தஸ்வரூபமாகிய ப்ரும்மமாய் உள்ள என்னைத் தியானிப்பவன் எக்காரணத்தாலும் பயப்படுகிறதில்லை.*

**ச்ருத்வேதிதேவாமத்வாக்யம் கைவல்யஞானமுத்தமம்**
**ஜபந்தோமமநாமாநிமமத்யான பராயணா: 52**

(பொ-ரை): சிரேஷ்டமும் கைவல்யஞான ஹேதுவுமாகிய இவ்விதமான எனது வாக்கியத்தைக் கேட்டுத் தேவர்கள் எனது நாமங்களை ஜபிக்கின்றவர்களும் என்னைத் தியானித்தலையே முக்கியமாய்க் கொண்டவர்களுமாய் இருந்தனர்.

**ஸர்வேதேஸ்வஸ்வதேஹாந்தே மத்ஸாயுஜ்யங்கதா:புரா**
**ததோயேபரித்ருச்யந்தே பதார்த்தாமத்விபூதய: 53**

(பொ-ரை): அவர்கள் எல்லோரும் தத்தம் தேஹாந்த்தத்தில் பூர்வம் எனது ஸாயுஜ்யத்தை அடைந்தனர். ஆதலால் காணப்படும் பதார்த்தங்கள் எல்லாம் எனது விபூதிகளே.

**மய்யேவஸகலம்ஜாதம் மயிஸர்வம்ப்ரதிஷ்டிதம்**
**மயிஸர்வம்லயம்யாதிதத்ப்ரும்மாத்வயமஸ்ம்யஹம் 54**

(பொ-ரை): ஸகலமும் என்னிடம் தோன்றி என்னிடம் நின்று என்னிடமே ஒடுங்குகின்றது. ஆதலால் யான் அத்வயமாகிய ப்ரும்மமாகின்றேன்.

பிரமாணம் - "ஏகோதேவருத்ரோநத்விதீயாயதஸ்தே" என்ற வாக்கியங்களாலும் அறிக.

**அணோரணீயாநஹமேவதத்வந்ம**
**ஹாநஹம்விச்வமஹம்விசுத்த:**
**புராதநோஹம்புருஷோஹமீசோ**
**ஹிரண்யோஹமிசவரூபமஸ்மி 55**

(பொ-ரை): அணுவிலும், அணுவும், மஹானும், ஸகலமும், மிக்கசுத்தனும், புராதனனாகிய புருஷனும், ஈசனும், பொன்மயனும் சிவரூபனும் யானேயாகின்றேன்.

**அபாணிபாதோஹமசிந்த்யசக்தி: பச்யாம்**
**யசக்ஷுஸ்ஸச்ருணோம்யகர்ண:**
**அஹம்விஜாநாமிவிவிக்தரூபோந**
**சாஸ்திவேத்தாமமசித்ஸதாஹம் 56**

(பொ-ரை): நான் கைகால்கள் இல்லாதவனாயினும் சிந்திக்கக் கூடாத ஆற்றலுடையவன். கண்ணில்லாதவன் ஆயினும்

காண்கின்றேன். காதில்லாதவன் ஆயினும் கேட்கின்றேன். யான் தனித்துள்ள ஸ்வரூபம் உடையோன் ஆயினும் பொருள்களை யறிகின்றேன் என்னையறிபவன் இல்லை நான் எப்போதும் சித்ரூபனே.

**வேதைரசேஷைரஹமேவவேத்ய: வேதாந்தக்ருக்வேத விதேவசாஹம்**
**நபுண்யபாபே மமநாஸ்திநாசோ நஜந்மதேஹேந்த்ரியபுத்தயஸ்ச 57**

*(பொ-ரை): ஸகல வேதங்களாலும் அறியப்படுவோனும், வேதாந்தத்தைச் செய்தவனும் வேதம் உணர்ந்தவனும் யானே. எனக்குப் புண்ணியபாவங்களும் ஜன்மமும் தேஹேந்திரிய புத்திகளும் இல்லை.*

**நபூமிராபோநச வஹ்நிரஸ்தி நசாநிலோமேஸ்திநமேநபஸ்ச ஏவம்விதித்வா பரமாத்மரூபம் குஹாசயம் நிஷ்களமத்விதீயம் ஸமஸ்த ஸாக்ஷிம்ஸதஸத்விஹீநம்ப்ரயாதிசுத்தம் பரமாத்மரூபம் 58**

*(பொ-ரை): எனக்குப் பூமி ஜலம் அக்கினி வாயு ஆகாயம் இவைகளில்லை. இவ்விதம் புத்தி குஹையில் உள்ளவனும், மலமாயாதி இல்லாதவனும், அத்வீதியனும், எல்லாவற்றிற்கும் ஸாக்ஷியாய் உள்ளவனும் காரியகாரணம் இல்லாதவனும் ஆகிய பரமாத்மரூபத்தையறிந்து சுத்தமாகிய பரமாத்மா ஸ்வரூபத்தை அடைகின்றான்.*

**ஏவம் மாம்ததவதோ வேத்தியஸ்துராமமஹீபதே**
**ஸஏவநாந்யோலோ கேஷு கைவல்யபலமச்நுதே 59**

*(பொ-ரை): ஓ ராமா, அரசனே , எவன் என்னை இவ்விதம் உள்ளபடி அறிகின்றானோ அவனேயன்றி உலகங்களில் மற்று எவனும் கைவல்யபலம் அடைகிறதில்லை.*

*(ஆறாம் அத்தியாயம் முற்றிற்று.)*



# விஸ்வரூப தர்ஸனம் என்னும் ஏழாவது அத்தியாயம்

*விஸ்வரூபதரிசனம் - இராமருக்கு ஏற்பட்ட ஐயங்களை தீர்க்கும் பொருட்டு இறைவன் சிவபெருமான் தன்னுடைய விஸ்வரூபத்தை வெளிப்படுத்துகின்றார். தன்னுடைய வாயைத் திறந்து அண்டசராசரங்களை இராமருக்கு காணச் செய்கின்றார். இறைவனின் இச்செயல் கண்ட இராமர் இறைவனின் தத்துவத்தை எண்ணி சரணாகதியடைகின்றார்.*

**இராமர் வேண்டினார்:**

**பகவந்யந்மயாப்ருஷ்டம் தததைவஸ்திதம்விபோ**
**அத்ரோத்தரம்மயாலப்தம்தவத்தோநைவமஹேஸ்வர 01**

பொழிப்புரை: ஓ வியாபகனான பகவானே, என்னால் யாதொன்று பிரச்னம் செய்யப்பட்டதோ அஃதப்படியே உளது. ஓமகேச்வரா, ஈண்டு உம்மிடமிருந்து உத்தரம் என்னால் பெறப்பட்டிலதே.

(முன்அத்தியாயத்தின் துவக்கத்தில் இராமன் சிவபெருமானை நோக்கி ஓ ஸ்வாமி, மூர்த்தராயும் பரிச்சின்னராயும் காணப்படும் நீர் பஞ்சபூதாதி ஸகல சராசரமாய் இருக்கிறீர் என்பது எங்ஙனம் பொருந்துவது? இவ்வுண்மையை எனக்குரையும் என்று பிரச்னை செய்தான். ஈண்டு ''யாதொன்று'' என்றதனால் அச்சங்கையே என்பதறிக. ''அப்படியே உளது'' என்று கூறிப்பின்னர் ''உத்தரம் பெறப்பட்டிலதே'' என்றும் கூறியது, பொருண் முறையில் கூறியதையே கூறுதலாகிய குற்றமேயெனின் இறைவனிடமுள்ள பக்திச் சிறப்பினாலும் தத்துவஞானத்திலுள்ள அதிக ஆதரவினாலும் அங்ஙனம் கூறினமையின், குற்றம் யாதும் இல்லையெனும், சாஸ்திர வரம்பறிக.)

**பரிச்சிந்ந பரீமாணே தேஹேபகவதஸ்தவ**
**உத்பத்திஸ்ஸர்வபூதாநாம்ஸ்திதிர்வவிலய:கதம் 02**

(பொ-ரை): பகவனான உம்முடைய பரிச்சின்ன பரிமாணம் உடையதாகிய தேகத்தில் ஸகல பூதங்களின் தோற்றநிலை ஒடுக்கங்கள் எப்படி?

(''பரிச்சின்ன பரிமாணம் உடையதாகிய'' என்றதனால் ஏகதேசமாயுள்ள அதாவது சடை சந்திரகலை தரித்து வெண்ணிறம்பெற்று விளங்கும் திவ்விய சரீரத்தில் என்பது அறிக. பரப்ரும்மமாகிய இறைவனிடமிருந்து சகல சராசரங்களும் உண்டாகி நின்று ஒடுங்குகின்றனவென்று தைத்திரீய உபநிடதம், ''யதோவாஇமாநிபூதாநி ஜாயந்தேயேந ஜாதாநி ஜீவந்தியத்ப்ரயந்த்ய பிஸம்விஸந்தி''''எவனிடமிருந்து இப்பூதங்கள் உதிக்கின்றனவோ, தோன்றினவை எவனால் ஜீவிக்கின்றனவோ, எதனிடம் ஒடுங்கு கின்றனவோ'' 'ஜந்மாத்யஸ்யத:' என்பது முதலிய சுருதி சூத்திரங்களால் போதிக்கப்படுகின்றது.

பரமாத்மாவே ஈண்டு திவ்விய சரீரத்தோடு எதிரில் சந்நிதிகொண்டிருப்பவன் அங்ஙனமாயின், தனக்கெதிரில் ஏகதேசத்தில் வீற்றிருக்கும் ஈசன்சரீரத்திலிருந்து சகலசராசரங்களும் தோன்றி நின்றொடுங்குவது எங்ஙனமென்ற ஆசங்கை ராமனுக்கு உதித்ததென்க.

எதிரில் காணப்படும் சிறியபரிமாணமுள்ள வஸ்துவிலிருந்து மிக்கவிரிந்துள்ள இச்சராசரம் தோன்றி நின்று ஒடுங்குகின்றன என்பது ஒரு சிறுகுடத்தினின்று பெரியமலைதோன்றி நின்று ஒடுங்குகின்றது என்றால் எங்ஙனம் சங்கிக்கக்கூடியதோ அங்ஙனமே ஆதலால் ஈண்டு சங்கை நிகழ்ந்தது.)''

**ஸ்வஸ்வாதிகா ரஸம்பத்தா:கதம் நாமஸ்திதா:ஸுரா**
**தேஸர்வேத்வம் ககம்தே புவநாதி சதுர்த்தச 03**

**(பொ-ரை):** தத்தமது அதிகாரத்தோடு கூடியவர்களான தேவர்கள் உமது தேகத்தினில் எங்ஙனம் இருக்கின்றவர் ஆகின்றனர். ஓ தேவா, அவர்கள் எல்லோரும் பதினான்கு புவனங்களும் எங்ஙனம் உமது ஸ்வரூபமாகும்.

(ஈண்டும் பரிச்சின்ன பரிமாணம் உடையதாகிய இறைவனது தேகத்தில் பற்பல வகைகளாகிய அதிகாரங்களை உடைய தேவர்கள் எல்லோரும் இருக்கின்றதும், அத்தேவர்களும் சகல சராசரங்களும் இறைவனோடு பேதமற்று இருத்தலும் எங்ஙனம்? என்று ராமனால் ஆசங்கிக்கப்பட்டது என்பது உணர்க.)

**த்வத்தஸ்ஸ்ருத்வாபிதேவாத்ரஸந்தேஹோமேமஹாநபூத்**
**அப்ரத்யாயிதசித்தஸ்ய ஸம்சயம்சேத்துமர்ஹஸி 04**

*(பொ-ரை): ஓ மஹாதேவா, உம்மிடம் சிரவணம் செய்தும் இவ்விஷயத்தில் எனக்கு மகத்தாகிய சந்தேகம் இருக்கின்றது. நிச்சயம் இன்னதென்று உணராத சித்தமுடையவனான என்னுடைய சமுசயத்தை நீரன்றோ நீக்கத்தக்கவர் ஆகின்றீர்.*

*("உம்மிடம் சிரவணம் செய்தும்" என்றதனால் இறைவனுக்கு உபதேசத்திறமையின் குறை சங்கிக்கக் கூடியதல்ல. மற்று சங்கையின் பெருமை மாத்திரம் அறியற்பாலது. அங்ஙனம் இராவிடில் இச்சந்தேகத்தை நீங்கச் செய்யும் திறமுடையவர் நீரே என்று விளங்கும் பிந்திய வாக்கியத்தோடு முரணுவது ஆகும் என்க.)*

**சிவபெருமான் அருளியதாவது:**

**வடபீஜேஸுஸூக்ஷமேபி மஹாவடத ருர்யதா**
**ஸர்வதாஸ்தேந்யதா வ்ருக்ஷ:குத ஆயாதிதத்வத 05**

*(பொ-ரை): மிக்கச் சூக்குமமாய் உள்ளதாயினும் ஆலம் விதையதனில் எப்போதும் எப்படி பெரிய ஆலமரமானது உளதோ அல்லாவிடில் அம்மரம் எதனிடமிருந்து வருகின்றது? அக்காரணத்தைச் சொல்வாயாக.*

**தத்வந்மமதநௌ ராமபூதாநாமா கதிர்லய:**
**மஹாஸைந்தவ பிண்டோபிஜலேக்ஷிப்தோவிலீயதெ. 06**

**நத்ருஸ்யதேபுந: பாகாத்தத ஆயாதிபூர்வவத்**
**ப்ராத: ப்ராதர்யதா லோகோஜாயதே ஸூர்யமண்டலாத. 07**

**ஏவம்மத்தோ ஜகத்ஸர்வம் ஜாயதேஸ்திவிலீயதே**
**மய்யேவஸகலம்ராம தத்வஜ்ஜாநீஹி ஸுவ்ரத 08**

*(பொ-ரை): ஓ ராமனே, அதுபோலவே எனது தேகத்தில் பூதங்களின் தோற்றலயங்கள், பெரிய உப்புத்திரளாயினும் நீரில் போடப்பட்டதாய்க்கொண்டு ஒடுங்குகின்றது. காணப்படுகின்ற தில்லை. மீண்டும் காய்ச்சுதலால், முன்போல் அந்நீரினின்றும்*

உண்டாகின்றது; தினந்தோறும் காலையில் எப்படி கிரணமானது சூரிய மண்டலத்தினின்றும் உண்டாகின்றதோ இங்ஙனமே என்னிடத்தினின்றும் சகலஜகமும் தோன்றுகின்றது, நிற்கின்றது, ஒடுங்குகின்றது, நல்லொழுக்கம் உடையனாகிய இராமனே, அவ்வாறு என்னிடத்திலேயே சகலமும் என்றறிக.

**இராமர் வேண்டியது:**

**கதிதேபி மஹாபாகதிக்ஜடஸ்ய யதாதிசி**
**நிவர்த்ததே ப்ரமோநைவ தத்வந்மமகரோமிகிம் 09**

*(பொ-ரை): ஓ மஹாமஹிமை உடையோனே, சொன்னாலும் கூட திசைப்பிரமம் உடையவனுக்குத் திசையிலுள்ள மயக்கம் எப்படிநீங்குகின்றது இல்லையோ அதுபோலவே எனக்குமுளது யான் யாது செய்வேன்?*

**சிவபெருமான் சொன்னதாவது:**

**மயிஸர்வம் யதாராம ஜகதேதச் சராசரம்**
**வர்த்ததே தத்தர்சயாமி நத்ரஷ்டும் க்ஷமதேபவாந் 10**

**திவ்யம்சக்ஷு: ப்ரதாஸ்யாமிதுப்யம் தசரதாத்மஜ**
**தேந பச்யபயம் த்யக்த்வாமத் தேஜோ மண்டலம்த்ருவம் 11**

*(பொ-ரை): ஓ ராமா, இச்சராசரமாகிய ஜகமெல்லாம் என்னிடம் எப்படி உள்ளதோ அதனைக் காண்பிக்கின்றேன் நீ பார்க்கச் சக்தியுடையவன் அல்லனாகின்றாய், தசரதன் தநயனே, உனக்குத் திவ்விய நேத்திரத்தைத் தருகின்றேன். அதனால் பயத்தை விடுத்து நிச்சயமாயுள்ள எனது தேஜோ மண்டலத்தைப் பார்ப்பாயாக.*

**சூதர் சொன்னதாவது:**

**நசர்மசக்ஷுஷாத்ரஷ்டும் சக்யதே மாமகம்மஹ:**
**நரேணவாஸுரேணாபி தந்மமாநுக்ரஹம்விநா 12**

*(பொ-ரை): எனது அச்சோதியானது எனது அநுக்கிரஹமின்றி மனிதனாலாவது தேவனாலாவது மானிட தேகத்தில் அமைந்த கண்ணினால் பார்க்கக்கூடியது ஆகின்றதில்லை.*

**இத்யுக்த்வரப்ரததௌதஸ்மை திவ்யம் சக்ஷுர்மஹேஶ்வர:**
**அதாதர்ஶயதேதஸ் மைவக்த்ரம் பாதாலஸந்நிபம் 13**

**வித்யுத்கோடிப்ரதீகாஶம் அதிபீமம் பயாவஹம்**
**தத்த்ருஷ்ட்: வைவபயாத்ராமோ ஜாநுப்யாமவநீம்கத 14**

*(பொ-ரை): இங்ஙனம் சொல்லி மஹேச்வரன்; அந்த ராமனுக்கு திவ்யநேத்திரந் தந்தார். பின்னர் மின்னல்கொடிபோல் ஜ்வலிக்கின்றதும் மிக்கபயங்கரமாய் உள்ளதும் பாதாளம்போற் காணப்படுகின்றதுமான வாயை அந்த ராமனுக்குக் காண்பித்தனர். அவ்வாயைப் பார்த்ததும் ராமன் பயத்தினால் முழங்கால்களால் பூமியில் விழுந்தனன்.*

*(ஈண்டு, முழங்கால்களால் என்றது முழங்கால் படிய என்று கொள்க.)*

**ப்ரணம்யதண்டவத் பூமௌதுஷ்டாவ சபுந:புந:**
**அதோத்தாய மஹாவீரோ யாவதேவ ப்ரபச்யதி 15**

**வக்த்ரம்புரபிதஸ் தாவதந்தர் ப்ரம்ஹாண்டகோடய:**
**சடகா இவலக்ஷ்யந்தேஜ்வாலாமாலாஸ மாகுலா: 16**

*(பொ-ரை): பூமியில் தண்டம்போல விழுந்து நமஸ்கரித்து மீண்டும் மீண்டும் தோத்திரம் செய்தான். பின்னர் மஹாவீரனாகிய ராமன் எழுந்து திரிபுரமெரித்த இறைவனது வாயைப் பார்க்கவே வாய்க்குள் சுவாலைமாலைகளால் வியாபிக்கப்பட்டுப் பிரமாண்டகோடிகள் ஊர்க்குருவிகளைப்போலக் காணப்பட்டன.*

**மேருமந்தர விந்த்யாத்யாகிர யஸ்ஸப்தஸாகரா:**
**த்ருஸ்யந்தே சந்த்ர ஸூர்யாத்யா: பஞ்சபூதாநிதேஸுரா: 17**

**அரண்யாநிமஹாநாகா: புவநாநி சதுர்த்தச**
**ப்ரதிப்ரம் ஹாண்டமே வம்தத்ருஷ்ட்வாத சரதாத்மஜ: 18**

**ஸுராஸுராணாம் ஸங்கராமாம்ஸ் தத்ரபூர்வாபராநபி**
**விஷ்ணோர்தசாவதாராம் ஸ்சதத்கர் நவ்யாநுய பித்விஜா: 19**

**பராபவாம்ஶ்ச தேவாநாம் புரதாஹம் மஹேசிது:**
**உத்பத்யமாநாநுத்பந் நாந்ஸர்வா நபிவிநச்யத: 20**

**த்ருஷ்ட்வாராமோ பயாவிஷ்ட: ப்ரணாநாமமுஹுர்முஹு:**
**உத்பந்த தத்வஞானோபி பபூவ ரகுநந்தன:** 21

(பொ-ரை): மேரு மந்தரம் விந்தியம்முதலிய மலைகளும், ஏழு சமுத்திரங்களும், சந்திரசூரியாதிகளும், பஞ்சபூதங்களும், அத்தேவர்களும், வனங்களும், மறைநகர்களும், பதினான்கு புவனங்களும், காணப்பட்டன. ராமன் இவ்வாறே ப்ரம்மாண்டம் தோறும் கண்டு நடந்ததும் நடப்பதுமாகிய விஷ்ணுவினுடைய பத்து அவதாரங்களையும், அந்த அவதார கிருத்தியங்களையும், தேவாசுரர்களுடைய யுத்தங்களையும் தேவர்களுடைய தோல்விகளையும், மஹேச்வரனுடைய புரதகனத்தையும், உண்டாகின்றவர்களும் உண்டானவர்களும் நசிக்கின்றவர்களுமாகிய எல்லோர்களையும் பார்த்து ராமன் பயங்கொண்டவனாய் அடிக்கடி நமஸ்கரித்தான். பின்னர் ராமன் தத்துவஞானமும் உதிக்கப்பெற்றான்.

*(இங்ஙனம் பரமேஸ்வரனிடம் சடசேதனங்களாகிய பாசபசுக்கள் எங்ஙனம் அடங்கியுள்ளன என்னும் விஷயத்தில் உள்ள அஸம்பாவனையால் தத்துவஞானம் பிரதிபந்திக்கப் பட்டிருந்தது. அங்ஙனமாகிய பிரதிபந்தமானது திவ்ய நேத்திரத்தால் பகவானுடைய தேகத்தில் சகல சராசரங்களையும் நேரில் கண்டு தெளிந்தமையால் ராமனுக்கு ஆசங்கை நீங்கவே தத்துவஞானம் உதித்தவன் ஆனான் என்றது அறிக.)

**இராமன் வேண்டியதாவது:**

**அதோபநிஷதாம் ஸாரைரர்த்தைஸ் துஷ்டாவசங்கரம்**
**தேவப்ரபந்நார்த்தி ஹரப்ரஸீதப்ரஸீத விச்வேச்வரவிச்வவந்த்ய** 22
**ப்ரஸீதகங்காதர சந்த்ரமௌளே மாம்த்ராஹிஸம்ஸார பயாதநாதம்**

(பொ-ரை): பிறகு உபநிடத ஸாரங்களாகிய துதிகளால் சங்கரனை தோத்திரம் செய்தான். ராமன் சொன்னதாவது ஓ தேவா, சரணமடைந்தவரது பீடையை நீக்கும் இறைவா, அருள் செய்யும் சகலங்களுக்கும் ஈசனே, ஸகலர்களாலும் நமஸ்கரிக்கப்படுவோனே, சந்திரகலை தரித்த சிரமுடையவனே அருள் செய்யும். ஏனைய நாதன் இல்லாதவனான என்னை சம்சார பவபயத்தினின்றும் காப்பாற்றும்.

**த்வத்தோஹிஜாதம ஜகதேதத்தீசத்வய்யேவ பூதாநிவஸந்திநித்யம்**
**த்வய்யேவசம்போவிலயம்ப்ரயாந்தி**
**பூமௌயதாவ்ருக்ஷலதாதயோபி 23**

*(பொ-ரை): ஈஸ்வரா, இந்த ஜகமானது உம்மிடம் இருந்தே தோன்றியது. உண்டான சராசரங்கள் எப்போதும் உம்மிடத்திலேயே ஸ்திதிபெறுகின்றன. ஓ சம்போ, பூமியில் மரம் கொடிமுதலியன எப்படியோ அப்படியே உம்மிடத்திலேயே ஒடுக்கம் அடைகின்றன.*

**பிரமாணம் :**

"யதோவாஇமாநிபூதாநி ஜாயந்தேயேந
ஜாதாஜீவந்தியத் ப்ரயந்த்ய பிஸம்விசந்தீதி"

*(இ-ள்): "எதனிடமிருந்தே இப்பூதங்கள் தோன்றுகின்றனவோ, தோன்றின எதனாலேயே ஜீவிக்கின்றனவோ, எதனை அடைந்து ஒடுங்குகின்றனவோ". என்பதாதி யஜுச்ருதி வாக்கியங்களின் பொருளைக் காண்க.*

**ப்ரம்ஹேந்த்ரருத்ராஶ்சமருத்கணாஶ்ச**
**கந்தர்வயக்ஷாஸுர ஸித்தஸங்கா: 24**
**கங்காதிநத்யோவருணாலயாஶ்சவஸந்தி**
**சூலிம்ஸ்தவவக்த்ரமந்தி**

*(பொ-ரை): ஓ சூலமேந்திய இறைவனே; பிரும்மா, இந்திரன், ருத்திரன், தேவர்கூட்டங்கள், கந்தருவர், யக்ஷர், அசுரர், சித்தர் இவர்கள் கூட்டங்களும் கங்காதி நதிகளும் ஸமுத்திரங்களும் உமது வாய்க்கருகில் வஸிக்கின்றன.*

*(குறிப்பு :இங்கு வாய்க்கருகில் வசிக்கின்றன என்றதனால் பிரளயகாலத்தில் சகல, சராசரங்களையும் தன்னிடம் ஒடுங்கச் செய்து அடக்கிக் கொள்வோர் இவ்விறைவன் என்பது விளங்குகின்றது.)*

**பிரமாணம் : கடவல்லியுப நிடதம்**

**யஸ்யப்ரஹ்ம சக்ஷத்ரம்ச உபேபவத ஒதா**
**தஸ்மைமஹாக்ரா ஸாய வைநம்**

ஜகத்ப்ரதிஷ்டா தேவர்ஷே ப்ருதிவ்யப் ஸுப்ரலீயதே
தேஜஸ்யாப: ப்ரலீயந்தே தேஜோவா யௌப்ரலீயதே
வாயு: ப்ரலீயதேவ்யோம்நி ததவ்யக்தே ப்ரலீயதே
அவ்யக்தம் புருஷேப்ரஹ்மந் நிஷ்களே ஸம்ப்ரலீயதே
புருஷாந்நபரம் கிஞ்சித் ஸாகாஷ்டா ஸாபராகதி:

*(இ-ள்):* எவனுக்கு ப்ரம்ஹ க்ஷத்ரமாகிய சகல ப்ரபஞ்சமும் அந்நமோ பொருங்களத்தனாகிய அவ்விறைவனுக்கு நமஸ்காரம். ஓ தேவருஷியே, உலகத்துக்கு ஆதாரமாகிய ப்ருதிவி ஜலத்தில் லயிக்கின்றது, தேஜஸில் ஜலம் லயிக்கின்றது. தேஜஸ் வாயுவில் லயிக்கின்றது. வாயு ஆகாயத்தில் ஒடுங்குகின்றது, அவ்வாகாயம் அவ்யக்தத்தில் ஒடுங்குகின்றது. ஓ அந்தணரே, அவ்யக்தம் நிஷ்களனாகிய புருஷனிடம் ஒடுங்குகின்றது. புருஷனிலும் பரம் யாதுமில்லை அவனே எல்லை, அவனே பரகதியாம் - என்பதாதி உபநிஷத் புராண மொழிகளாலும் உணர்க.

**தவந் மாயயாகல் பிதமிந்து மௌளே**
**த்வய்யேவத்ருஸ்யத்வமுபை**
**தி விஸ்வம் ப்ராந்த்யாஜந: பஸ்யதி ஸர்வமேதச்**
**சுக்தௌயதா ரூப்யமஹிம்சரஜ்ஜௌ 25**

*(பொ-ரை):* ஓ சந்த்ரகலாதரா, ஜகமெல்லாம் உமது மாயையாற் கற்பிக்கப்பட்டதாய்க் கொண்டு உம்மிடத்திலேயே காணப்படுந் தன்மையை அடைகின்றது. ஜனமானது இப்பியில் வெள்ளியையும் கயிற்றில் அரவத்தையும் போல இதனையெல்லாம் ப்ராந்தியால் பார்க்கின்றது. (ப்ராந்தி-மனப்பிரமை)

குறிப்பு : (இங்கு உமது மாயையால் என்றதனால் உமக்கு வசப்பட்டிருக்கும் மாயையால் என்பதும், உம்மிடத்திலேயே என்றதனால் ஸர்வாதாரன் பரம்பொருளாகிய இவ்விறைவனே என்பதும், சிவம் தோன்றாது உலகமே தோன்றுதற்குக்காரணம் சாம்பவியாகிய மாயையே என்பதும், காண வேண்டியதாகிய இப்பியையும் கயிற்றையும் விடுத்து அவைகளில் வெள்ளியையும் அரவத்தையும் காண்பதற்குப்போலக் காணவேண்டிய சிவத்தை விடுத்து உலகத்தைக் காண்பதற்குக் காரணம் ப்ராந்தியே யென்பதும் அறிக.

சிவனையறிந்தோர்க்கு ப்ராந்தி ஏதுவாகிய ஆணவம் நீங்கினமையால் உலகம் காணப்படாமல் சிவமே தோன்றுமென்க. இதனை, ''பரஞானத்தால் பரத்தைத் தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்'' என்பதாதி முன்னோர் மொழியாலும் உணர்க.

**தேஜோபிராபூர்ய ஜகத்ஸமக்ரம் ப்ரகாசமாந:குருஷேப்ப்ரகாசம்
விநாப்ரகாசம் தவதேவதேவ நத்ருச்யதே
விஶ்வமிதம்க்ஷணேந 26**

*(பொ-ரை):* ஓ தேவதேவா, ஸகல ஜகத்தையும் தேஜஸ்களால் வியாபித்து விளங்குகின்றவராய்க் கொண்டு விளக்கத்தைச் செய்கின்றீர். உமது ப்ரகாசமின்றி இப்பிரபஞ்சமானது ஓர் கணப்போதும் காணப்படுகின்றதில்லை.

**சூதஸம்ஹிதை**

ஆதித்ய கந்த்ரா நலதாரகா தயாநபாந்தி யஸமிந்நநிஶம்மஹாநிதம் ப்ரகாஶமாநம் தமநுப்ரபாந்தி ப்ரபாஸமஸ்யைவஹிநேத்ரேஷாம்.

*(இ-ள்):* ''அங்குச் சூரியன் விளங்குகின்றதில்லை, சந்திர நக்ஷத்திரமுமல்ல, இடி மின்னல்களும் விளங்குகின்றதில்லை, இவ்வக்கினி எங்ஙனம் விளங்குவது. விளங்குகின்றனவனாகிய அவனையே அநுஸரித்து விளங்குகின்றன. அவனுடைய விளக்கத்தாலேயே இதெல்லாம் விளங்குகின்றது'' இவனுக்கே விளக்கம். ஏனையோர்க்கு இல்லை.

**அல்பாஶ்ரய நைவ ப்ருஹந்தாமாததம்
ததேணுசேரோ நஹிவிந்த்யசைலம்
ததவக்த்ரமாத்ரே ஜகதேததஸ்திதவநமாய
யைவேதிசநிஶசிநோமி 27**

*(பொ-ரை):* சிறிய இடமானது பெரிய பொருளைத் தரிக்கின்றதில்லை. ஒரு அணு விந்தியகிரியைத் தூக்காதன்றோ இந்த ஜகமானது உமது முகத்திலேயே இருக்கின்றதைக் கவனித்தால் உமது மாயையே இங்ஙனமென்று நிச்சயிக்கின்றேன்.

**ரஜ்ஜௌபுஜங்கோ பயதோ யதைவ நஜாயதே நாஸ்திருசைதிநாஶம்**
**த்வந்மாயயா கேலமாத்தரூபம் ததைவவிசவம் த்வயிநீலகண்ட: 28**

*(பொ-ரை): கயிற்றினில் அரவம் கேவலம் பயத்திற்கு மாத்திரம் ஏதுவாகின்றதேயன்றி எப்படி தோற்றம், நிலை, ஒடுக்கம் இவை இல்லாததோ, அப்படியே ஓ நீலகண்டரே, உம்மிடம் ஸகலமும் கேவலம் மாயையாலேயே உருக்கொண்டுள்ளது.*

**விசார்யமாணே தவயச்சரீரம் ஆதாரபாவம் ஜகதாமுபைதி**
**ததப்யவச்யம் மதவித்யயைவ பூர்ணஶ்சிதாநந்த மயோயதஸ்த்வம் 29**

*(பொ-ரை): விசாரித்துப் பார்க்குங்கால் உமது தேஹம் உலகங்களுக்கு ஆதாரமாய் இருக்கின்றது என்பது எனது அவித்தையிலேயேயாம். ஏனெனில் நீர் பரிபூரணராகிய சிதானந்தமயர் அன்றோ.*

**பூஜேஷ்ட பூர்த்தாதி வரக்கிரியாணாம் போக்து, பலம யச்சவஸி சஸ்தமேவ**
**ருஷைத்தேவம் வசனம் புராரேதவத்தோஸ்தி பிந்நம் நசகிஞ்சி தேவ 30**

*(பொ-ரை): பூஜை, யாகம், தடாகம், அன்னநஸத்திர ப்ரதிஷ்டை முதலிய புண்ணியகர்மங்களின் பயனைப் புசிப்பவர்களுக்கு ஸ்வர்க்காதி பயனை கொடுக்கின்றாய் என்பதும் பிரஸித்தமே. இங்ஙனம் இவ்வசனமும் பொய்யே ஓ பரமேஶ்வரா உம்மிலும் பின்னமாயுள்ள பொருள் சிறிதுமில்லை.*

*(இதனால் முதல்வன் சீவர்கள் மாட்டு அபின்னமாக இருந்து அவரவர்கள் கன்மத்தின்படி எவற்றையும் முடிப்பானாகலின், முதல்வனுக்கு அந்நியமாகவொரு செயலுமில்லை யென்பார் "உம்மிலும் பின்னமாயுள்ள பொருள் சிறிதுமில்லை" யென்றனர்.)*

ஊட்டுவிப்பானு முறக்குவிப்பானும் இங்கொன்றொடொன்றை
மூட்டுவிப்பானு முயங்குவிப்பானு முயன்றவினை
காட்டுவிப்பானும் இருவினைப்பாசக் கயிற்றின்வழி
ஆட்டுவிப்பானும் ஒருவனுண்டே தில்லையம்பலத்தே.

எனப் பட்டினத்துச் சுவாமிகள் திருவாக்காற் காண்க.

**அஞ்ஞானமூடா முநயோவதந்தி**
**பூஜோபசாராதிபஹி க்ரியாபி**
**தோஷம்கிரீசோ பஜதீதிமித்யாகுதஸ்**
**த்வமூர்த்தஸ்யதுபோக லிப்ஸா 31**

*(பொ-ரை): சிவபெருமான் பூஜோபசார முதலிய வெளிக்கிரியைகளால் பிரீதியடை கின்றான் என்று அஞ்ஞான மூடர்களாகிய முனிவர்கள் சொல்லுகின்றனர். இது மித்தையே. அமூர்த்தனுக்கு போகவிருப்பம் எதனால் நிகழும்.*

*(இதனால் வெளிக்கிரியைகள் சகலவடிவினனுக்கே வேண்டுமெனவும், நிஷ்களனுக்கு வேண்டியதில்லை யெனவும் உள்ளன்பு இலாதவர்கட்கு வெளிப்பூசையும் பிரயோசனமில்லை யெனவும் பெறப்பட்டது.) இதனை,*

"கோடித் தீர்த்தங் கலந்து குறித்தவை
ஆடி னாலும் அரனுக்கு அன்பில்லையேல்
ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி
மூடி வைத்திட்ட மூர்க்கனோடு ஒக்குமே".

என்ற தமிழ்வேதத்தால் உணர்க.

**கிஞ்சித்தளம்வாசுளுகோதகம்வாயத்த்வம்**
**மஹேசப்ரதிக்ருஹ்ய தத்ஸே**
**த்ரைலோக்யலக்ஷ்மீமபி தஜ்ஜநேப்ய**
**ஸர்வம்த்வவித்யாக்ருதமே வமந்யே 32**

*(பொ-ரை): ஓ மஹேசா, நீர் ஜநங்களிடமிருந்து கொஞ்சம் பத்திரத்தையாவது சொற்பதீர்த்தத்தையாவது பெற்றுக்கொண்டு மூவுலக ஸாம்ராஜ்ஜியத்தையும் கொடுக்கின்றீர் என்பது யாதொன்று உளதோ அஃதெல்லாம் அவித்தையால் செய்யப்பட்டது என்றே எண்ணுகின்றேன்.*

குறிப்பு : (முதல்வனை அனன்னியமாகப் பாவித்துச் சிவோகம் பாவனையிலிருந்து ஒரு காரியம் செய்யவேண்டுமே யொழிய அன்னியமாக எண்ணிச் செய்தல் அப்பிரயோசனம் என்பார். அவித்தை என்றார்.)

**வ்யாப்நோஷிஸர்வாவிதி சோதிஶஶ்சத்வம் விச்வமேக:**
**புருஷ: புராண;**
**நஷ்டேபிதஸ்மிந்ஸ்தவநாஸ்தி ஹாநிர்கடேவிநஷ்டே**
**நபஸோயதைவ 33**

(பொ-ரை): புராணபுருஷராகிய நீர் ஒருவரே ஸகல திசை வெளிகளையும் திசைகளையும் ஸகல ஜகத்தையும் வியாபிக்கின்றீர். பிரபஞ்சம் நசிக்கினும் குடம் நசித்தால் ஆகாயத்திற்குப் போலவே உமக்கு ஹானியில்லை.(ஹானி-கேடு)

**யதைகமாகாசகமர்க்கபிம்பம் க்ஷுத்ரேஷு**
**பாத்ரேஷுஜலாந்விதேஷு**
**பஜத் யநேகப்ரதிபிம்பபாவம் ததாத்வமந்த: கரணேஷு**
**தேவ 34**

(பொ-ரை): ஆகாயத்திலுள்ள ஸூர்யமண்டலம் ஒன்றே எப்படி சிறிய ஜலபாத்திரங்களில் பலபிரதிபிம்பத் தன்மையைப் பெறுகின்றதோ அப்படியே ஓ தேவனே, நீர் அந்தக்கரணங்களில் ஆகின்றீர்.

**ஸுஸர்ஜநேவாப்யவநேவிநாசே**
**விச்வஸ்ய கிஞ்சித்தவநாஸ்திகார்யம்**
**அநாதிபிர்தேஹப்ருதாமத்ருஷ்டை**
**ஸ்ததாபிதத்ஸ்வப்நவதாதநோஷி 35**

(பொ-ரை): எல்லாப் பிரபஞ்சத்தின் ஆக்கல் காத்தல் அழித்தலிலும் உமக்கு செய்ய வேண்டிய கிரியை சிறிதுமில்லை. அப்படியாயினும் அதனையும் அனாதிகளாயுள்ள தேகிகளுடைய அதிருஷ்டங்களால் கனாவைப் போல நடைபெறச் செய்கின்றீர்.

**ஸ்தூலஸ்ய ஸூக்ஷ்மஸ்ய ஜடஸ்ய தேஹத்வயஸ்ய**
**சம்போநசிதம் விநாஸ்தி**

**அதஸ்த்வதாரோபணமாதநோதிஸ்ருதி:**
**புராரேஸுகதுக்கயோஸ்ஸதா 36**

*(பொ-ரை): சம்புவே, ஜடமாகிய ஸ்தூலமும் ஸூக்ஷமமு மாகிய இரண்டு தேகங்களுக்கும் ஆத்மாவின்றி சைதன்யமானது இல்லை. ஓ புரம் எரித்த இறைவரே, ஆதலால் வேதமானது எப்போதும் சுகதுக்கங்களுக்கு உமது ஆரோபண சம்பந்தத்தை ப்ரதிபாதிக்கின்றது.*

**நமஸ்ஸச்சிதம்போதி ஹம்ஸாயதுப்யம் நம: காலகண்டாய**
**கலாத்மகாய**
**நமஸ்தேஸமஸ்தாக ஸம்ஹாரகர்த்ரேநமஸ்தே ம்ருஷாசித்த**
**வ்ருத்யைகபோக்த்ரே 37**

*(பொ-ரை): நித்தியபோத ஸமுத்திரத்திற்கு, ஹம்ஸப் பறவைபோலே உள்ளவராகிய, உமக்கு நமஸ்காரம். நீலகண்டரும் கலாஸ்வரூபருமாகிய உமக்கு நமஸ்காரம். ஸகல பாவங்களையும் சங்காரஞ் செய்வோராகிய உமக்கு நமஸ்காரம். பொய்யாகிய சித்தவிருத்திகளுக்கு ஸாக்ஷியாய் உள்ளவருமாகிய உமக்கு நமஸ்காரம்.*

**ஸூதர் சொல்லியதாவது:**

**ஏவம்ப்ரணம்யவிச்வேசம் புரத:ப்ராஞ்ஜலி ஸ்தித:**
**விஸ்மித: பரமேசாநம் ஜகதேரகுநந்தந: 38**

*(பொ-ரை): இவ்வாறு விச்வேசனை நமஸ்கரித்து எதிரில் அஞ்சலிபந்தஞ் செய்துகொண்டு நிற்கும் ராகவன் ஆச்சரியங் கொண்டவனாய்ச் சொன்னான்.*

**இராமர் சொன்னதாவது:**

**உபஸம்ஹர விஸ்வாத்மந் விஸ்வரூபமிதம் தவ**
**ப்ரதீதம் ஜகதைகாத்ம்யம் சம்போபவதனுகிரஹாத் 39**

*(பொ-ரை): ஓ விச்வரூபனே, உமது இவ்விச்வரூபத்தை அடக்கிக் கொள்வீராக. ஓ சம்புவே, உமது அனுக்கிரஹத்தால் ஜகம் தேகஸ்வரூபத்துவமானது விளங்கியது.*

**சிவபெருமான் அருளியதாவது:**

**பச்யராமமஹாபாஹோ மத்தோநாந்யோஸ்திகஶ்சந**
**இத்யுக்த்வோ பஸஞ்ஜஹ்ரேஸ்வதேஹே தேவதாதிகாந் 40**

*(பொ-ரை): ஓ ராமா, மஹாபாகுவே பார்ப்பாயாக, என்னிலும் அன்னியன் எவனுமில்லை என்று இங்ஙனம் சொல்லி தேவர் முதலியவர்களைத் தனது தேகத்திலேயே உபஸங்கரித்து கொண்டனர்.*

**மீலிதாக்ஷ: புநர்ஹர்ஷாத் யாவத்ராம: ப்ரபச்யதி**
**தாவ தேவகிரே: ஶ்ருங்கே வ்யாக்ரசர் மோபரிஸ்திதம் 41**

*(பொ-ரை): மூடிய கண்களை உடையவனாய் இராமன் ஸந்தோஷத்தோடுகூட மீண்டும் எவ்வளவில் பார்க்கலாயினனோ அவ்வளவிலேயே மலையின் கொடிமுடியில் புலித்தோல் மேலுள்ளவரும்,*

**ததர்சசந்த்ரவதநம் நீலகண்டம் த்ரிலோசனம்**
**வ்யாக்ரசர்மாம்பரதரம் பூதிபூஷிதவிக்ரஹம் 42**

**பணிகங்கணபூஷாட்யம் நாகயஞ்ஞோபவீதிநம்**
**வ்யாக்ரசர்மோத்தரீயம்ச வித்யுத்பிங்கஜடாதரம் 43**

**ஏகாகிநம் சந்த்ரமௌளிம் வரேண்யமபயப்ரதம்**
**சதுர்புஜம் கண்டபரசும் ம்ருகஹஸ்தம்ஜகத்பதிம் 44**

*(பொ-ரை): சந்திரன்போன்ற முகம் உடையவரும், நீலகண்டரும், முக்கண்ணரும், புலித்தோலாடை உடுத்தியவரும், விபூதியால் அலங்கரிக்கப்பட்ட தேஹமுடையவரும், ஸர்ப்பகங்கண ஆபரணத்தால் விளங்குகின்றவரும், ஸர்ப்பப்பூணூலுடையவரும், புலித்தோலை மேலாடையாகக் கொண்டவரும், மின்னலையொத்து ஜ்வலிக்கும் சடையைத் தரிக்கின்றவரும், ஒப்பற்ற ஒருவரும், சந்திரனைச் சிரஸில் தரிக்கின்றவரும், வரமளிப்பவரும், அபயமளிப்பவரும், நான்கு கைகளை*

உமை பாகரும், மானைக் கையிலேந்தியவரும் ஜகங்களுக்கு ஈசனுமாகிய இறைவனைக் கண்டான்.

**அதாஜ்ஞாய புரஸ்தஸ்ய ப்ரணம்யோ பவிவேஶ**
**அதாஹராமம் தேவேசோயத்யத் ப்ரஷ்டுமபீச்சஸி**
**தத்ஸர்வம்ப்ருச்ச ராமத்வம் மத்தோநாந்யோஸ்திதேகுரு: 45**

*(பொ-ரை): அந்த இராமன், பிறகு ஈசனென்று உணர்ந்து நமஸ்கரித்து அவருக்கெதிரில் உட்கார்ந்துகொண்டார். இறைவன் பிறகு இராமனை நோக்கி ஓ இராமனே, எவ்வெதனைக் கேட்க விரும்புகின்றனையோ அவ்வதனையெல்லாம் கேட்டுக் கொள்வாயாக உனக்கு என்னிலும் அந்நியராய் குரு இல்லையன்றோ என்றார்.*

*(ஏழாவது அத்தியாயம் முற்றிற்று.)*



முகலிங்க மூர்த்தி

# பிண்டோத்பத்தி கதனம் என்னும் எட்டாவது அத்தியாயம்

*வைராக்கியயோகம் - தேகத்தின் தோற்றம் அழிவுகளைப் பற்றி இராமர் வினவ, சிவபெருமான் அதற்கு நான்கு விதமான தேகநிலைகளைக் கூறி பிறப்பு, இறப்பு, இரகசியங்களை விளக்கி பரவைராக்கியத்தை ஏற்படுத்துகின்றார்.*

**இராமர் வேண்டியதாவது:**

**பாஞ்சபௌதிக தேஹஸ்ய சோத்பத்திர்விலயஸ்திதி:**
**ஸ்வரூபம் சகதம்தேஹே பகவந்வக்துமர்ஹஸி 01**

*பொழிப்புரை: பாஞ்சபௌதிகமாகிய ஸ்தூல தேஹத்திற்கு உத்பத்தி-ஸ்திதி-ஒடுக்கம்-தேகத்தில் ஸ்வரூபம் இவை எப்படி? ஓ பகவானே, நீர் சொல்லத் தக்கவராய் உள்ளவர்.*

**சிவபெருமான் கூறியதாவது:**

**பஞ்சபூதைஸ்ஸமாரப்தோதேஹோயம் பாஞ்சபௌதிக:**
**தத்ரப்ரதானம் ப்ருதிவீசேஷாணாம் ஸஹகாரிதா 02**

*(பொ-ரை): பாஞ்சபௌதிகமாகிய இத்தேஹமானது பஞ்ச பூதங்களால் உண்டாகியது. இச்சரீரத்தில் உள்ள பூதங்களுள் பிருதிவியே முக்கியம் இதர பூதங்களுக்கு அமுக்கியத்துவமே யுள்ளது.*

**ஜராயுஜோண்ட ஜஶ்சைவஸ்வேதஜஶ்சோத்பிதஸ்தத்ா**
**ஏவம்சதுர்வித: ப்ரோக்த:சேரஹாயம்பாஞ்சபௌதிக: 03**

*(பொ-ரை): பஞ்சபௌதிகமாகிய இப்பார்த்திவ தேஹமானது கருப்பையில் நின்றுண்டாவது, முட்டையில் நின்றுண்டாவது, புழுக்கத்தில் நின்றுண்டாவது, மேலே பேதித்துக்கொண்டு விதையில்நின்றுண்டாவது என்று இவ்விதம் நான்கு விதமாய்ச் சொல்லப்பட்டுள்ளது.*

**மானஸஸ்துபர: பரோக்த: தேவாநரமேவஸஸ்ம்ருத:**
**ததரவக்ஷ்யேப்ரதமத ப்ரதானத்வாத்ஜராயுஜம் 04**

*(பொ-ரை): மனம் எண்ணுகிறபடி உண்டாவதாய் மற்றோர் சரீரம் உள்ளதென்று சொல்லப்பட்டது. அது தேவர்களுக்கே கருதப்பட்டது அங்கு முக்கியமாய் இருத்தலால் ஜராயுஜத்தையே முதலில் சொல்லுகின்றேன்.*

**சுக்லஸோணிதஸம்பூதவ்ருத்திரே வஜராயுஜ:**
**ஸ்திரீணாம்கர்பாசயேசுக்லம் ருதுகாலேவிசேத்யதா 05**

*(பொ-ரை): சுக்லசோணிதங்களால் ஏற்பட்ட நிலைமை யுடையதே ஜராயுஜம் என்னப்படும். ருதுகாலத்தில் எப்போது ஸ்திரிகளின் கர்ப்பகோசத்தில் சுக்கிலம் பிரவேசிக்கின்றதோ,*

**ரஜஸாயோஷிதோயுக்தம் ததேவஸ்யாஜ்ஜராயுஜம்**
**பாஹுள்யாத்ரஜஸஸ்ஸ்த்ரீ**
**ஸ்யாத்ஸுக்லாதிக்யேபுமாந்பவேத் 06**

*(பொ-ரை): ஸ்த்ரீயின் சோணிதத்தோடு கலந்ததாய்க் கொண்டு அச்சுக்லமே ஜராயுஜம் ஆகின்றது. சோணிதம் விசேஷமாயிருந்தால் பெண்ணும், சுக்லம் விசேஷமாயின் ஆணும் உண்டாகும்.*

**சுக்லசோணிதயோஸ்ஸாம் யேஜாயதேதுநபும்ஸக:**
**ருதுஸ்நாதாபவேந்நாரீ சதுர்த்ததிவஸேதத: 07**
**ருதுகாலஸ்துநிர்திஷ்டஆஷோடசதினாவதி**

*(பொ-ரை): சுக்லசோணிதங்கள் ஸமமாய் இருக்கின் ஆணும் பெண்ணும் அற்றவனாய்த் தோன்றுகின்றான். ஸ்திரீ நான்காம் தினத்தில் ருது நீங்கிச் சுத்தையாவாள். பிறகு பதினாறுநாள் வரையில் ருதுகாலம் என்பது குறிக்கப்பட்டது.*

**தத்ராயுக்மதிநேஸ்த்ரீஸ்யா த்புமாந்யுக்மதினேபவேத் 08**

**ஷோடசேதிவஸேகர் போஜாயதேயதிஸுப்ருவ:**
**சக்ரவர்த்தீததாராஜா ஜாயதேஸநஸம்சய 09**

*(பொ-ரை): ஆண்டு ஒற்றைப்படைதினத்தில் பெண்ணும், இரட்டைப்படைதினத்தில் ஆணும் தோன்றும். அழகுவாய்ந்த மங்கைக்குப் பதினாறாவது தினத்தில் கர்ப்பம் ஏற்படுமாயின் அந்தப்பிரஜை சக்கிரவர்த்தியாகவோ அல்லது அரசனாகவோ பிறக்கின்றான்.*

**ருதுஸ்நாதாயஸ்யபும்ஸ ஸாகாங்க்ஷமமுகமீக்ஷதே**
**ததாக்ருதிர்பவேத் கர்ப்பஸ்த வத்பச்யேதஸ்வாமி மிநோ**
**முகம் 10**

**(பொ-ரை):** *ருதுநீங்கி ஸ்நாநம் செய்தபின் மங்கை எந்தப் புருஷனது முகத்தை விருப்புற்று நோக்குகின்றாளோ, அந்தப் புருஷனது உருப்போன்ற உருக்கொண்ட தாய் கர்ப்பம் ஏற்படும் ஆதலால், தனது கணவனது முகத்தையே பார்க்க வேண்டும்.*

**யாஸ்த்ரீசர்மாவ்ருதிஸ்ஸூக்ஷ்மா ஜராயுஸ்ஸாநிகத்யதே**
**சுக்லசோணிதயோர்யோகஸ் தஸ்மிந்நேவபவேத்யத 11**

**(பொ-ரை):** *ஸ்த்ரீயின் தோலுருவமாகிய பையானது சிறிதாய் யாதொன்று உளதோ அது ஜராயு என்று சொல்லப்படுகின்றது. யாதொருகாரணத்தால் அதிலேயே சுக்லசோணிதங்களின் ஸம்பந்தம் ஏற்படுகின்றதோ,*

**தத்ரகர் போபவேத்யஸ்மாத்தேநப்ரோக்தோஜராயுஜ**
**அண்டஜா பக்ஷிஸர்ப்பாத்யா ஸ்வேதஜாமசகாதய: 12**

**(பொ-ரை):** *அங்கு கர்ப்பம் உண்டாகின்றமையால் ஜராயுஜம் என்று சொல்லப்பட்டது, அண்டஜங்கள் பறவை பாம்பு முதலியன. ஸ்வேதஜங்கள் கொசுகு முதலியன.*

**உத்பிஜ்ஜாவ்ருக்ஷகுல்மாத்யா: மாநஸாஸ்சஸுர்ஷய:**
**ஜந்மகர்ம வசாதேவ நிஷிக்தம் ஸ்மரமந்திரே 13**
**சுக்லம் ரஜஸ்ஸமாயுக்தம் ப்ரதமே மாஸிதத்த்ரவம்**

**(பொ-ரை):** *உத்பிஜ்ஜங்கள் மரம் செடி கொடி முதலியன மனதிற் றோன்றிய எண்ணம் எடுக்கும் உருவமுடையதேகம், தேவருஷிகள் ஸ்திரீகளின் யோநிவாயில் சென்ற சுக்லமானது ஜன்ம கர்ம பலத்தால் சோணிதத்தோடு கூடிக் கலந்ததாகின்றது. அந்தத்ரவமானது முதலாவது மாசத்தில்,*

**புத்புதம் கலலம் தஸ்மாத்தத பேசீ பவேதிதம் 14**
**பேசீகனம் த்விதீயேது மாஸிபிண்ட: ப்ரஜாயதே**

*(பொ-ரை): நீர்க்குமிழ் போலாய் பின்னர் சற்று இறுகியதாய் பிறகு கருப்பை போன்ற வட்டமதாய் ஆகும். இரண்டாவது மாதத்தில் அந்தப்பை வடிவம் சற்றுக்கட்டிப்பட்டதாய்க் கொண்டு அந்த இறுகிய த்ரவமானது பிண்டமாகின்றது.*

**கராங்க்ரி சீர்ஷகாதீனித்ருதீயேஸம்பவந்திஹி** **15**
**அபிவ்யக்திஶ்ச ஜீவஸ்ய சதுர்த்தேமாஸிஜாயதே**

*(பொ-ரை): கைகால் தலைமுதலியன மூன்றாம் மாதத்தில் உண்டாகின்றன. நான்காம் மாதத்தில் ஜீவனுக்கு தோற்றமும் ஏற்படுகின்றது.*

**ததஸ்சலதி கர்ப்போபி ஜநந்யாஜடரேஸ்வத:** **16**

**புதரஶ்சேத்தக்ஷிணே பார்ச்வேக நயாவா மேசதிஷ்டதி**
**நபும்ஸகஸ்தூதரஸ்ய பாகே திஷ்டதிமத்யமே** **17**

*(பொ-ரை): அதற்குப்பிறகு அன்னையின் வயிற்றினில் கர்ப்பம் தானே சலிக்கின்றது. புத்திரனாயின் வலது பக்கத்திலும், புத்திரியாயின் இடது பக்கத்திலும், நபும்ஸகனாயின் வயிற்றின் நடுப்பக்கத்தில் இருக்கின்றது.*

**அதோ தக்ஷிண பராசவேதுசேதே மாதாபுமாநயதி**
**அங்கப்ரத்யங்பாகாஶ்ச ஸூக்ஷ்மா: ஸ்யுர்யுகபத்ததா** **18**

**விஹாயச்மசரு தநதாதீந்ஜந்மாந்நதரஸம்பவாந**
**சதுர்த்தேவ்யக்த தேஷாம் பாவாநாமபிஜாயதே** **18**

*(பொ-ரை): ஆதலால் புத்திரனாய் இருந்தால் கர்ப்பிணி வலதுப்பக்கம் கீழாய்ப் படுக்கின்றனள். அப்போது பிறந்த பிறகு உண்டாகக்கூடிய மீசை பலமுதலியவை நீங்கலாகிய மற்ற அங்கப்பிரதயங்களால் ஏககாலத்தில் ஸூக்ஷமங்களாய் உண்டாகும். அத்தன்மைகள் நாலாம் மாதத்தில் விளக்கமாய்த் தோன்றுகின்றது.*

**பும்ஸாம்ஸ்தைர்ய ததோபாவா பூதத்வாத்யாஸ்துயோஷிதாம்**
**நபும் ஸகேசதே மிச்ரா பவந்திரகுநந்தன** **20**

*(பொ-ரை): ஓ ராமா, புருஷர்களுக்கு நிச்சலமாயிருத்தல் முதலிய தன்மைகளும், ஸ்திரீகளுக்கு சலனமுறுதல் முதலிய*

தர்மங்களும், அலியினிடம் அவ்விருதன்மைகளும் கலந்தனவாயும் இருக்கின்றன.

**மாத்ருஜஞ்சாஸ்யஹ்ருதயம் விஷயாநபிகாங்க்ஷதி**
**ததோ மாத்ருமனோபீஷ்டம் குர்யாத் கர்பவிவ்ருத்தயே 21**

*(பொ-ரை): கர்ப்பத்திலுள்ள பிரஜையினது ஹ்ருதயமானது அன்னையின் ஹ்ருதயத்தால் உண்டாவதாய்க் கொண்டு விஷயங்களை விரும்புகின்றது. ஆதலால் கர்ப்பவிருத்தியின் பொருட்டு கர்ப்பிணியின் மனத்திருப்தியைச் செய்யவேண்டும்.*

**தாஞ்சத்விஹ்ருதயாம் நாரீமாஹுர்தௌஹ்ருதிநீம்தத:**
**அதாநாத்தோஹதாநாம்ஸ்யுர்கர்ப்பஸ்யவ்யங்கதாம்: 22**

*(பொ-ரை): ஆதலால் கர்ப்பிணியாகிய இருஹ்ருதயமுள்ள அம்மங்கையை தௌஹ்ருதிநீ என்று சொல்லுகின்றனர் கர்ப்பிணி விரும்பிய அன்னபானாதிகளைத் தராவிடில் கர்ப்பத்திற்கு அங்கஹீனத்துவம் முதலியன ஏற்படும்.*

**மாதுர்யத்விஷயேலோபஸ் ததார்த்தோஜாயதேஸுத**
**ப்ரபுத்தம்பஞ்சமேசித்தம் மாமஸசோணித புஷ்டதா 23**

*(பொ-ரை): அன்னைக்கு எவ்விஷயத்தில் விருப்பம் உள்ளதோ அவ்விஷயம் புதல்வனாலும் விரும்பப்படுவதாம். ஐந்தாம் மாதத்தில் மனம் நன்றாய் அறியக் கூடியயோக்கிதை உடையதாம். மாம்ஸம் ரத்தம் இவைகளும் புஷ்டியடையும்.*

**ஷஷ்டேஸ்திஸ்நாயுகரகேச லோமவிவிக்ததா**
**பலவர்ணௌ சோபசிதௌ ஸப்தமேத்வங்கபூர்ணதா 24**

*(பொ-ரை): ஆறாம் மாதத்தில் எலும்பு ஸ்நாயுப்பசை நகம் தலைமயிர் மற்ற இடங்களிலுள்ள ரோமங்கள் இவை தோன்றுகின்றன. பல வர்ணங்களும், விருத்தியடையும், ஏழாம் மாதத்தில் அங்கங்கள் எல்லாம் பூர்த்தியடையும்.*

**பாதாந்தரி தஹஸ்தாப்யாம் ச்ரோதரரம்த்ரம்பிதாயஸ:**
**உத்விக்நோகாப்பஸம்வாஸா நஸ்திகாப்பயாந்வித: 25**

*(பொ-ரை): அந்தக் கர்ப்ப சிசுவானது கால்களுக்கிடையில் சென்ற கைகளால் காதோட்டைகளை மூடிக்கொண்டு, கர்ப்ப வாஸத்தினால் மிகக்கிலேசமுற்றதாய்க் கொண்டு கர்ப்பவாஸ பயத்தினால் பீடிக்கப்பட்டதாய்க் கொண்டிருக்கின்றது.*

**ஆவிர்ப்பூதப்ரபோதோஸெள கர்பதுக்காதிஸம்யுத:**
**ஹாகஷ்டமிதிகிர்விண்ண: ஸவாத்மாநம்சோசுசீத்யத: 26**

*(பொ-ரை): இந்தச் சிசுவானது தோன்றிய நிஜஸ்வரூபத்தை உடையதாய் கர்ப்பதுக்க அனுபவத்தோடு கூடியதாய்க் கொண்டு வைராக்கியம் உடையதாய் அந்தோகஷ்டம் என்று தன்னைக் குறித்து மிக்கசோகமடைகின்றது.*

**அநுபூதாமஹாஸஹ்ய புரோமமர்ச்சிதோஸஸக்ருத**
**கரம்பவாலுகாஸ்தப்தாச் சாதஹ்யநதாஸுகாசயா: 27**

*(பொ-ரை): மர்மங்களைச் சேதிப்பனவாகிய துன்பங்களையுடைய மிகவும் ஸகிக்கக்கூடாதனவாகிய எண்ணிறந்த தேஹங்களைப் பெற்று எவ்வளவோ துன்புற்றனம். வறுத்தமா போலுள்ள வறுக்கப்பட்ட மணல்களில் வறுக்கப்பட்டு மஹா துன்பத்தோடு தஹிக்கப் பெற்றனம்.*

**ஜடராநலஸந்தப்த பித்தாக்யரஸவிப்ருஷ:**
**கர்ப்பாசயேநிமக்நம்து தஹந்த்யதிப்ருசம்ஹிமாம் 28**

*(பொ-ரை): கர்ப்பகோசத்தில் அகப்பட்டுக் கொண்டவனாகிய என்னை ஜடராக்கினியால் கொதிக்கப்பெற்ற பித்தநீர்த்துளிகள் மிகவும் கடுமையாய்த் தகிக்கின்றன.*

**உதர்யக்ருமிவக்த்ராணி கூடசால்மலி கண்டகை**
**துல்யாநிசதுதந்த்யார் ததம பார்சவாஸ்திக்ர கசராதிதம் 29**

*(பொ-ரை): விலாப்பக்கத்திலுள்ள ரம்பம் போன்ற எலும்புகளால் தொந்தரை அடைந்தவனாகிய என்னை முள்ளிலவையின் முள்ளுகளுக்கு நிகராயுள்ள வயிற்றுப்புழுக்களின் முகங்களும் ஹிம்ஸிக்கின்றன.*

**கர்ப்பேதுர்க்கந்தபூயிஷ்டே ஜடராக்நிப்ரதீபிதே**
**து:க்கம்மயாப்தம் யத்தஸ்மாத்கநீய கும்பபாகஜம் 30**

*(பொ-ரை):* ஜடராக்கினியால் கொளுத்தப்பெற்றதும், கெட்ட நாற்றம் நிறைந்ததுமாகிய கர்ப்பத்தில் என்னால் எந்தத் துன்பம் அனுபவிக்கப்பட்டுளதோ அத்துன்பத்திலும் கும்பீபாகம் எனும் நரகத்தில் அனுபவிக்கும் துன்பம் அற்பமேயாம்.

**பூயாஸ்ருக்ச்லேஷ்பாயித்வம் வாநதாசிதவம்சயத்பவேத்**
**அசுசௌக்ரிமிபாவச்ரதத்ப்ராப்தம்கர்ப்பசாயிநா 31**

*(பொ-ரை):* சீழ் ரத்தம் கபம் இவைகளைக் குடித்தல், வாந்தத்தைப் புசித்தல், மலத்தில் புழுபோலாதல் ஆகிய இவைகளும் கர்ப்பவாஸம் செய்யும் என்னால் அனுபவிக்கப் பட்டுளது.

**கர்ப்பசய்யாம்ஸமாருஹ்ய துக்கம் யாத்ருங்மயாபிதத்**
**நாதிசேதேமஹா து:க்கம் நிச்சேஷநரகேஷுதத் 32**

*(பொ-ரை):* கர்ப்ப கோசத்தை அடைந்து என்னால் எத்தகைய துக்கம் அனுபவிக்கப்பட்டதோ அதனை ஸகல நரகங்களிலும் உள்ள பெருந்துக்கமும் மீறுகின்றதில்லை.

**ஏவம்ஸ்மரந் புராப்தாநாநா ஜாதீஶ்சயாதநா**
**மோக்ஷோபாயமபிதயாயநவர்த்ததேப்யாஸததபர 33**

*(பொ-ரை):* இவ்வாறு பூர்வம் அடையப்பட்ட பற்பல தேகங்களையும், துன்பங்களையும் நினைத்துக்கொண்டு மோக்ஷ உபாயத்தைச் சிந்தித்துக்கொண்டு அப்பியாஸ தத்பரனாய் இருக்கின்றான்.

**அஷ்டமேத்வக்ஸ்ருதீஸ்யாதாம் ஓஜஸ்தேஜஶ்சஹ்ருத்பவம்**
**சுப்ரமாபீதரக்தம்சநிமித்தம் ஜீவிதேமதம் 34**

*(பொ-ரை):* எட்டாம் மாதத்தில் தோலும் சலனமும் உண்டாகின்றது. ஹ்ருதய கமலத்தில் உண்டாகின்றதும் ஜீவதாரண ஹேதுவும் வெண்ணிறமும் கொஞ்சம் மஞ்சள்கலந்த செந்நிறம் பெற்றதுமாகிய ஓஜ தேஜ எனும் தாதுபரிணாமங்களும் ஏற்படுகின்றன.

**மாத்ரம்சபுநா கர்ப்பம் சஞ்சலமதத்பர தாவதி**
**ததோஜாதோஷ்டமேமாஸி கவதயோஜஸோஜ்ஜித 35**

*(பொ-ரை): கர்ப்பமானது சலிக்கின்றதாயினும் மீண்டும் அன்னையின் வயிற்றிலேயே இருக்கவேண்டியது அவசியமாதலால் அவ்வாறு தெரிந்துகொண்டு விசேஷமாய்ச் சலிக்கின்றது. ஆதலால் எட்டாம் மாதத்தில் பிறந்தசிசு ஒஜஸ் என்பதாக பூர்வந் சொல்லப் பட்டது பரிணாமம் இல்லாததாய்க் கொண்டு ஜீவிக்கின்றது இல்லை.*

**கிஞ்சித்காலமவஸ்தாநம் ஸம்ஸ்காராத்பீடிதாங்கவத்**
**ஸமய ப்ரஸவஸ்பஸ்யாந்மாஸேஷு நவமாதிஷு 36**

*(பொ-ரை): பீடையடைந்த தேஹம் உடையவன்போல, அதன் அப்பியாஸவிசேஷத்தால் கொஞ்சகாலம் இருத்தல் ஏற்படுகின்றது. பிறகு ஒன்பதாவது முதலியமாதங்களில் பிரஸவ ஸமயம் ஏற்படும்.*

**மாதுரஸ்ரவஹாம்நாடீம் ஆச்ரித்யாத்வவதாரிதா**
**நாபிஸ்தநாடீ கர்ப்பஸ்ய மாத்ராஹாரசரஸாவஹா 37**

*(பொ-ரை): அன்னையின் சக்தத்தை வஹிக்கின்றதாகிய நாடியைப் பற்றிக்கொண்டு, ஏற்பட்டுள்ள தொப்புளிலுள்ள நாடியானது கர்ப்பத்திற்கு அன்னையின் அன்னரஸத்தைச் சேர்ப்பிக்கின்றதாய் உள்ளது.*

**தேநஜீவதிகர்ப்போபிமா த்ராஹாரேணபோஷித:**
**அஸ்தியந்த்ரவிநிஷ்பிஷ்ட: பதித: குஷிவர்த்மனா 38**

**மேதோஸ்ருக்திக்தஸர்வாங்கோ ஜராயுபுடஸம்ம்வ்ருத:**
**நிஷ்க்ராமந்ப்ருசதுக்கார்த: ருதந்நுச்சைரதோமுக: 39**

**யந்த்ராதேவமவிநிர்முக்த: பதத்யுத்தானசாய்யுத**

*(பொ-ரை): கர்ப்பசிசுவானது அந்தத்தொப்புள் நாடியால் அன்னையின் ஆகாரத்தினால் போஷிக்கப்பட்டதாய்க் கொண்டு ஜீவிக்கின்றது. எலும்பினால் சூழப்பட்டுள்ள கர்ப்பகோசத்தில் நெருக்குள்ளவனும், மேதஸ் உதிரம் இவைகளால் பூசப்பெற்ற வனுமாய் யோனிவழிவந்து கீழ்முகமுடையவனாய் மிகவும் துக்கத்தால் நொந்தவனுமாய் உரக்கக் கத்திக்கொண்டு வெளிப் படுகின்றான். இவ்விதம் கர்ப்பகோசத்திலிருந்து வெளிப்பட்ட வனாய்க் கொண்டு மடிமீது வைக்கக்கூடியவனாய் விழுகின்றான்.*

**அஞ்சித்கஸ்ததாலோகை: மாம்ஸபேசிவதாஸ்தித: 40**

**ச்வமார்ஜாராதிதமஷ்ரிபயோ ரக்ஷயதே தண்டபாணிபி:**
**பித்ருவத்ராக்ஷயம் பேம்திமாத்ருவட்டாகிநீமபி 41**

*(பொ-ரை): அப்போது யாதும் செய்ய இயலாதவனாய் மாம்ஸப் பிண்டம் போன்றவனாய்த் தண்டத்தைக் கையில் உடையவர்களாகிய ஜனங்களால் நாய் பூனை முதலியவைகளால் கேடுறாது இருப்பதற்காகக் காக்கப்படுகின்றான். ராக்ஷஸனை தகப்பன்போலும் டாகிநீதேவதையை தாய்போல் எண்ணுகின்றான்.*

**பூயம்பயோவதஞ்ஞானாத் தீர்க்ககஷ்டம்துசைசவம்**
**ச்லேஷ்மணாபிஹிதாநாடீ ஸுஷும்நாயாவதேவஹி 42**
**வ்யக்தவர்ணம்சவசனம்தாவத் வக்தும்சசக்யதே**

*(பொ-ரை): சீழைப் பாலைப்போல அறியாமையால் எண்ணப்பட்டது. சிசுப்பருவமானது பெருங்கஷ்டமே அன்றோ. எவ்வளவுகாலம் ஸுஷும்னையெனும் நாடியானது கபத்தினால் சூழப்பட்டு உள்ளதோ அத்தனை காலம் வரையில் அக்ஷரஸ்பஷ்டமாய் வார்த்தை சொல்ல இயலாதுஅன்றோ.*

**அத்ஏவச கர்ப்பேபிரோதிதும்நைவசக்யதே 43**
**த்ருப்தோதயௌவநம் ப்ராப்யம்நமதஜ்வாவிஹ்வல:**
**காயத்யகஸ்மாதுச்சைஸ்து ததாகஸ்மாச்சவவ்கதி 44**

*(பொ-ரை): இக்காரணத்தாலேயே கர்ப்பத்திலும் அழுவதற்கு இயலுவதேயில்லை. பின்னர் யௌவனப்பருவம் வந்ததும் யாதும் தெரியாதவனாய் மதித்தும் ஸ்திரீபோகம் ஒன்றிலேயே ஆவலுற்றுச் காரணமின்றிச் சற்றுநேரம் பாடுவதும் சற்றுநேரம் ஓடுவதும் இவை முதலிய செய்கைகளைச் செய்கின்றான்.*

**ஆரோஹதிதரூந்வேகாத் சாந்தாநுத்வேஜயத்யபி**
**காமக்ரோதமதாந்தஸ்ஸந்தகாம்சசிலபிவீக்ஷதே 45**

*(பொ-ரை): வேகமாய் மரத்தினில் ஏறுகிறான், பெரியோர்களைத் துன்புறுத்துகின்றான், காமக்குரோதமதத்தால் யாதும் தெரியாதவனாய் எவர்களையும் லக்ஷியம் செய்கின்றது இல்லை.*

**அஸ்திமாம்ஸஸிராலாயாவாமா பாமந்மதாலயே**
**உத்தரநபூதிமண்டூகபாடி தோதாஸந்நிபே** **46**
**ஆஸக்த: ஸ்மரபாணார்த்த ஆத்மநாதஹ்யதேப்ருசம்**

*(பொ-ரை): எலும்பு மாம்ஸம் நரம்பு இவைகளின் சேர்க்கையுடையதாகிய ஸ்திரீயின் விகாரமாய் காணப்படுவதும் கெட்ட நாற்றம் உள்ளதுமாகிய தவளையின் பிளப்பு அடி வயிற்றுக்கு (ஆஸனத்துவாரத்திற்கு) நிகராகிய நிதம்பத்தில் ஆவலுடையவனாய் ஸ்திரீபோக இச்சையால் நொந்து மனதினால் மிக்க தஹிக்கப்படுகின்றான்.*

**அஸ்திமாம்ஸஸிராக்வக்ப்ய கிம்ந்யத்வர்ததேவபு**
**வாநாம்மாயயாமூடோநகிஞ்சித் வீக்ஷதேஜகத்** **47**

*(பொ-ரை): ஸ்திரீகளின் தேஹமானது எலும்பு மாம்ஸம் நரம்பு தோல் இவைகளைக் காட்டிலும் வேறாய் யாதுளது அஞ்ஞானத்தால் மோஹித்தவனாய்க் கொண்டு ஜலத்தைச் சிறிதும் விவேகித்துப் பார்க்கின்றது இல்லை.*

**நிர்க்கதேப்ராணபவேந தேஹோஹந்தம்ருசீத்ருச:**
**யதாஹிஜாயதேநைவ வீக்ஷ்யதேபஞ்சஷைபர்திநை:** **48**

*(பொ-ரை): ப்ராணவாயுவானது வெளிப்போய்விடின் ஸ்திரீயின் தேகமானது, ஐந்தாறுதினங்களில் எவ்வாறு ஆகுமோ அந்தோ அதனை ஆலோசித்துப் பார்க்கின்றது இல்லை.*

**மஹாபரிபவஸ்தாநம் ஜராம்ப்ராப்யாதிது:கித:** **49**

**ச்லேஷ்மணாபிணிதோரஸ்கோ ஜக்தமந்தம்நஜீர்யதி**
**ஸநநதநதோமந்த த்ருஷ்டி: கடுதிக்தகஷாயபுக்** **50**

*(பொ-ரை): பெரும் அவமதிப்பிற்கு இடமாகிய கிழத்தன்மையை அடைந்து மிக்கத் துன்புறுகின்றான். கபத்தினால் கட்டப்பட்ட மார்புடையவன் ஆகின்றான் உண்ட உணவு செரிப்பதில்லை. பற்கள் உதிர்ந்து பார்வையும் குன்றிப்போன நிலைமை உடையவனாய்க் கசப்பு துவர்ப்பு முதலியவைகளைப் புசிப்பவன் ஆகின்றான்.*

**வாதபுக்நகடிக்ரீவாகரோருசரணோசபல:**
**கதாயுதஸமாவிஷ்ட பரிபூதஸ்ஸ்வபந்துாவி** 51

*(பொ-ரை): வாயுவின் பீடையால் கோணிப்போன இடை கழுத்து கை துடை கால் இவைகளை உடையவனும், பலமற்றவனும், எண்ணிறந்த ரோகங்களை உடையவனும், தனது பந்துக்களால் அவமதிக்கப்பட்டவனும் ஆகின்றான்.*

**நிஶ்ஶௌச சோமலதிக்தாங்க: ஆலிங்கிதவரோஷித:**
**த்யாயந்நஸுலபாந்போகாந் கேவலம்வர்த்ததேஅசல** 52

*(பொ-ரை): சுத்தி இல்லாதவனும், மலம்பூசப்பெற்ற தேகம் உடையவனும், தேஹம் கொடுமையாய் எரிக்கப்பெற்றவனும், எளிதில் கிடைக்காதனவாகிய போகங்களையே சிந்தித்துக் கொண்டு இருக்குமிடம் விட்டு அசையாமல் இருக்கின்றான்.*

**ஸர்வேந்தரியக்ரியா லோபாத் ஹாஸ்யதே பாலகைரபி**
**ததோம்ருதிஜது: க்கஸ்ய த்ருஷ்டாந்தோநோபலப்யதே** 53

*(பொ-ரை): எவ்விந்திரியமும் வேலை செய்வதற்கு இல்லாமற் போனமையால் சிறுபாலர்களும் பரிகஸிக்கின்றார்கள். அதன் பிறகு மரணகாலத் துக்கத்திற்கு நிகரில்லை.*

**யஸ்மாத்பிபயதிபூதாநி பராபதாநயபிபராமருஜம்**
**நீயதே ம்ருத்யுநாஜந்து: பரிஷ்வக்தோபிபந்துபி:** 54
**ஸாகராந்தர்ஜலகதோ கருடேநேவபந்நக**

*(பொ-ரை): பெரும்பிணிகளையுடைய பிராணிகளும் எவனிடம் பயப்படுகின்றனவோ, பந்துக்களால் தழுவப்பட்டிருக்கினும் சமுத்திரநடுவிலுள்ள ஸர்ப்பம் கருடனாலே கொண்டு போவது போல எமனால் கொண்டுபோகப்படுகின்றனர்.*

**ஹாகாந்தே ஹாதநம் புத்ரா க்ரந்தமாநம்ஸுதாருணம்**
**மண்டுக இவஸர்ப்பேண ம்ருத்யுநாநீயதேநர:** 55

*(பொ-ரை): ஹா பத்நீ, ஹா பணமே, புத்திரர்களே என்று மிக்கப் பயங்கரமாய் அழுகின்றவன் ஆயினும் தவளையாவது ஸர்ப்பத்தினாலே பிடிக்கப்படுவது போல எமனால் கைப்பற்றப் படுகின்றான்.*

**மர்மஸ்வந்மத்யாமாநேஷு முச்யமாநேஷு ஸந்திஷு**
**யத்து:க்கம் ம்ரியமாணஸ்யஸ்மர்யதாம்தந்முமுக்ஷுபி: 56**

*(பொ-ரை): மர்மஸ்தானங்கள் ப்ராணன் வெளிப்படுவதில் ஹிம்ஸைப்படும்போதும், ஸந்திபந்தங்கள் பிராணனால் விடப்படும்போதில் துடிக்கும்போதும், மரண அவஸ்தையில் உள்ளவனுக்கு எந்த துக்கம் நேருமோ, அந்த துக்கம் மோக்ஷத்தில் விருப்புற்றவர்களால் சிந்தித்துப் பார்க்கவேண்டியது.*

**த்ருஷ்டாவாக்ஷிப்யமாணாயாம் ஸமஜ்ஞயாஹ்ரியமாணயா**
**ம்ருத்யுபா சேநபத்தஸ்யத்ராதா நைவோலப்யதே 57**

*(பொ-ரை): கண்ணானது விழிக்கமுடியாது சொருகப்படும் போதும், நினைவும் தவிரவே, எம பாசத்தால் கட்டப்பட்டவனுக்கு ரக்ஷகன் காணப்படுகின்றதேதில்லை யன்றோ.*

**ஸம்ருத்யமாநஸ்தமஸாமஹத் சித்தமிவாவிசந்**
**உபாஹூதஸ்ததாஜ்ஞாதீந் ஈக்ஷதே தீநசக்ஷுஷா 58**

*(பொ-ரை): அஞ்ஞானத்தால் தகையப்பட்டவனாய், சரியாய் உள்ள சித்தமுடையவன் போலக் கூப்பிடப்பட்டவனாய்க் கொண்டு உறவினர்களை தீனத்தன்மையுடன் கூடிய விழியால் பார்க்கின்றான்.*

**அய பாசேநகாலேந ஸ்நேஹபாசேநபந்துபி:**
**ஆத்மாநமக்ருஷ்யமாணம் தமீக்ஷதேபரிதஸ்ததா 59**

*(பொ-ரை): காலனால் இருப்புச் சங்கிலியாலும், பந்துக்களால் ஸ்நேஹபாசத்தாலும் தான் இருபக்கங்களிலும் இழுக்கப் படுகின்றதாகக் காண்கின்றான்.*

**ஹிக்கயாபாத்யமாநஸ்யச்வாஸேநபரிசுஷ்யத**
**ம்ருத்யுநாக்ருஷ்யமாணஸ்யநகல்வஸ்திபராயணம் 60**

*(பொ-ரை): ஹிக்கையென்னும் இருமலால் தொந்தரையுற்றும், ச்வாஸத்தால் வறண்டும், காலபாசத்தால் இழுக்கப்படு கின்றவனுமாகிய மனிதனுக்கு ரக்ஷகன் இல்லையன்றோ.*

**ஸம்ஸாரயந்த்ரமாரூடோயமதூதைரதிஷ்டித:**
**க்வயாஸ்யாமீதி துக்கார்த்த: காலபாசேநயோஜித: 61**

*(பொ-ரை): ஸம்ஸாரமாகிய யந்திரத்தில் ஏறியவனாய் யமதூதர்களால் அடக்கப்பட்டவனாய், யமபாசத்தினால் கட்டப் பட்டவனுமாய்க்கொண்டு எங்கு செல்லுவேன் என்று வருத்தமுறுகின்றான்.*

**கிம்கரோமிக்வகச்சாமிகிம்கிருஹ்ணாமிதய ஜாமிகிம்**
**இதிகர்த்தவ்யதாமூட க்ருச்ராத்தே ஹாத்த்யஜத்யஸூந 62**

*(பொ-ரை): என்னசெய்வேன்? எங்கு செல்லுவேன்? எதைப்பற்றுவேன்? எதை விடுவேன் ? என்று இவ்விதம் செய்வது யாதொன்று அறியாமல் மிகவும் தொந்தரை அடைந்து தேஹத்திலிருந்து பிராணனோடு வெளிப்படுகின்றான்.*

**யாதநாதேஹ ஸம்பத்தோ யமதூதைரதிஷ்டித:**
**இதோகத்வாநுபவதி யாயாஸ்தாயமயாதநா: 63**

*(பொ-ரை): யாதனாதேஹத்தைப் பற்றிக்கொண்டு யமதூதருக்கு உட்பட்டு இங்கிருந்து சென்று யமயாதனைகள் எல்லாவற்றையும் அனுபவிக்கின்றான். (யாதனாதேகம்- யமயாதனைகளை அநுபவிக்கக் கூடிய உடல்)*

**தாஸூயல்லபதே துக்கம்தத்வக்தும் ஸஹதேகுத:**

*(பொ-ரை): அந்நரக யாதனைகளுள் அனுபவிக்கும் துக்கத்தைச் சொல்ல எங்ஙனம் இயலும்.*

**கர்ப்பூரசந்தனாத்யைஸ்து லிப்யதேஸததம்ஹியத் 64**

**பூஷணைர்பூஷ்யதேசித்ரை: ஸுவஸ்த்ரை: பரிவார்யதே**
**அஸ்ப்ருச்யம் ஜாயதேப்ரேக்ஷ்யம் ஜீவத்யக்தம்ஸதாவபு 65**

*(பொ-ரை): யாதொரு தேஹமானது கர்ப்பூரசந்தனாதிகளால் எப்போதும் பூசப்பெறுகின்றதோ, அழகிய ஆபரணங்களாலும் சிறந்தவஸ்த்ரங்களினாலும் அலங்கரிக்கப்படுகின்றதோ, அத் தேஹமே ஜீவனால் பிரியப்பட்ட தாயின் தொடத்தகாததும் பார்க்கத் தகாததும் ஆகின்றது.*

**நிஷ்க்ராமயந்திநிலயாத் க்ஷணம் நஸ்தாபயநத்யபி**

*(பொ-ரை): இல்லத்தினின்றும் வெளிக்கொண்டு போகின்றார்கள், க்ஷணப்போதும் வைத்திருக்கின்றது இல்லை.*

**தஹ்யதேசதத: காஷ்டை: தத்பஸ்மக்ரியதேக்ஷணாத 66**

**பக்ஷ்யதேவாஸ்ருகாலேநக்ரத் ரகுக்குரவாயஸை:**
**புநர்நத்ருச்யதேஸோத ஜந்மகோடிசதைரபி 67**

*(பொ-ரை): அதன் பிறகு கட்டைகளோடு கொளுத்தப்படுகின்றது. அதுவும் க்ஷணத்தில் சாம்பலாக்கப் படுகின்றது. அல்லது நரி-கழுகு-நாய்-காக்கை முதலியவைகளால் தின்னப்படுகின்றது. நூறு கோடி ஜந்மம்எடுக்கினும் அதே தேஹம் மீண்டும் காணப்படுகின்றது இல்லை.*

**மாதாபிதாகுருஜநஸ்வஸ்வஜநோமமேதி**
**மாயோபமேஜகதிகஸ்ய பவேத் ப்ரதிஜ்ஞா**
**ஏகோயதொ வ்ரஜதி காம புரஸ்ஸரோயம்**
**விச்ராமவ்ருக்ஷஸத்ருச:கலு ஜீவலோக: 68**

*(பொ-ரை): இந்திரஜாலப் பொருள்களுக்கு நிகராயுள்ள இவ்வுலக வாழ்க்கையில் எனது தாய் தந்தை, எனது குரு, எனது ஜனம், எனது பந்து என்று நிச்சயிப்பது எப்படிக் கூடும்? ஏனெனின், கர்மத்தோடுகூட தான் ஒருவனே போகும்படி ஆகின்றமையால் இம்மனிதலோகமானது களைப்பாறுதற்குச் சற்றுத் தங்குமிடமாகிய மரத்திற்கு ஸமானமே அன்றோ.*

**ஸாயம் மஸாயம்வாஸவ்ருக்ஷம்ஸமேதா: ப்ராத:**
**ப்ராதஸ்தேநதேந ப்ரயாந்தி**
**த்யக்த்வாநயோந்யம் தஞ்சவ்ருக்ஷம்**
**விஹங்காயத்வத்தத்வத்ஜ் ஞாதயோ ஜ்ஞா தயஶ்ச 70**

*(பொ-ரை): எப்படி மாலைதோறும் மாலைதோறும் வசிக்கும் மரத்தை அடைந்து ஒன்றுகூடிய பறவைகள் பிறகு காலைதோறும் காலைதோறும் அம்மரத்தைவிட்டு ஒன்றுக்கொன்று பிரித்து அதுஅது வந்தவழியோடு சென்றுவிடுகின்றதோ அது*

போலவே உறவினர்களும் உறவினர் அல்லாதவர்களும் என்றறியத் தக்கது.

**மருதிபீஜம் பவேஜ்ஜந்மஜந்மபீஜம் பவேநம்ருதி**
**கடீயந்தரவதசராந்தோ பமப்ரமீதயநிசமநர 71**

*(பொ-ரை): பிறவி மரணஹேது ஆகும், மரணமானது பிறப்புக்கு ஹேதுவாகும். ஜீவன் ஏற்றுமரம் போல் ஓய்வின்றி எப்போதும் சுற்றிக்கொண்டே இருக்கிறான்.*

**கர்ப்பேபும்ஸ: சுக்ரபாதாத் யதுக்தம் மரணாவதி**
**தேதேதஸ்ய மஹாவ்யாதே மத்தோநாநயோஸ்திபேஷஜம் 72**

*(பொ-ரை): ஜீவனுக்குக் கர்ப்பத்தில் சுக்கிலம்சேர்ந்தது முதல் மரணம் வரையில் யாதொன்று சொல்லப்பட்டதோ அந்த இந்த பெரும்பிணிக்கு மருந்து என்னிலும் அந்நியன் இல்லை.*

*(எட்டாவது அத்தியாயம் முற்றிற்று.)*





இலிங்க மூர்த்தி

# தேஹஸ்வரூப நிரூபணம் என்னும் ஒன்பதாவது அத்தியாயம்

*சரீரநிருபணயோகம்- சரீரத்தின் மீது பற்று வைக்க வேண்டாமென்று விளக்குதலே இந்த அத்தியாயமாகும். இதில் வேதாந்த கருத்துக்கள் சிறப்புற அடங்கியுள்ளன. சித்தாந்தமும் வெளிப்பட்டுள்ளது.*

**தேஹஸ்வரூபம் வக்ஷ்யாமிச்ருணுஷ்வாவஹிதோந்ருப**
**மத்தோஹிஜாயதே விச்வம் மய்யேவைதத்ப்ரதார்யதே 01**

*பொழிப்புரை: ஓ அரசனே, தேஹஸ்வரூபத்தைச் சொல்லுகின்றேன், ஸாவதானமனதோடு கேட்பாயாக என்னிடமிருந்தே ஸகல சராசரமும் தோன்றுகின்றது என்னிடமே இதுநிலை பெறுகின்றது.*

**மய்யே வேதமதிஷ்டாநே லீயதெ சுக்திரூப்யவத்**
**அஹம்துநிர்மல: பூர்ண: ஸச்சிதாநந்தவிக்ரஹ: 02**

*(பொ-ரை): இப்பிரபஞ்சமானது, இப்பியில் வெள்ளிபோல அதிஷ்டானமாகிய என்னிடமே ஒடுங்குகின்றது. யானோ வெனின் நிர்மலனும் பூர்ணனும் ஸச்சிதாநந்த ஸ்வரூபனும் ஆனவன்.*

**அஸங்கோநிரஹங்கார: சுத்தம் ப்ரஹ்மஸநாதநம்**
**அநாத்யவித்யாயுக் தஸ்ஸந்ஜகத்காரணதாம்வ்ரஜே 03**

*(பொ-ரை): ஸம்பந்தம் இல்லாதவனும், அஹங்காரம் இல்லாதவனும், எப்போதும் உள்ள ப்ரும்மமாயுள்ள நான் அனாதியாயுள்ள அவித்தையோடு கூடியவனாய்க் கொண்டு ஜகத்காரணன் ஆகின்றேன்.*

**அநிர்வாச் யாமஹாவித்யாத்ரிகுணாபரிணாமிநீ**
**ரஜஸ்ஸத்வம்தமஶ் சேதிததகுணா பரிகீர்த்திதா 04**

*(பொ-ரை): துணிந்தோதமுடியாத அந்த அவித்தையானது முக்குணம் உடையதும் பரிணமிக்கின்றதுமானது. அதன் குணங்கள் ரஜஸ் ஸத்துவம் தமஸ் என்று சொல்லப்பட்டன.*

**ஸத்வம் சுக்லம் ஸமாதிஷ்டம் ஸுகஜ்ஞானாஸ்பதம்ந்ருணாம்**
**து:க்காஸ்பதம் ரக்தவர்ணம்சஞ்சலஞ்சரஜோமதம் 05**

*(பொ-ரை): ஸத்துவமானது வெண்ணிறமுள்ளது என்றும் மனிதர்களுக்கு ஸுகஞானங்களுக்கு இடமாயுள்ளது என்றும் சொல்லப்பட்டது. ரஜோகுணமானது துக்கத்திற்கிடமும் செந்நிற முடையதும் சஞ்சலமாயுள்ளதுமானது என்று சொல்லப்பட்டது.*

**தம க்ருஷ்ணம ஜடமப்ரோக்தம் உதாஸீநம்ஸுகாதிஷு**
**அதோமமஸமாயோகாத் சக்தி ஸாத்ரிகுணாத்மிகா 06**

**அதிஷ்டானே சமய்யேவ பஜதேவிசவரூபதாம்**
**சுத்தௌ ரஜதவத்ரஜ்ஜௌபுஜங்கோயதவதேவது 07**

*(பொ-ரை): தமோகுணமானது கருநிறமுடையது. ஜடம் ஸுகாதிகளில் உதாஸீனமாய் உள்ளது என்றும் சொல்லப்பட்டது. ஆதலால் எனது சேர்க்கையால், முக்குணஸ்வரூபமாகிய அந்த சக்தியானது அதிஷ்டானமாகிய என்னிடமே இப்பியில் வெள்ளிபோலும் கயிற்றினில் அரவம்போலும் பிரபஞ்சமாகும் தன்மையைப்பெறுகின்றது.*

**ஆகாசாதீநி ஜாயநதேமத்தோபூதாநிமாயயா**
**தைராராப்தமிதம் ஸாவம்தேஹோயம பாஞ்சபௌதிக 08**

*(பொ-ரை): என்னிடமிருந்து மாயையால் ஆகாயம்முதலிய பூதங்கள் உண்டாகின்றன. அப்பூதங்களாலேயே பிரபஞ்சம் உண்டாயிற்று. இத்தேஹம் ஐம்பூதங்களாலேயே உண்டானது.*

**பித்ருப்யாமசிதாதந்நாத் ஷட்கோசம் ஜாயதேவபு:**
**ஸ்நாயவோஸ்தீநி மஜ்ஜாச ஜாயந்தே பித்ருதஸ்ததா 09**

*(பொ-ரை): தாய் தந்தையர்களால் புசிக்கப்பட்ட அன்னத்தால் ஆறுகோசமாகிய தேஹம் உண்டாகின்றது. சிறுநரம்புகள், எலும்புகள், மஜ்ஜை இவைகள் தந்தையினிடம் இருந்து உண்டாகும் அம்சங்கள்.*

**தவங்மாம்ஸசோணிதமிதிமாத்ருதஶ்சபவந்திஹி**
**பாவாஸ்ஸ்யு: ஷட்விதாஸ் தஸ்யமாத்ருஜா:பித்ருஜாஸ்ததா 10**

*(பொ-ரை): த்வக்கு மாம்ஸம் ரத்தம் இவைகள் அன்னையிடம் இருந்துண்டாவன. தேஹத்திற்குத் தாய் தந்தையரிடம் உண்டாகும் தாதுக்கள் அறுவகையாகும்.*

**ரஸஜா ஆத்மஜாஸ்ஸப்தஸம் பூதாஸ்ஸாத்மஜாஸ்ததா**

*(பொ-ரை): ரஸஜங்கள் எனப் பின்சொல்லப் படுகின்றன வாகிய ஏழும், ஆத்மஜங்கள் என்னப்படுவனவாகிய ஏழும், அங்ஙனமே ஸ்வாத்மஜங்கள் என்னப்படுவனவும் கூடியனவா கின்றன.*

**ம்ருதவ: சோணிதம் மேதோமஜ்ஜாப்லீ ஹாயக்ருத்குதம்**
**ஹ்ருந்நாபீதயேவமாத்யா: ஸ்யு: பாவாமாத்ருபவாமதா: 11**

*(பொ-ரை): ரத்தம், இருதயத்திலுள்ள மாம்ஸ விசேஷம் எலும்பு நரம்புகளில் நிகழும் கசிவு, குல்மம் எனப்படும் வயிற்றின் இடப்பக்கத்தில் உள்ள மாம்ஸம், காலகண்டம் எனப்படுவது வயிற்றின் வலப்பக்கத்திலுள்ள மாம்ஸம், அபானம், மார்பினின் தாமரை போன்றுள்ள இருதயம், தொப்புள் எனும் இவைமுதலிய மிருதுவாகியபாவங்கள் அன்னையிடம் இருந்துண்டாவன என்பதாம்.*

**ச்மச்ருரோமகசஸ்நாயுஸிரா தமநயோநகா:**
**தசநா: சுக்ரமித்யாதிஸ்திரா: பித்ருஸமுத்பவா: 12**

*(பொ-ரை): மீசை, மற்ற இடங்களிலுள்ள ரோமம், கேசம், வஸை எனும் தாதுவிசேஷம். ஸூக்ஷ்மஸ்தூல நாடிகள் நகம் பல் சுக்லம் இது முதலியனவாகிய அம்சங்கள் தந்தையினிடம் உண்டாவன.*

**சரீரோபசிதிர்வர்ணோ வ்ருத்திஸ்த்ருப்திர்பலம்ஸ்திதி:**
**அலோலுபத்வம உத்ஸாஹ: இதயாதீநரஸஜாந்வித்: 13**

*(பொ-ரை): சரீர உற்பத்திகாலத்திலுள்ள பருமன், நிறம், வளருதல், பூரிப்பு, வலிமை, அவயங்களின் உறுதித்தன்மை, க்ருபணதன்மையின்மை, உற்சாகம் இவை முதலிய தாது விசேஷத்தால் உண்டாவன என்பதாம்.*

**இச்சாத்வேஷஸ்ஸுகம்துக்கம் தர்மாதர்மௌ சபாவநா**
**ப்ரயத்நோ ஜ்ஞாநமாயு: செந்த்ரியாணித்யேவமாத்மஜா: 14**

(பொ-ரை): விருப்பு, வெறுப்பு, ஸுகம், துக்கம், புண்ணியபாபங்கள், பாவனை, முயற்சி, ஞானம், ஆயுள், இந்திரிய வியாபாரம் இவை முதலியன ஜீவனால் ஏற்படுவன.

**ஞாநேந்திரியாணிஸ்ரவணம் ஸ்பர்சனம் தர்சனம் ததா**
**ரஸநம் க்ராணமித்யாஹு: பஞ்சதேஷாம் சகோசரா: 15**

**சப்த: ஸ்பர்சஸ்ததாரூபம்ரஸோகந்த இதிக்ரமாத்**

(பொ-ரை): ஞானேந்திரியங்கள் காது, தோக்கு, கண், நாவு, மூக்கு என்று ஐந்துள்ளன. அவைகளின் விஷயங்களும் முறையே சப்தம் ஸ்பர்சம் ரூபம் ரஸம் கந்தம் என்று சொல்லப்படுகின்றன.

**வாக்கராங்க்ரிகுதோபஸ்தாந்யாஹு: கர்மேந்த்ரியாணிஹி 16**

**வசநாதாநகமநவிஸர்கரதய: க்ரமாத்**
**கர்மேந்த்ரியாணாம் ஜாநீயாந்மநஸ்சைவோ பயாத்மகம் 17**

**க்ரியாஸ்தேஷாம் மநோபுத்தி ரஹங்காரஸ் தத: பரம்**
**அந்த: கரணமித்யாஹு: சித்தம் சேதிசதுஷ்டயம் 18**

(பொ-ரை): வாக்கு, பாணி, பாதம், குஹ்யம் குதம் இவை கர்மேந்திரியங்கள் என்னப்படுவதாம். அந்தக்கர்மேந்திரியங்களின் கிரியைகள் முறையே, வசனம் பெற்றுக் கொள்ளுதல், போதல், விடுதல், ஸுகித்தல் எனும் இவைகளாம். மனமானது ஞான கர்மேந்திரியங்களோடு கலந்து பிரவர்த்திக்கின்றதாம். மனோ புத்தி சித்த அஹங்காரம் எனும் இந்நான்கும் அந்தக்கரணம் எனப்படும்.

**ஸுகம்துக்கம் சவிஷயௌ வஜ்ஞேயௌமநஸ: க்ரியா:**
**ஸ்ம்ருதி பீதி விகல்பாத்யா புத்திஸ்யாந்நிஸ்சயாத்மிகா 19**

**அஹம்மமேத்யஹங்கார: சித்தம் சேதயதேயத:**
**ஸத்வாக்யமந்த: கரணம் குணபேதாத்த்ரிதாமதம் 20**

(பொ-ரை): மனஸிற்கு ஸுகதுக்கங்கள் விஷயங்களாம். கிரியைகள் நினைவு,பயம், விகல்பம் முதலியனவாம். புத்தியானது நிச்சயவடிவாம். யான் எனது என்பது அஹங்காரமாம். சிந்திக்கின் றமையால் சித்தம் என்பதாம். ஸத்துவம் என்னப்படும் அந்தக் கரணம்குணபேதத்தால் மூவகையாயுள்ளது.

**ஸத்வம் ரஜஸ்தம இதிகுணாஸ்ஸத்வாத்துஸா த்விகா:**
**ஆஸ்திக்யசுத்திதர்மைகருசிப்ரப்ருதபோமதா: 21**
**ரஜஸோராஜஸாபாவா: காமக்ரோதமதாதய:**
**நித்ராலஸ்ய ப்ரமாதாதிவஞ்சநாத்யாஸ்து தாமஸா: 22**

*(பொ-ரை): ஸத்துவம் ரஜஸ் தமஸ் என்று குணங்களாம். ஸத்துவகுணத்தால் ஏற்படுவன ஆஸ்திக்கியம் சௌசம் தர்ம சிந்தனை முதலியனவாகிய ஸாத்துவிகத் தன்மைகளாம். ரஜஸினால் காம க்ரோத மதம் முதலியனவாகிய ராஜஸத் தன்மைகள் ஏற்படுவனவாம். தமோகுணத்தால் நித்திரை சோம்பல் அஜாக்கிரதை வஞ்சனை முதலியனவாகிய தாமஸத்தன்மைகள் ஏற்படுவனவாம்.*

**ப்ரஸந்நேந்த்ரியதாரோக்யாநாலஸ்யா தயாஸ்து ஸத்வஜா:**
**தேஹோமாத்ராஸ்மகஸ்தஸ்மாதாதத்தேத த்குணாநிமாந் 23**

*(பொ-ரை): இந்திரியசுத்தி ரோகமின்மை சோம்பலின்மை முதலியன ஸத்துவத்தின் காரியங்கள். தேஹமானது பஞ்ச பூதங்களின் அம்சங்களால் உண்டானது, ஆதலின் அக்குண காரியங்களாகிய இவைகளைப் பெறுகின்றது.*

**ஶப்தஶ்ஶ்ரோத்ரம் முகரதாவைசித்ர்யம்ஸௌக்ஷ்மதாத்ருதி:**
**பலம்சககநாத்வாயோ: ஸ்பர்ஶஶ்சஸ்பர்ஶதேந்த்ரியம் 24**
**உத்க்ஷேபணமபக்ஷேபாகுஞ்சநெகமநம் ததா**
**ப்ரஸாரணமிதீமாநி பஞ்சகர்மாணி ரூக்ஷ்தா 25**
**ப்ராணாபாநௌ ததாவ்யாநாஸமாநோதாநஸம்ஜ்ஞகாந்**
**நாகம் கூர்மம்ச க்ருகரம் தெவதத்தம் தநம் ஜயம் 26**
**தஶைதாவாயூ விக்ருதிஸ்ததா க்ருஹ்ணாதிலாகவம்**

*(பொ-ரை): சப்தம், காது, பேசுந்தன்மையின் விசேஷம், ஸௌக்ஷ்மத்துவம், தைர்யம், பலம் எனும் குணங்களை ஆகாயத்தி லிருந்து கிரஹிக்கின்றது. வாயுவினின்று பரிசம், தொக்கு, இவைகளையும், உத்க்ஷேபணம், அவக்ஷேபணம், ப்ரஸாரணம் கமநம் ஆகுஞ்சநம் எனும் ஐந்து கர்மங்களையும்; ப்ராண, அபான, வ்யான, உதாந, ஸமான, நாக, கூர்ம, க்ருகர, தேவதத்த, தனஞ்ஜய*

னும் இந்தப்பத்து வாயுவிகாரங்களையும் லகுத்தன்மையையும் கிரஹிக்கின்றது.

**தேஷாம்முக்யதர: ப்ராண: நாபே: கண்டாதவஸ்தித: 27**

**சரத்யஸௌ நாஸிகயோர் நாபௌ ஹ்ருதயபங்கஜே**
**சப்தோச்சாரணநித் வாஸோச்வாஸாதேரபிகாரணம் 28**

**(பொ-ரை):** *அவைகளுள் முக்கியமாயுள்ள பிராணனானது நாபிக்குமேல் கண்டத்திற்குக்கீழ் உள்ளது. மூக்குகளின் வழியாய் நாபியிலும் ஹ்ருதயகமலத்திலும் ஸஞ்சரிக்கின்றது. சப்தோச்சாரணம், மூச்சிழுத்தல், மூச்சுவிடுதல் முதலியவற்றிற்கும் காரணமாயுள்ளது.*

**அபானஸ்து குதேமேட்ரே கடிஜங்கோதரேஷவபி**
**நாபிகண்டே வங்க்ஷணயோரூருஜா நுஷுதிஷ்டதி 29**
**தஸ்யமூத்ரபூரிஷா திவிஸர்க: கர்மகீர்த்தித:**

**(பொ-ரை):** *அபானனானது ஆஸனத்திலும், குஹ்யத்திலும், இடை, முழங்கால், வயிறு இவைகளிலும், நாபியிலும், கண்டத்திலும், துடைகளின் ஸந்திகளிலும், துடை முழங்கால் களுக்கு நடுவிலுள்ள இடங்களிலும் இருக்கின்றது. அதன் காரியமானது மூத்திரமலாதி மோசனம் என்க. (மோசனம் - வெளி யேற்றுதல்)*

**வ்யாநோக்ஷிஶ்ரோத்ரகுல்ப்பேஷு**
**ஜிஹ்வாக்ராணேஷுதிஷ்டதி**
**ப்ராணாயாமத்ருதித்யாகக்ர ஹணாத்யஸ்யகர்மச 30**

**(பொ-ரை):** *வியானனானது கண், காது, பாதக்கறடு, நாக்கு, மூக்கு இவ்விடங்களில் இருக்கின்றது. இதன் கர்மமானது பிராணாயாமத்தின் பூரகம் ரேசகம் கும்பகம் முதலியனவாம்.*

**ஸமாநோவ்யாப்யநிகிலம் சரீரம் வஹ்நிநாஸஹ**
**த்வி: ஸப்ததிஸஹஸ்ரேஷு நாடீரத்திரேஷுஸஞ்சரந் 31**

**புக்தபீதரஸாந் ஸம்காநயந்தேஹ புஷ்டிக்ருத் 32**

(பொ-ரை): ஸமானனானது அக்கிநியோடுகூட ஸகல சரீரத்தையும் வியாபித்துக்கொண்டு எழுபத்திராயிரம் நாடித்து வாரங்களிலும் ஸஞ்சரிக்கின்றதாய், புசிக்கப்பட்டதும் அருந்தப் பட்டதுமாகிய ரஸங்களை நன்கு கொண்டு சேர்க்கின்றதாய்த் தேஹ புஷ்டியைச் செய்கின்றது.

**உதாந: பாதயோராஸ்தேஹஸ்தயோரங்கஸந்திஷு**
**கர்மாஸ்யதே ஹோந்நயநோத்க்ரமணாதிப்ரகீர்த்திதம் 33**

(பொ-ரை): உதானனானது கால்களிலும் கைகளிலும் அங்கஸந்திகளிலும் இருக்கின்றது. இதன் (கர்மமானது) தொழிலானது எழுந்திருக்கச் செய்தல், மேல்கிளம்பச் செய்தல் முதலியது என்க.

**த்வகாதிதாதூநாச்ரித்ய பஞ்சநாகாதய: ஸ்திதா:**
**உத்காராதி நிமேஷாதி க்ஷுத்பிபாஸாதிகம் க்ரமாத் 34**
**தந்த்ரீப்ரக்ருதிசோகாதிதேஷாம் கர்மப்ரகீர்த்திதம்**

(பொ-ரை): நாகன், கூர்ம, க்ருகர, தேவதத்த, தனஞ்சயன் என்கிற ஐந்து வாயுக்களும் த்வக் முதலிய தாதுக்களைப் பற்றிக் கொண்டிருக்கின்றன. அவைகளின் தொழில் முறையே: கக்குதல் முதலியது, இமைகொட்டுதல் முதலியது, பசிதாகம் முதலியது, சோம்பல் கொட்டாவி முதலியது, சோகம் முதலியது என்பதாம்.

**அக்நேஸ்து ரோசகம் ரூபம் தீப்தம் பாகம் ப்ரகாசதாம் 35**

**அமர்ஷ தீக்ஷ்ணஸூக்ஷ்மாணாம் ஓஜஸ்தேஜஸ்து சூரதாம்**
**மேதாவிதாம் ததாதத்தே ஜலாத்துரஸநம் ரஸம் 36**
**சைத்யம் ஸ்நேஹம் த்ரவம் ஸ்வேதம்காத்ராதிம்ருதுதாமபி**

(பொ-ரை): அக்கிநியிடமிருந்து நேத்திர இந்திரியம் உருவம் வெண்மைமுதலிய நிறம் உண்ட உணவை ஜடராக்நியால் பாகம் செய்தல் முதலியது, விளக்கம், பொறுமையின்மை, கொடுந் தன்மை, இளைப்புற்றிருத்தல் இவைகளையும், ஓஜஸ் தேஜஸ் சூரத்தன்மை மேதாவித்தன்மை இவைகளையும் கிரஹிக்கின்றது. ஜலத்தினின்றும் நாவையும் ரஸத்தையும் சீதளத்தன்மையையும் அடர்ந்திருத்தலையும் த்ரவத்தையும் வியர்வையையும், அங்கங்கள் ம்ருதுவாய் இருத்தலையும் கிரஹிக்கின்றது.

**பூமேர்க்ராணேந்த்ரியம்**
**கந்தம்ஸ்தைர்யம்தைர்யஞ்சஸௌரபம்** 37

**த்வகஸ்ருங்மாம்ஸமேதோஸ்திமஜ்ஜா சுக்ராணிதாதவ:**
**அந்நம்பும்ஸாசிதம் த்ரேதாஜாயதெ ஜடராக்நிநா** 38

*(பொ-ரை): ப்ருதிவியில் இருந்து க்ராணேந்த்ரியம் நாற்றம் கனம் தைரியம் பருமன் இவைகளைப் பெறுகின்றது. தொக்கு, உதிரம், மாம்ஸம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்கிலம் இவைகள் ஸப்ததாதுக்களாம். மனிதனால் புசிக்கப்பட்ட உணவு ஜடராக்கினியால் மூவகையாகின்றது.*

**மலம் ஸ்தவிஷ்டோபாக: ஸ்யாநமத்யமோமாம்ஸதாம் வ்ரஜேத்**
**மந: கநிஷ்டோபாகஸ்ஸ்யாத்தஸ்மா தநநமயம்மந:** 39

*(பொ-ரை): மலமானது ஸ்தூலமாகிய பாகம். மத்திமபாகம் மாம்ஸமாகின்றது. ஸூக்ஷ்மபாகமானது மனமாகின்றது ஆதலின்* மனம் அன்னமயம் என்று சொல்லப்படுகின்றது.

**அபாம் ஸ்தவிஷ்டோ மூத்ரம்ஸ்யாத் மத்யமோருதிரம்வ்ரஜேத்**
**கநிஷ்டபாக: ப்ராண: ஸ்யாத்தஸ்மாத் ப்ராணோஜலாத்மக:** 40

*(பொ-ரை): ஜலத்தினது ஸ்தூலபாகம் மூத்திரமாகின்றது மத்தியபாகமானது ரத்தத்தை அடை கின்றது, நுட்பமாகிய பாகமானது ப்ராணன் ஆகின்றது. ஆதலால்* ப்ராணன் ஜலமயம் என்பதாம்.

**தேஜஸோ அஸ்திஸ்தவிஷ்டஸ்யாத் மஜ்ஜாமத்யஸமுத்பவ:**
**கநிஷ்டா வாக்மதா தஸ்மாத்தேஜோபந்நாத்மகம ஜகத்** 41

*(பொ-ரை): அக்கினியினுடைய ஸ்தூலமாகிய பாகமானது எலும்பாகும், மஜ்ஜை எனும் தாது மத்திமபாகமாகின்றது, ஸூக்ஷ்மபாகமானது வாக் என்னப்படுகின்றது. ஆதலின் ஜகமானது தேயு ஜலம் அந்நரூபமாய் உள்ளது.*

**லோஹிதாஜ்ஜாயதேமாம் ஸம்மேதோமாம்ஸஸமுத்வம்**
**மேதஸோ அஸ்தீநி ஜாயந்தேமஜ்ஜாவாஸ்திஸமுத்பவா** 42

*(பொ-ரை): ரத்தத்தினின்றும் மாம்ஸமும், மாம்ஸத்திலிருந்து மேதஸ்ஸும், மேதஸ்ஸிலிருந்து எலும்புகளும், எலும்புகளிலிருந்து மஜ்ஜையும் உண்டாகின்றது.*

**நாட்யோபிமாம்ஸங்கா தாத்சுக்ரம்மஜ்ஜாஸமுத்பவம்**
**வாதபித்தகபாஸ்சாத்ரதாதவ: பரிகீர்த்திதா: 43**

*(பொ-ரை): மாம்ஸங்களில் இருந்து நாடிகள் உண்டாகின்றன. ரேதஸானது மஜ்ஜையிலிருந்து உண்டாகின்றது. வாதபித்த கபங்கள் இத்தேகத்திலுள்ள தாதுக்கள் என்று சொல்லப்பட்டுள்ளன.*

**தசாஞ்ஜலிஜலம்ஞேயம் ரஸஸ்யாஞ்ஜலயோநவ**
**ரக்தஸ்யாஷ்டௌ புரீஷஸ்யஸப்தஹிச்லேஷ்மணஸ்சஷட் 44**

**பித்தஸ்யபஞ்ச சத்வாரோ மூத்ரஸ்யாஞ்ஜலயஸ்த்ரய:**
**வஸாயாமேதஸொத்வௌது மஜ்ஜாத்வஞ்ஜலிஸம்மித: 45**

**அர்த்தாஞ்சலிததாசுக்ரம் ததேவபலமுச்யதே**
**அஸ்த்நாம்சரீரே ஸங்க்யாஸ்யா த்ஷட்டியுக்தம் சதத்ரயம் 46**

*(பொ-ரை): ஜலமானது பத்து அஞ்ஜலி பரிமாணம் உடையது என்று அறியத்தக்கது. (அஞ்ஜலியெனின் இருசிரங்கைகள் என்பது பொருள். சிரங்கை-உள்ளங்கை) ரஸத்திற்கு அன்னஸாரத்திற்கு ஒன்பது அஞ்ஜலி பரிமாணமும், ரத்தத்திற்கு எட்டும், மலத்திற்கு ஏழும், கபத்திற்கு ஆறும், பித்தத்திற்கு ஐந்தும், மாம்ஸ திரவத்திற்கு மூன்றும், ஹ்ருதயமாம்ஸத்திற்கு இரண்டும், மஜ்ஜையானது ஒரு அஞ்ஜலி பரிமாணமும், சுக்கிலம் அரை அஞ்ஜலியாம். அதுவே பலம் என்று சொல்லப்படுகின்றது. எலும்புகளின் எண்ணிக்கை முன்னூற்று அறுபதாம்.*

**ஜலஜாநிகபாலாநி ருசகாஸ்தரணாநிச**
**நளகாதீநிதாநயாஹு: பஞ்சதாஸ்தீநி ஸூரய: 47**

*(பொ-ரை): எலும்புகள் ஜலஜங்கள் என்றும் (தாமரை போன்றனவும்), கபாலங்கள் என்றும் (சிரசில் உள்ளனவும்) ருசகங்கள் என்றும், ஆஸ்தரணங்கள் என்றும் (மாதளை போன்றனவும், ஆஸனம் போன்றனவும்) நளகம் (கணுக்கால் எலும்பு முதலியன) என்றும் ஐந்து வகைப்பட்டன என்று விதங்களாய் வித்வான்கள் சொல்லுகின்றனர்.*

**த்வேஶதே த்வஸ்திஸந்தீநாம்ஸ்யா தாம்தத்ரதஶோத்தரே**

*(பொ-ரை): ஆண்டு ஸந்திகளிலுள்ள எலும்புகளின் எண்ணிக்கை இருநூற்றுப்பத்து.*

**ரௌரவா ப்ரஸராஸ்கந்தஸேசநா: ஸ்யுருலூகலா:**
**ஸமுத்ராமண்டலாஶ் ஶங்காவர்தாவமந குண்டலா:**
**இதயஷ்டதாஸமுத்திஷ்டாஶ்ஶரீ ரேஷ்வஸ்தி ஸந்தய: 48**

*(பொ-ரை): ரௌரவங்கள், ப்ரஸரங்கள், ஸ்கந்தஸேசனங்கள், உலூகலங்கள், ஸமுத்ரங்கள், மண்டலங்கள், சங்காவர்த்தங்கள், வாமனகுண்டலங்கள் என்று எண்வகையாய் சரீரத்திலுள்ள எலும்புகள் சொல்லப்பட்டுள்ளன.*

**ஸார்த்தகோடித்ரயம்ரோம்ணாம்ஶ் மஶ்ருகேசாஸ்திலக்ஷணம்**
**தேஹஸ்வரூபமேவந்தே ப்ரோக்த தசரதாத்மஜ**
**யஸ்மாதஸாரோநாஸ்த்யேவபதார்த்தோபுவநத்ரயே 49**

*(பொ-ரை): உரோமங்கள் மூன்றரைக்கோடிக்கணக்கு உள்ளன. மீசைகேசம் இவைகள் மூன்றுலக்ஷங்களாம் ஓ தசரதன்தநயனே, இவ்வாறு உனக்கு தேஹஸ்வரூபம் சொல்லப் பட்டதன்றோ யாதொன்றைக் காட்டிலும் இழிவாகியது மூன்று உலகத்திலும் இல்லையோ அப்படிப்பட்டதன்றோ இத்தேஹம்.*

**கேஹேஸ்மிந்நபிமாநேந நமஹோபாயபுத்தய:**
**அஹங்காரேணபாபேந க்ரியநதே ஹந்தஸாம்ப்ருதம் 50**

*(பொ-ரை): இந்த தேஹத்தினில் அபிமானமாகிய மிக்கக் கெட்டதாகிய கொடியதாகிய அகங்காரத்தினால் இம்மனிதப் பிறவியில் பிறவிப்பிணி நீங்கி ஸுகம் பெறும் உபாயமாகிய பரசிவவிசாரம் எனும் சித்தவிருத்திகள் செய்யப்படுகின்றது இல்லை.*

**தஸ்மாதேதத்ஸ்வரூபந்து விபோத்தவ்யம் மநீஷிணா 51**

*(பொ-ரை): ஆதலால் அஹங்காரத்திற்கு இடமாகிய தேஹத்தின் ஸ்வரூபம் புத்திமான்களால் நன்கறிந்து கொள்ள வேண்டியது.*

*(ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.)*



# ஜீவஸ்வரூப கதனம் என்னும் பத்தாவது அத்தியாயம்

*சிவசொரூபம் - சுகம், துக்கம் யாவும் ஜீவாத்மாக்களுக்கேயன்றி, பரமாத்மாவிற்கில்லை என்றும், அனைத்தும் சிவமய சொரூபமே என்றும் இந்த அத்தியாயம் விளக்குகின்றது.*

**இராமன் வேண்டியதாவது:**

**பகவந்நத்ரஜீவோஸௌ ஜந்தோர்தேஹேவதிஷ்டதே**
**ஜாயதே வாகுதோ ஜீவஸ்வரூபமவாஸ்யகிம்வத 01**

பொழிப்புரை: ஓ பகவனே, இந்தப் பிராணியின் தேஹத்தில் உள்ளவனாய் இது காறும் சொல்லப்பட்ட ஜீவன்தேகத்திலும் தனித்துள்ளவனா? அல்லது உண்டாகின்றவனா? எக்காரணத்தால் ஜீவன் என்று சொல்லப்படுகின்றான்? இவனது ஸ்வரூபம்தான் யாது? சொல்லும்.

**தேஹாந்தேவாகுத்ரயாதி கத்வாவாகுத்ரதிஷ்டதி**
**கதமாயாதி வாதேஹம் புநர்நாயாதிவாவத 02**

(பொ-ரை): தேஹம் நசித்தபின் ஜீவன் எங்கு செல்லு கின்றான்? சென்று எங்கிருக்கின்றான்? எப்படி வருகின்றான்? அல்லது மறுபடியும் வந்து தேஹத்தை அடைகின்றது இல்லையா? என்ன சொல்லும்?

**''ஸ்ரீ பகவாந் கூறலானார்''**

**ஸாதுப்ருஷ்டம்மஹாபாக குஹ்யாத்குஹ்யதமம்ஹியத்**
**தேவைரபி ஸுதுர்ஜ்ஞேய மிந்த்ராத்யைர்வாமஹர்ஷிபி: 03**

**அநயஸ்மைநைசவக்தவ்யம் மயாபிரகுநந்தன**
**த்வத்பக்த்யாஹம்பரம்ப்ரீதோ:வக்ஷ்யாம்யவஹிதஶ்ஶ்ருணு 04**

(பொ-ரை): ஓ மஹாபாக்கியவானே, உன்னால் நன்குவினவப் பட்டது. யாதொரு இவ்வினா ரஹஸ்யத்திலும் ரஹஸ்யமாய் உள்ளதோ, இந்திராதிதேவர்களாலும் மஹருஷிகளாலும் யாதொன்று எளிதில் அறியமுடியாததோ, ஓ ரகுகுலத்தில் தோன்றியவனே, என்னாலும் ஏனையோர்களுக்குச் சொல்லக்

கூடாதது ஆயினும் யான் உனது பக்தியால் மிகவும் பிரீதி யடைந்தவனாய்க் கொண்டு சொல்லுகின்றேன் ஸாவதானனாய் சிரவணஞ் செய்வாயாக.

**ஸத்யஜ்ஞானாத்மகோநந்தஸ்ஸச்சிதாநந்தவிக்ரஹ:**
**பரமாத்மா பரஞ்ஜ்யோதி வ்யக்தோவயக்தகாரணம் 05**

**நித்யோவிஶுததஸ்ஸர்வாத்மா நிர்லோபோஹந்நிரஞ்ஜந**
**ஸர்வதர்மவிஹீநஶ்ச நக்ராஹ்யோமநஸாபிச 06**

*(பொ-ரை):* நான் ஸத்தியபோதவடிவனும், அந்தமில்லாதவனும், பேரானந்தவடிவனும், பரமாத்மாவும், பரஞ்ஜோதியும், அவ்யக்தனும், அவ்யக்தத்திற்கும், ஆதாரமாயுள்ளவனும், நித்தியனும், நிர்மலனும், ஸகல பொருள்களின் வடிவங்களுக்கு ஸர்வாத்மாவாய் உள்ளவனும், அஸங்கனும், நிஷ்கிரியனும், ஸகலதர்மங்களுநும் இல்லாதவனும் மனதிற்கும் எட்டாதவனுமாய் உள்ளவன்:

**நாஹம்ஸர்வேந்த்ரியக்ராஹ்ய**
**ஸர்வேஷரம்க்ராஹகோஹ்யஹம்**
**ஜ்ஞாதாஹம் ஸர்வலோகஸ்ய மமஜ்ஞாதாநவித்யதே 07**

*(பொ-ரை):* நான் எவ்விந்திரியத்தாலும் அறியக்கூடாதவனும் எல்லாவற்றையும் அறியச்செய்வோனுமாய் உள்ளவன். நான் ஸகல உலகங்களையும் அறிகின்றவன். என்னை அறிகின்றவன் இல்லை.

**தூரஸ்ஸர்வவிகாராணாம் பரமாண்வாதிகஸ்யச**
**யதோவாசோநிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ 08**

*(பொ-ரை):* ஸகலவிகாரங்களுக்கும் பரமாணு முதலியவைகளுக்கும் தூரத்தில் உள்ளவன். வாக்குகள் மனதோடுகூட எவனிடம் அடையாமல் திரும்புகின்றனவோ,

**ஆநந்தம் ப்ரஹ்மமாம்ஜ்ஞா த்வாநபிபேதிகுதஶ்சந**
**யஸ்து ஸர்வாணி பூதாநி மய்யேவேதிப்ரபச்யதி 09**
**மாம்சஸர்வேஷு பூதேஷு ததோநவிஜுகுப்ஸதே**

(பொ-ரை): ஆனந்தவடிவாகிய ப்ரும்மமான என்னை த்யானம் செய்யின் எதனாலும் பயமடையான். யாதொருவன் ஸகல பூதங்களிலும் யானே என்றும் காண்கின்றானோ அவன் அதன் பின்னர் எதனையும் வெறுக்கமாட்டான்.

**யஸ்யஸர்வாணிபூதாநி ஹ்யாத்மைவாபூத்விஜாநத:**
**கோமோஹஸ்தத்ரகஶ்ஶோக: ஏகத்வமநுபச்யத: 10**

**ஏஷஸ்ஸர்வேஷு பூதேஷு கூடாத்மாநப்ரகாசதே**
**த்ருஶ்யநேத்வக்ர்யயாபுத்த்யாஸூக்ஷ்மயாஸூக்ஷ்மதர்சிபி: 11**

(பொ-ரை): நன்கு அறிவோனாகிய எவனுக்கு ஸகல பூதங்களும் ஆத்மாவாகவே ஆச்சுதோ, ஏகத்தன்மையைக் காண்போனாகிய அவனுக்கு மோஹம் ஏது? சோகம் ஏது? இவ்வாத்மா ஸகலபூதங்களிலும் கூடியவனாய் இருந்துகொண்டு நன்கு காணப்படுகின்றது இல்லை. ஸூக்ஷ்ம திருஷ்டி யுடையவர் களால் கூர்மையாயும் ஏகாக்ரமாயும் உள்ள புத்தியால் காணப்படு கின்றான்.

**அனாத்யவித்யயாயுக்தஸ்ததாப்யே கோஹமவ்யய:**
**அவ்யாக்ருதப்ரஹ்ம ரூபோ ஜகத்கர்த்தாமஹேச்வர: 12**

(பொ-ரை): நான் ஏகனும், நாசம் இல்லாதவனுமாய் உள்ளவன். அங்ஙனமாயினும், அனாதியாகிய அவித்தையோடு கூடியவனாய்க்கொண்டு அவ்யாக்ருத ப்ரும்ஹ வடிவமாய் இருந்து ஜகத்கர்த்தாவாகிய மஹேஸ்வரன் ஆகின்றேன்.

**ஞானமாத்ரேயதாத்ருச்யமிதம்ஸ்வப்நேஜகத்ரயம்**
**தத்வந்மயிஜகத்ஸர்வம்த்ருச்யதே ஸ்திவிலீயதே 13**

(பொ-ரை): கனவினில் உள்ளதாகிய மூவுலகும் ஞான மாத்திரத்தில் எப்படிக் காணப்படுகின்றதோ, அதுபோலவே ஸகல ஜகமும் என்னிடம் தோன்றுகின்றது நிற்கின்றது ஒடுங்குகின்றது.

**நாநாவித்யாஸமாயுக்தோ ஜீவத்வேந வஸாம்யஹம்**
**பஞ்சகர்மேந்த்ரியாண்யேவபஞ்சஞாநேந்த்ரியாணிச 14**

**மநோபுத்திரஹங்காரஸ்சித்தம் சேதிசதுஷ்டயம்**
S5 **வாயவ: பஞ்சமிளி தாயாந்திலிங்கசரீரதாம் 15**

*(பொ-ரை): நான் எண்ணிறந்த அவித்தைகளோடு கூடியவனாய் ஜீவத்தன்மை பெற்று வஸிக்கின்றேன். கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, மனோ புத்தி சித்த அஹங்காரங்களாகிய நான்கு, வாயுக்கள் ஐந்து ஆகிய இவைகள் கூடி லிங்க சரீரத்தன்மையைப் பெறுகின்றன.*

**தத்ராவித்யாஸமாயுக்தம் சைதன்யம் ப்ரதிபிம்பிதம்**
**வ்யாவஹாரிகஜீவஸ்து க்ஷேத்ரஜ்ஞ புருஷோபிவா** 16
**ஸ ஏவ ஜகதாம்போக்தா நாந்யோய புண்யபாபயோ:**

*(பொ-ரை): லிங்கதேஹம் என்னப்படும் ஸூக்ஷ்மசரீரத்தில் பிரதிபிம்பிக்கப்பட்ட அவித்தையோடு கூடிய சைதன்யமானது வ்யாவஹாரிக ஜீவன் என்றும், க்ஷேத்ரக்ஞன் என்றும், புருஷன் என்றும் சொல்லப்படுகின்றது. அவனே அனாதிகளாகிய புண்ணிய பாப பயன்களைப் புசிப்பவன்.*

**இஹாமுத்ரகதிஸ் தஸ்யஜாக்ரத் ஸ்பப்நாதிபோக்த்ருதா** 17

**யதாதர்ப்பண காளிம்நாமலிம்த்ருச்ய தேமுகம்**
**தத்வதந்த: கரணகைர் தோஷைராத்மாபித்ருச்யதே** 18

*(பொ-ரை): அவ்விதமான லிங்கசரீரத்திலிருந்து கொண்டே இவ்வுலகிலிருந்து ஸ்வர்க்கநரகங்களுக்கும், ஸ்வர்க்க நரகங்களிலிருந்து இவ்வுலகத்திற்கும் போக்குவரத்து செய்தலும், ஜாக்கிர ஸ்வப்பனம் முதலியவைகளில் உள்ள ஸுகதுக்கத்தைப் புசித்தலுமாம். முகமானது கண்ணாடியின் மலத்தினால் அழுக்குற்றதாய்க் காணப்படுகின்றது; அது போலவே அந்தக்கரண தோஷங்களால் ஆன்மாவும் தோஷமுள்ளதுபோலக் காணப்படுகின்றது.*

**பரஸ்பராத்யாஸவசாதந்தகரணாத்மநோ:**
**ஏகீபாவாபிமாநேநபராத்மாதுக்கபாகிவ** 19

*(பொ-ரை): அந்தக்கரண ஆத்மாக்களுக்கு ஒன்றிலொன்றின் ஆரோபத்தால் ஒன்றென்பதாகிய பாவனையால் வந்த அபிமானத்தால் பரமன் துக்கமுற்றவன் போலாகின்றான்.*

**மருபூமௌஜலத்வேந மத்யாஹ்நார்கமரீசிகா:**
**த்ருச்யந்தே மூடசித்தஸ்யநஹ்யார்த்ராஸ்தாபகாரகா:** 20

**தத்வதாத் மாபிநிர்லே போத்ருச்யதே மூடசேதஸாம்**
**ஸ்வாவித்யாமாத்ரதோஷேணகர்த்ருத்வாதிகதர்மவாந் 21**

**தத்ரசாந்நமயேபிண்டே ஹருதிஜீவோ அவதிஷ்டதே**
**ஆநகாக்ரம்வ்யாப்யதேஹம்தத்ப்ருவே அவஹிதஶ்ஶ்ருணு. 22**

*(பொ-ரை): பாலைவனத்தில் நடுப்பகலிலுள்ள ஸூரிய கிரணங்கள் மூடனுக்கு ஜலமாகத் தோன்றுகின்றன; ஆனால் சிறிதும் ஈரமுடையனவன்று. கேவலம்தாபத்தையே செய்வனவாம். அது போலவே, அஸங்கனாகிய ஆன்மா மூடபுத்தி உடையோர் களுக்குத் தமது அவித்யாதோஷத்தினால் கர்த்திருத்துவம் முதலியன உடையனாகக் காணப்படுகின்றான். ஆண்டு அந்நவிகாரமாகிய இத்தேகத்தினில் ஹிருதயத்தில் ஜீவன் நகமுனைவரையிலும் தேஹத்தை வியாபித்துக் கொண்டிருக்கின்றான். அதனைச் சொல்லுகின்றேன் சாவதானமாய்க் கேட்பாயாக.*

**ஸோயம் ததபிமாநேநமாம்ஸபிண்டோவிராஜதே**
**நாபேரூர்த்வமத: கண்டாத்வ்யாப்யதிஷ்டதியத்ஸதா 23**

**தஸ்யமத்யேஸ்திஹ்ருதயம் ஸநாளம்பத்மகோசவத்**
**அதோமுகஞ்சதத் ராஸ்திஸூக்ஷ்மம் ஸுஷிரமுத்தமம். 24**

*(பொ-ரை): அந்த இம்மாம்ஸ பிண்டமான தேஹமானது ஜீவனின் அபிமானத்தினால் விளங்குகின்றது. நாபிக்கு மேல் கண்டத்திற்குக் கீழ்எப்போதும் விஸ்தாரமாயுள்ளது யாதொன்று (மார்பு)ளதோ அதன் காம்போடுகூடியதும் தாமரைமொக்குப் போன்றதும் கீழ்முகமும் ஆகிய இருதயம் இருக்கின்றது. அதில் நுட்பமாயும் ஸர்வசிரேஷ்டமாயும் உள்ள தஹராகாசம் என்ற அவகாசம் ஒன்றிருக்கின்றது.*

**தஹராகாஶமித்யுக்தம் தத்ரஜீவோவதிஷ்டதே**
**வாலாக்ரசதபாகஸ்யசததாகல்பிதஸ்யச 25**
**பாகோஜீவஸ்ஸவிஜ்ஞேயஸ்ஸசாநந்த்யாயகல்பதே.**

*(பொ-ரை): அங்கு ஜீவன் இருக்கின்றான். கேசமுனையினை நூறாக்கிய அந்த பாகத்தையும் நூறாக்கினால் நிகழும்பாகமானது ஜீவனாம். அந்த ஜீவன் அந்தமுறாத் தன்மையை உடையோன் என்பதாம்.*

**கதம்பகுஸுமோத்பத்தகேஸரா இவஸர்வத: 26**
**ப்ரஸ்ருதாஹ்ருதயாந் நாட்யோ யாபிர்வ்யாப்தம் சரீரகம்**

*(பொ-ரை): கடப்பம் பூவினிலுள்ள கேஸரங்கள் போல ஹ்ருதயத்தினின்று நாடிகள் எங்கும் பரவியிருக்கின்றன. எவைகளால் சரீரம் வியாபிக்கப்பட்டு இருக்கின்றதோ,*

**ஹிதம்பலம்ப்ரயச்சந்திதஸ்மாத்தேநஹிதாஸ்ம்ருதா: 27**
**த்வாஸப்ததிஸஹஸ்ரைஸ்தாஸ்ஸங்க்யா தாயோகவித்தமை:**

*(பொ-ரை): யாதொருகாரணத்தால், அந்நாடிகள், ஹிதம் என்னப்படும் பலத்தைத் தருகின்றனவோ, அக்காரணத்தால், ஹிதா என்னப்பட்டுள்ளன. அந்நாடிகள், யோகமுணர்ந்த பெரியோர்களால், எழுபத்திரண்டாயிரம் என்பதாகக் கணக்கிடப்பட்டுள்ளன.*

**ஹ்ருதயாத்தாஸ்து நிஷ்க்ராந்தா யதார்க்காத்ரச்மயஸ்ததா 28**
**ஏகோத்தரசதம் தாஸ்துமுக்யாவிஷ்வக்விநிர்க்கநா:**

*(பொ-ரை): ஸூர்யனிடமிருந்து கிரணங்கள் எப்படியோ அப்படி அந்த நாடிகள் ஹ்ருதயத்தினின்றும் வெளிப்பட்டிருக்கின்றன. அந்நாடிகளுள் நூற்றொரு நாடிகளே முக்கியங்களாய் எங்கும் பரவியிருக்கின்றன.*

**வஹந்த்யம்போயதாநத்யோ நாட்ய: கர்மபலம்ததா 29**
**அநந்தைகோர்த்வகாநாடீ மூர்த்தபர்யந்தமஞ்ஜஸா.**

*(பொ-ரை): நதிகள் ஜலத்தை வஹிக்கின்றனபோல, நாடிகள், கர்மபலமாகிய ஸுகதுக்கங்களை வஹிக்கின்றன. அவைகளுள், கபாலம்வரையில் நேராகச் செல்லுகின்றதும், அனந்தமாகிய பதத்தை அடைவதற்குத் துவாரமாயும் உள்ள ஓர் நாடியுள்ளது.*

**ப்ரதீந்த்ரியம்தசதசநிர்க்கதாவிஷயோந்முகா: 30**
**நாட்ய: ஸர்மாதிஹேதுத்வாத்ஸ்வப்நாதிபலபுக்தயே**

*(பொ-ரை): விஷயங்களை நோக்குகின்றனவாய் ஒவ்வோரிந்திரியத்திலும் பத்துப் பத்து நாடிகள் ஸம்பந்தம் பெற்றுள்ளனவும் ஸுகதுக்க ஹேதுவாய் ஸ்வப்பனம் முதலிய பயன்களைப் புசிப்பதற்கு உபயோகப்படுகின்றனவுமாய் உள்ளன.*

**ஸுஷும்நேதிஸமாதிஷ்டாதயாகச்சந்விமுச்யதே 31**
**தயோபசிதசைதன்யம் ஜீவாத்மாநம்விதுர்புதா:**

*(பொ-ரை): யாதொன்று ஸுஷும்னை என்று சொல்லப் பட்டதோ அதன்வழி செல்லுகின்றவன் கிரமமாய் முக்தி அடைகின்றான். அந்த ஸுஷும்னையில் செய்த ஸகுணோபாஸ்தி அப்பியாஸத்தால் மேன்மைபெற்ற சைதன்யமும் ஜீவான்மா என்றே பெரியோர் அறிகின்றனர். (அப்பியாஸம் - பயிற்சி)*

**யதா ராஹுரத்ருச்யோ பித்ருச்யதே சந்த்ரமண்டலே 32**
**தத்வத்ஸர்வகதோப்யாத்மா லிங்கதேஹேபித்ருச்யதே.**

*(பொ-ரை): ராஹு காணப்படாததாயினும் சந்திர மண்டலத்தில் காணப்படுகின்றதுபோல ஆத்மா எங்கும் உள்ளவனாய் இருப்பது பற்றி, காணப்படாத உருவமுடையோன் ஆயினும், ஸூக்ஷ்மதேஹத்தின் அங்கமாகிய மனதினில் காணப்படுகின்றான்.*

**த்ருச்யமாநேயதாகும்பே கடாகாசோபித்ருச்யதே 33**
**தத்வத்ஸர்வகதோப்யாத்மா லிங்கதேஹேபித்ருஸ்யதே**

*(பொ-ரை): ஆகாசமும் காணப்படுகின்றதாகிய குடத்தினில் குடாகாச உருவமாக எப்படிக் காணப்படுகின்றதோ அப்படியே எங்கும் உள்ளவனாயினும் ஆன்மா லிங்கதேஹத்தில் காணப் படுகின்றான்.*

**நிஶ்சல: பரிபூர்ணோபிகச்சதீத்யுபசர்யதே 34**

**ஜாக்ரத்காலே யதாஞ்ஞேயமவிவ்யக்தவிசேஷதீ:**
**வ்யாப்நோதி நிஷ்க்ரியஸ்ஸர்வாந்பாநுர்தசதிசோயதா 35**

*(பொ-ரை): கிரியை இல்லாதவனும், பரிபூரணனுமாயினும் போகின்றான் என்று உபசரிக்கப்பட்டுச் சொல்வதாம். ஜாக்கிரத் காலத்தில் விஷயாகாரப்பட்டுத் தோற்றமுற்ற விருத்திகளை உடைய தாய்க்கொண்டவனாய், சூரியன் பத்துத்திசைகளையும், வியாபிக் கின்றானோ அது போல நிஷ்கிரியனாயினும் ஸகல பதார்த்தங் களையும் வியாபிக்கின்றான்.*

**நாடீபிர்வ்ருத்தயோயாந்தி லிங்கதேஹஸமுத்பவா: 36**

**தத்தத்கர்மாநுஸாரேண ஜாக்ரதபோகோபலப்தயே**
**இதம்லிங்கம்சரீராக்யம் ஆமோக்ஷம்நவிநச்யதி 37**

**(பொ-ரை):** *அந்தந்தக் கருமத்திற்குத் தக்கபடியுள்ள ஜாக்ரத்கால ஸுகதுக்கங்களைப் புசிக்க லிங்கதேகத்தினின்றும் தோன்றுவனவாகிய விருத்திகள், நாடிகளால் செல்லுகின்றன. இந்த லிங்கசரீரமானது மோக்ஷம் வரையில் நாசமடைகின்றது இல்லை.*

**ஆத்மஜ்ஞாநேநநஷ்டே அஸ்மிந்நாவித்யேஸ்வசரீரகே**
**ஆத்மஸ்வரூ பாவஸ்தாநம் முக்திரித்யபிதீயதே 38**

**உத்பாதிதே கடேயத்வத் கடாகாசத்வம் ருச்சதி**
**கடேநஷ்டே யதாகாசம் ஸ்வரூபேணாவதிஷ்டதே 39**

**(பொ-ரை):** *இந்தத் தனது சரீரமானது. ஆத்ம ஞானத்தால் அவித்தையோடுகூட நாசமடையவே பரமாத்ம ஸ்வரூப மாத்திரமாய் நிற்றலே முக்தி என்னப்படுவதாம். குடமுண்டாயின் ஆகாசம் குடாகாசத்தன்மையை அடைகின்றது. குடம் நசிக்கின் ஆகாசம் தான்மாத்திரமாய்த் தனித்திருத்தலும் போலவாம். (ஈண்டுக் குட ஸ்தானத்தில் தேகத்தை வைத்துக் கொள்க.)*

**ஜாக்ரத்கர்மக்ஷயவசாத் ஸ்வப்நபோக உபஸ்திதே**
**போதாவஸ்தாம் திரோதாய தேஹாத்யாஶ்ரயலக்ஷணாம் 40**

**கர்மோத்பாவிதஸம்ஸ்காரஸ்தத்ரஸ்வப்நரிரம்ஸயா**
**அவஸ்தாம்சப்ரயாத்யந்யாம் மாயாவீசாத்மமாயயா. 41**

**(பொ-ரை):** *ஜாக்கிரத்காலத்தில் பயன்தரும் கருமங்கள் ஓய்ந்ததுபோகவே, ஸ்வப்பனத்தில் பயன்தரும் கருமங்கள் (பயன்தர) வரவே, தேஹம் வீடு புத்திர மித்திர களத்திராதிகளையறிந்து கொண்டிருத்தலாகிய அறிவு நிலைமையை (மறைத்து) விடுத்து, செய்கைக்குத்தக்கபடி ஏற்கனவே நிகழ்ந்துள்ள வாஸனைகளை உடையனாய்க்கொண்டு ஸ்வப்பனபோகத்தில் விருப்புற்றவனாய், மாயையோடு கூடியவனாகிய ஜீவன் தனது மாயையால் வேறு நிலைமையைப் பெறுகின்றான்.*

**கடாதிவிஷயாந்ஸர்வாந் புத்யாதிகரணாநிச**
**பூதாதிகர்மவசதோ வாஸநாமாத்ரவஸ்திதாந் 42**

**ஏதாந்பச்யந்ஸ்வயம்ஜ்யோதிஸ்ஸாக்ஷ்யாத்மா வ்யவதிஷ்டதே**
**அத்ராந்த: கரணாதீநாம்வாஸனாத்வாஸனாத்மதத 43**

*(பொ-ரை): வாஸனையாக, ப்ரமாதாவினில் அத்தியாஸத்தினால் உள்ளனவாகிய குடாதிஸகல விஷயங்களையும், கர்மவசத்தால் தோன்றிய புத்திமுதலிய கரணங்களையும் பார்த்துக் கொண்டு ஸ்வயஞ்சோதியாயுள்ள பொருளானது ஸாக்ஷி ஸ்வரூபமாய் மிஞ்சி நிற்கின்றது. இந்த நிலைமையில் அந்தக்கரணம் முதலியவைகள் வாஸனையால் நிகழ்கின்றமையால் வாஸனா ஸ்வரூபத்துவம் என்பதாம்.*

**வாஸனாமாத்ர ஸாக்ஷித்வம் தேநதச்சபராத்மந:**
**வாஸனாபி: ப்ரபஞ்சோத்ரத்ருச்யதேகர்மசோதித: 44**

**ஜாக்ரத்பூமெளயதா தத்வத்கர்த்தருகர்மக்ரியாத்மக:**
**நிச்சேஷபுத்தி ஸாக்ஷ்யாத்மாஸ்வயமேவப்ரகாசதே 45**

*(பொ-ரை):அக்காரணத்தால் பரமாத்மாவுக்கு அவ்விதமாகிய வாஸனாமாத்திரத்திற்கு ஸாக்ஷியாய் இருத்தலாம். இங்கு ஸ்வப்பனத்தில் வாஸனைகளால் ஆகியதும் கர்மத்தினால் ஏவப்பட்டதுமாகிய ப்ரபஞ்சமானது ஜாக்கிரத்தில் போலவே கர்ததா கர்மம் கிரியை வடிவமாய்க் காணப்படுகின்றது. ஆத்மா ஸகல புத்தி ஸாக்ஷியாய்த் தான் விளங்கிக் கொண்டு இருக்கின்றான்.*

**வாஸனாமாத்ரயாக்ஷித்வம் ஸாக்ஷிண: ஸ்வாபஉச்யதே**
**பூதஜந்மநியத்பூதம் க்ர்மதத்வாஸனாவசாத் 46**
**நேதீயஸ்த்வாதவயஸ்யாத்பே ஸ்வப்நம்ப்ராய: ப்ரபச்யதி**

*(பொ-ரை): ஆத்மாவுக்கு வாஸனாமாத்திர ஸாக்ஷித்வமே ஸ்வப்பனம் என்பதாம். பூர்வஜன்மத்தில் எக்காரியங்கள் நிகழ்ந்தனவோ அவைகளின் வாஸனையின் வசத்தால் விசேஷமாய் பால்யவயஸில் அவ்வாஸனைகள் நெருங்கியிருத்தலால் ஸ்வப்பனம் காணுகின்றான்.*

**மத்யேவயஸி கார்க்கஶ்யாத்கரணாநாநிஹார்தித: 47**
**ப்ராயேணவீக்ஷதேஸ்வப்நம் வாஸநாகர்மணோர்வசாத்**

*(பொ-ரை): நடுப்பருவத்தில் கரணங்களின் வலிமையால் விஷயத்தில் அல்லற்பட்டவனாய்க்கொண்டு விசேஷமாய் வாஸனா கர்மங்களின் வசத்தால் ஸ்வப்பனத்தைக் காண்கின்றான்.*

**இயாஸு: பரலோகம் துகர்மவித்யாதி ஸம்ப்ருதம் 48**
**பாவிநோஜந்மநோரூபம் ஸ்வப்ந ஆத்மாப்ரபச்யதி**

*(பொ-ரை): பரலோகம் செல்லும் தருணமாகிய மரணஸமீப காலத்தில் ஜீவன் கர்மவித்தை முதலியவைகளால் வரப்போவதாகிய ஜன்மத்தின் உருவத்தை ஸ்வப்பனத்தில் காண்கின்றான்.*

**யத்வத்ப்ரபதநாத்ச்யேந: ச்ராந்தோககநமண்டலே 49**

**ஆகுஞ்ச்யபக்ஷௌயததே நீடேநிலயநாயநீ:**
**ஏவம்ஜாக்ரத் ச்வப்நபூமௌஸ்ராந்த ஆத்மாபிஸஞ்சரந். 50**
**ஆபிதகரணக்ராமகாரணேனை திசைகதாம்**

*(பொ-ரை): எப்படி பருந்தானது ஆகாயமண்டலத்தில் மிகவும் சஞ்சரித்து சிரமமடைந்ததாய்க் கொண்டு செல்லுகின்றதாய் பக்ஷைகளை ஒடுக்கிக்கொண்டு, கூண்டினில் வந்து தங்குதலின் பொருட்டு எத்தனிக்கின்றதோ, அப்படியே ஆத்மாவும் ஜாக்கிர ஸ்வப்பன பூமிகளில் திரிந்து உழன்று சிரமமடைந்ததாய்க்கொண்டு கரண வர்க்கங்களை ஒடுக்கிக்கொண்டு காரணத்தோடு சேர்ந்து அடங்குகின்றது.*

**நாடீமார்க்கைரிந்த்ரியாணாமாக்ருஷ்யாதாயவாஸநா: 51**
**ஸர்வம்க்ரஸித்வாகார்யம்சவிஞ்ஞானாத்மாவிலீயதே**
**ஈச்வராக்யே வ்யாக்ருதேதயதாஸுகமயொபவேத் 52**
**க்ருத்ஸ்நப்ரபஞ்சவிலயஸ்ததாபவதிசாத்மந.**

*(பொ-ரை): ஜீவன் நாடீமார்க்கங்களால் இந்திரியங்களது வாஸனைகளை ஆகர்ஷித்துச் சேர்த்துக் கொண்டு ஸகல காரியங் களையும் அடக்கிக்கொண்டு ஈச்வரன் எனும் அவ்யாக்ருதத்தில் விலயமடைகின்றான். பின்னர்எப்படி ஸுகமயன் ஆவானோ அவ்வாறு ஆத்மாவுக்கு ஸகல ப்ரபஞ்சவிலயம் ஏற்படுவதாம்.*

**யோஷித: காம்யமானாயாஸ்ஸம்போகாந்தேதுயத்ஸுகம் 53**
**ஸஆநந்தமயோ அபாஹ்யோ நாந்தர: கேவலஸ்ததா**

*(பொ-ரை): சிற்றின்பம் உடைய மங்கைக்கு போக இறுதியில் எப்படி சுகமோ அப்படியே அவ்வானந்தமயன் வெளியைப் பற்றியாவது, உள்ளத்தைப் பற்றியாவது நிகழ்வதின்றி கேவலம் அவ்வியக்தமாகிய ஸுகமேயாம்.*

**ப்ராஜ்ஞாத்மாநம்ஸமாஸா த்யவிஞ்ஞானாத்மா ததைவஸ 54**
**விஞ்ஞானாத்மாகாரணாத்மாததா திஷ்டம்ஸ்ததாபிச**
**அவித்யாஸூக்ஷ்மவ்ருத்யா நுபவத்யேவயதாசுகம்**

*(பொ-ரை): அந்த விஞ்ஞானமயனான ஆத்மா ப்ராஜ்ஞாத்மாவை அடைந்து ப்ராஞ்ஞ ஸ்வரூபனே ஆகின்றான். விஞ்ஞானாத்மா காரணஸ்வரூபன் ஆகின்றான். அவ்வாறு உள்ளவனாயினும் அவன் அவித்தையின் ஸூக்ஷ்ம விருத்தியினால் எப்படி ஸுகம் அனுபவிக்கின்றானோ,*

**ததாஹம்ஸுகமஸ்வாப்ஸம் நைவகிஞ்சிதவேதிஷம்**
**அஞ்ஞானமபிஸாக்ஷ்யா திவ்ருத்திபிஸ்சாநுபூயதே 55**

**இத்யேவம்ப்ரத்யபிஞ்ஞாபிபஸ்சாத்தஸ்யோபத்யதே**
**ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்த்யாக்யமே வேஹாமுத்ரலோகயோ: 56**

**பஸ்சாத்கர்மவசாதேவவிஸ்புலிங்காயதாநலாத்**
**ஜாயந்தேகாரணாதேவமநோபுத்யாதிகாநிது. 57**

*(பொ-ரை): அங்ஙனம் யான் சுகமாய்த் தூங்கினேன் ஒன்றுமறியேன் என்பதாம். அஞ்ஞானமும் ஸாக்ஷ்யாதி விருத்திகளால் அநுபவிக்கப்படுகின்றது. ஆதலின்பிறகு அவனுக்கு முற்கூறியவாறு அநுபவஸ்மரணம் உண்டாகின்றது. ஜாக்கிரத், ஸ்வப்பனம், சுஷுப்தி எனும் மூன்று அவஸ்தைகளே இவ்வுலகிலும் ஸ்வர்க்க நரகங்களிலும் உள்ளன. சுஷுப்தியின் இறுதியில் கர்மவசத்தாலேயே அக்கினியினின்றும் நெருப்புத்தணற் கண்டங்கள் போலக் காரணத்தினின்று மனோபுத்தியாதிகள் தோன்றுகின்றன. (ஸ்மரணம் - நினைத்தல்)*

**பய:பூர்ணகடோ யத்வந்நிமக்நஸ்ஸலிலாசயே**
**தைரேவோத்த்ருத ஆயாதி விஞ்ஞாநாத்மாததைத்யஜாத் 58**

**விஞ்ஞானாத்மாகாரணாத்மாததா திஷ்டந்நதாபிஸ:**
**த்ருஸ்யதேஸர்வ மேஷ்வேவநஷ்டேஷ்வாயாத்யத்ருச்யதாம் 59**

*(பொ-ரை): எப்படி ஜலமிருக்கும் தடாகம் ஏரி முதலிய வைகளில் மூழ்கப்பட்ட ஜலம் நிறைந்த குடமானது எடுக்கப்படின் முன்னுள்ள தீர்த்தத்தோடு கூடவே வருகின்றதோ, அவ்வாறு விஞ்ஞானமயனாகிய ஆத்மா காரணமய ஆத்மாவில் அடங்கி யிருந்து வருகின்றான். ஆத்மா விஞ்ஞானாத்மா காரணாத்மா என்றவ்வாறு உள்ளவன் அவ்வாறு இருத்தலின் இவைகளிலேயே ஸகலமும் காணப்படுகின்றது. இவைகள் நசித்துப்போயின் காணப்படாத் தன்மையையே அடைகின்றது.*

**ஏகாகாரோர்யமாதத்தத்கார்யேஷ்வம்பர: புமாந்**
**கூடஸ்தோத்ருச்யதே தத்வத்கச்சத்யாகச்சதீவஸ: 60**

**மோஹமாத்ரோந்தராயத்வாத் ஸர்வம்தஸ்யோபபத்யதே**
**தேஹாத்யதீத ஆத்மாபிஸ்வயம்ஜ்யோதிஸ்ஸவபாவத: 61**
**ஏவம் ஜீவஸ்வரூபம்தேப்ரோக்தம் தசரதாத்மஜ**

*(பொ-ரை): ஸூர்யன் ஒருவனே ஆயினும் அவ்வக் காரியங் களில் எப்படியோ அப்படியே பரமபுருஷனாகிய கூடஸ்தனுமாம். அதுபோலவே அவன் போகின்றது போலும் வருகின்றது போலும் காணப்படுகின்றான். ஆன்மா இயற்கையில் ஸ்வயஞ்ஜோதியாய் தேஹாதிகளுக்கு அதீதனாயினும் அஞ்ஞானமெனும் ஓர் தடை யினாலேயே அவனுக்கு ஸகலமும் ஒவ்வுவதாம். தசரதன் தநயனே, உனக்கு இவ்வாறு ஜீவஸ்வரூபம் சொல்லப்பட்டது.*

*(பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.)*



# ஜீவகத்தியாதி என்னும் பதினொராம் அத்தியாயம்

*உபாசனாமார்க்கயோகம் - தேகத்தைப் பற்றிய பேதங்களும், சொர்க்கம், நரகம் போன்ற தத்துவங்களும் விளக்கப்படுகின்றது. கர்மமே அவரவர் பிறவிக்கு காரணம் என்பது வலியுறுத்தப்படுகின்றது. ஆனந்தத்தின் தன்மையும், ஞானிகளின் மேன்மையும் விளக்கப்படுகின்றது.*

**சிவபெருமான் அருளியதாவது**

**தேஹாந்தரகதிம்தஸ்யபரலோககதிம்ததா**
**வக்ஷ்யாமிந்ருபசார்தூல மத்த: ச்ருணுஸமாஹித: 01**

*பொழிப்புரை: ஓ அரசவீரனே, ஜீவனுடைய வேறு தேஹப் பிராப்தியையும், லோகாந்தர கதியையும் சொல்லுகின்றேன். என்னிடம் ஸாவதானனாய்க் கேட்டு தெரிந்து கொள்வாயாக.*

**புக்தம்பீதம்யதஸ்த்யத்ரதத்ரஸா தாமபந்தனம்**
**ஸ்தூல தேஹஸ்யலிங்கஸ்யதேந ஜீவநதாரணம் 02**

*(பொ-ரை): எதனால் எந்த உணவு புசிக்கப்பட்டதோ, எது அருந்தப்பட்டதோ அவ்அன்னபான ரஸத்தால் ஸ்தூல ஸூக்ஷ்ம தேஹங்களுக்கு புதிதுபுதிதாகிய பற்று ஏற்படுகின்றது. அதனால் பிராணதாரணமாம். (தாரணம்-தரித்தல்)*

**வ்யாதிநாஜரயாவாபிபீட்யதே ஜாடரோ நல:**
**ச்லேஷ்மணாதேந புக்தாந்நம்பீதம் வாநபசத்யலம். 03**

*(பொ-ரை): வியாதியினாலாவது ஜரையினாலாவது கபம் ஓங்கி ஜடராக்கினியின் வலியைத் தணிக்கின்றது. அதனால் புசிக்கப்பட்ட அன்னபானாதிகள், போதுமானபடி பாகமாகின்றது இல்லை.*

**புக்தபீதரஸாபாவாத்ததாசுஷ்யந்திதாதவ:**
**புக்தபீதரஸேநைவதேஹேலிம்பந்திவாயவ: 04**

*(பொ-ரை): அன்னபான ரஸம்இல்லாமையால் அப்போது தாதுக்கள் வற்றிப்போகின்றன. தேஹத்தினில் அன்னபான ரஸத்தினாலேயே வாயுக்கள் தாதுக்களை புஷ்டிசெய்விக்கின்றன. (புஷ்டி - விருத்தி)*

**ஸமீகரோதியத்தஸ்மாத்ஸமாநோவாயுருச்யதே**
**ததாநீம்தத்ரஸாபாவாத்ஆமபந்தனஹானித:** 05
**பரிபக்வரஸத்வேந யதாம்ரம்வ்ருந்த:பலம்**
**ஸ்வயமேவபதத்யாசுததாலிங்கம்தநோர்வ்ரஜேத்** 06

*(பொ-ரை): அன்னபானரஸங்களை ஸகலநாடிகளிலும் ஸமப்படுத்தி போஷணம் செய்தலால் ஸமாநவாயு என்னப் படுகின்றது. அப்போது அன்னபான ரஸமில்லாமையால் ஆம பந்தனம் இல்லாதது பற்றிப் பழமானது, பரிபக்குவமாகிய ரஸமுடையதுபற்றி கனத்தினால் காம்புகெட்டுப் பிரிவதுபோல உடனே நசிக்கின்றது. சூக்ஷ்ம தேஹத்தினின்றும் பிரிந்து போகின்றது.*

**தத்தத்ஸ்தானாதபாக்ருஷ்ய ஹ்ருஷீகாணாம்சவாஸநா:**
**ஆத்யாத்மிகாதிபூதாநிஹ்ருத்பத்மேசைகசுதாம்கத** 07

**ததோர்த்ஸவக: ப்ராணவாயு ஸம்யுக்தோநவவாயுபி**
**ஊர்த்வோச்ச்வாஸீபவத் யேஷததா தேஹைகதாம்கத:** 08

*(பொ-ரை): அதனதன் ஸ்தானத்தில் இருந்து இந்திரிய வாஸனைகளையும் புத்திசித்தாதிகளையும் வரும் சரீரஸாதனமாகிய பூதாம்சங்களையும், ஆகர்ஷித்துக்கொண்டு, ஹ்ருதயகமலத்தில் ஒன்றாய்க்கூடிப் பிறகு வெளிப்படச் சந்நத்தமாய் மற்ற ஒன்பது வாயுக்களோடும் பிராணவாயுகூடி மேனோக்கிய சுவாசமுடையது ஆகின்றது. ஜீவன் அவ்வாறுள்ள அந்தப் பிராணவாயுவோடு கூடியவன் ஆகின்றான்.*

**சக்ஷுஷோர்வாபிமூர்த்நோவரநாடீமார்க்கம் ஸமாச்ரித:**
**வித்யாகர்மஸமாயுக்தோ: வாஸநாபிஸ்சஸம்யுத:** 09
**ப்ராஜ்ஞாத்மாநம்ஸமாச்ரித்யவிஞ்ஞானாத்மோபஸர்ப்பதி**

*(பொ-ரை): ஜீவன் உபாஸ்திகர்ம ஸம்ஸ்காரங்களோடும் சுபாஅசுப விஷயபோக வாஸனைகளோடுங் கூடியவனாய் ப்ராஞ்ஞான்மாவைப் பற்றிக்கொண்டு நாடிமார்க்கத்திற்சென்று கண்களின் வழியாயாவது சிரசின்வழியாயாவது செல்லுகின்றான்.*

**யதாகும்போநீயமாநோதேசாத்தேசாந்தரம்ப்ரதி** 10

**கபூர்ணஏவஸர்வத்ரஸ ஆகாசாபிதத்ரது**
**கடாகாசாக்யதாம்யா திதத்வல்லிங்கம்பராத்மந: 11**

**புநர்தேஹாந்தரம்யாதியதாகர்மாநுஸாரத:**
**ஆமோக்ஷாத்ஸஞ்சரத்யேவம்மத்ஸ்யகலத்வயம் 12**

*(பொ-ரை): ஓரிடத்திலிருந்து குடம் மற்றோரிடம் கொண்டு போகப்படின் எங்கும் ஆகாயம் பரிபூர்ணமேயாயினும் அதிலுள்ள ஆகாசம் குடாகாசம் எனும் பெயரைப் பெறுகின்றதோ, பரனாகிய ஆன்மாவுக்கு ஸூக்ஷ்மசரீரமும் அதுபோலவே உள்ளதாய் கர்மாநுஸாரமாய் மீண்டும் வேறுஸ்தூலதேஹத்தைப் பற்றுகின்றது. மீன் நதிமுதலியதின் இக்கரையிலிருந்து அக்கரைக்கும் அக்கரையிலிருந்து இக்கரைக்கும் சஞ்சரிப்பதுபோலவே மோக்ஷம் வரையிலும் இவ்வாறு ஸஞ்சரிக்கின்றது.*

**பாபபோகாயசேத்கச்சேத்யமதூதைரதிஷ்டித**
**யாதனாதேஹமாச்ரித்யநரகாநேவகேவலம் 13**

*(பொ-ரை): பாவங்களின் பயனைப்புசிக்க வேண்டியவனாயின் யாதனாதேஹம் எனும் யாயவ்யதேஹத்தைப் பற்றிக் கொண்டு யமதூதர்களுக்கு உட்பட்டுக் கேவலம் நரகங்களையே அடைவான். (யாதனாதேஹம் - பாவ பலன்களை அநுபவிக்கக் கூடிய தேகம்)*

**இஷ்டபூர்த்தாதிகர்மாணியொ நுதிஷ்டதிஸர்வதா**
**பித்ருலோகம்வ்ரஜத்யேஷ்ய தூமாச்ரித்யபர்ஹிஷ 14**

**தூமமராத்ரிம்தத: க்ருஷ்ணபக்ஷம்தஸ்மாச்சதக்ஷிணம்**
**அயநம்சததோலோகம்பித்ருணாம்சதத:பரம் 15**

**சந்த்ரலோகேதிவ்யதேஹம்ப்ராப்யபுங்க்தேமாம்ச்ரியம்**

*(பொ-ரை): எவன் எப்போதும் யாகம், தடாகம்வாபீ, அன்னஸத்திரம் இவைகள் முதலியவைகளின் பிரதிஷ்டை இதுபோன்ற கருமங்களை அநுஷ்டிக்கின்றானோ அவன் தான் பூஜித்த அக்கினியை ஹேதுவாய்க்கொண்டு யமதூதன் எனப்படும் ஆதிவாஹிகர் முதலாகிய தேவதைகளை அடைந்து பித்ருலோகம் செல்லுகின்றான். தூமதேவதை, ராத்திரிதேவதை, கிருஷ்ணபக்ஷ*

அபிமானிதேவதை பிறகு, தக்ஷிண அபிமானிதேவதை இவர்களின் மூலமாய் பித்ருலோகத்தை அடைகின்றான். சந்திரலோகத்தில் திவ்வியமாகிய தேஹத்தைப்பெற்று பெரும் ஸுகபோகத்தில் இருக்கின்றான்.

**தத்ரசந்த்ரசந்த்ரஸமானோ ஸௌயாவத்கர்மபலம்வஸேத் 16**
**ததைவகர்மசேஷேணயதை தம்புராவ்ரஜேத்**

(பொ-ரை): அவ்வுலகில் இந்த ஜீவன் சந்திரன்போன்றவனாய் கர்மபலம் புசிக்கும் வரையில் வஸிப்பான். அப்படியே கர்ம சேஷத்தால் இங்கிருந்துபோனவழியே மீண்டும் திரும்பி வருகின்றான். (சேஷம்-மிச்சம்)

**வபுர்விஹாயஜீவத்வம் ஆஸாத்யாகாசமேதிஸ: 17**
**ஆகாசாத்வாயுமாஸாத்ய வாயோரம்போவ்ரஜத்யத**
**அத்ப்யோமேகம்ஸமாஸாத்யத தோவ்ருஷ்டிர்பவேதஸௌ 18**
**ததோதாந்யாநி பக்ஷ்யாணி ஜாயதேகர்மசோதித:**

(பொ-ரை): அவன் அந்தஸ்தூல தேஹத்தை விடுத்து கேவலஜீவத்துவத்தை மாத்திரம் உடையவனாய் ஆகாசம், பின்னர் வாயு, அதன்பிறகு மேகஹேது, பிறகு மேகம் இவைகளையடைந்து பிறகு மழைமூலமாய்க் கர்மங்களுக்குத் தக்கபடி தான்யங்களும் உண்டிகளும் ஆகின்றான்.

**யோநிமந்யேப்ரபத்யந்தேசரீரத்வாயதேஹிந: 19**

**முக்திமந்யே நுஸம்யாந்தி யதாகர்மயதாச்ருதம்**
**ததொந்நத்வம்ஸமாஸாத்யபித்ருப்யாம்புஜ்யதேபரம் 20**

**ததஶ்ஶுக்லம்ரஜஸ்சைவபூத்வாகர்போபிஜாயதே.**
**தத: கர்மாநுஸாரேண பவேத்ஸ்த்ரீபுந்நபும்ஸக: 21**

(பொ-ரை): ஜீவன் ஸுகதுக்கங்களைப் புசிப்பதன் பொருட்டுச்சிலர் நிதம்பத்தை அடைகின்றனர். மற்ற சிலர் கர்மானுஷ்டான சித்தசுத்தியின்படி சிரவணம் செய்தவண்ணம் முக்தியடைகின்றனர். பூவுலகில் ஔஷதிகளாய் வந்தபிறகு அந்நமாய் தாய்தந்தையர்களால் புசிக்கப்படுகின்றான். பிறகு சுக்கிலமாயும் சோணிதமாயும் ஏற்பட்டுக் கர்ப்பம் ஏற்படுகின்றது.

பிறகு கர்மத்திற்குத் தக்கபடி பெண் அல்லது ஆண் அல்லது அலி இவ்வுருவாய்த் தோன்றுகின்றான்.

**ஏவம்ஜீவகதி: ப்ரோக்தாமுக்திம்தஸ்யவதாமிதே**
**யஸ்துசாந்த்யாதியுக்தஸ்ஸந்ஸதாவித்யாரதோபவேத் 22**

**ஸயாதிதேவயாநெநப்ரம் ஹலோகாவதிம்நர:**
**அர்ச்சிர்பூத்வாதிநம்ப்ராப்யசுக்லபக்ஷமதோவ்ரஜேத் 23**

**உத்தராயணமாஸாத்யஸம்வத்ஸரமதோவ்ரஜேத்**
**ஆதித்யசந்த்ரலோகௌதுவித்யுல்லோகமத:பரம் 24**

**அததிவ்ய:புமாந்கஸ்சித்ப்ரம்ஹலோகாதிஹைதிஸ:**
**திவ்யேவபுஷிஸந்தாய ஜீவமேவநம்நயத்யஸௌ 25**

*(பொ-ரை): இவ்வாறு ஜீவர்களின் கதி சொல்லப்பட்டது. இனி அவனுடைய முக்திக்கிரமத்தை உனக்குச் சொல்லுகிறேன். எவன் சாந்தி தாந்திமுதலியவைகளை உடையவனாய்க் கொண்டு, எப்போதும் ஸகுணோபாஸ்தியில் ஆவலுற்று இருக்கின்றானோ அந்த மனிதன் தேவயாநம் எனும் மார்க்கத்தினால் ப்ரும்மலோகம் செல்லுகின்றான். அர்ச்சிஸ் வடிவமாய்த் தினாபிமானி தேவதையை அடைந்து பிறகு சுக்லபக்ஷ அபிமானி தேவதையை அடைந்து பிறகு ஸம்வத்ஸர அபிமானி தேவதையையும் அடைகின்றான். பிறகு ஆதித்ய சந்திர லோகங்களையும் பின்னர் வித்யுல்லோகத்தையும் அடைகின்றான். பிறகு திவ்யபுருஷன் ஒருவன் ப்ரும்மலோகத்திலிருந்து அங்கு வருகின்றான். அவன் அந்த ஜீவனை திவ்யதேஹம் உடையோனாகச் செய்து கூட்டிக்கொண்டு போகின்றான்.*

**ப்ரும்ஹலோகே திவ்யதேஹே புக்த்வா போகாந்யதேப்ஸிதான்**
**தத்ரோஷித்வாசிரம் காலம் ப்ரும்ஹணாஸஹமுச்யதே 26**

*(பொ-ரை): பிரும்மலோகத்தில் திவ்யதேஹத்தோடு இருந்து விரும்பிய போகங்களைப் புசித்துக்கொண்டு வெகுகாலம் இருந்து பிரும்மனோடு கூடமுக்தி அடைகின்றான்.*

**சுத்தப்ரஹ்மரதோ யஸ்து நஸயாத்யேவகுத்ரசித்**
**தஸ்யப்ராணாவிலீயந்தேஜலேஸைந்தவகில்யவத் 27**

*(பொ-ரை): யாதொருவன் சுத்தப்ரும்மத்தை உபாசிக்கின்றவனோ அவன் ஓரிடத்திற்கும் செல்லுகின்றது இல்லை, அவனுடைய ப்ராணன்கள் ஜலத்தினில் உப்புக்கல்போல லயமடைகின்றன.*

குறிப்பு : *(ஜலத்துடன் சேர்ந்த உப்பு தன்சுவை முழுவதும் அச்சலத்திற்காக்கித் தன்னோடு ஒப்பச் சமன் செய்து நிற்கும் அதுபோல விரும்பி உயிரைச்சார்ந்த இறைவனும் தனக்குரிய எண் குணங்களையும் அவ்வுயிரின்கண் பதிப்பித்து தன்னோடொப்பச் செய்து நிற்பான்.)*

**ஸ்வப்நத்ருஷ்டாயதாஸ்ருஷ்டி: ப்ரபுத்தஸ்யவிலீயதே**
**ப்ரஹ்மஜ்ஞாநவதஸ்தத்வத்விலீ யந்தேததைவதே** 28

*(பொ-ரை): ஸ்வப்னத்தில் காணப்பட்ட ஸ்ருஷ்டியானது விழித்துக் கொண்டதும் எப்படி லயமடைகின்றதோ அதுபோல ப்ரம்மஞானிக்கு ஞானம் உதித்ததும் அவைகள் விலயமடைகின்றன.*

**வித்யாகர்மவிஹீ நோயஸ்த்ருதீயம்ஸ்தாநமேதிஸ:**
**புக்த்வாசநரகாந்கோரான்மஹா ரௌரவரௌரவான்** 29
**பஸ்சாத்ப்ராக்தனசேஷேணக்ஷுத்ர ஜந்துர்பவேதஸௌ**

*(பொ-ரை): யாதொருவன் உபாஸ்தி கர்மங்கள் இல்லாதவனோ அவன் மூன்றாவதாகிய ஸ்தானத்தை அடைகின்றான். மிக்க கோரங்களாயுள்ள மஹா ரௌரவரௌரவங்களாகிய நரகங்களை அடைந்து துக்கங்களை அனுபவித்துப் பின்னர் பூர்வ கர்ம சேஷத்தினால் இழிய ஜந்துவின் பிறவியைப் பெறுகின்றான்.*

**யூகாமசகதம்சாதி ஜந்மாஸௌலபதேபுவி** 30
**ஏவம் ஜீவகதி ப்ரோக்தாகிமந்யத் ச்ரோதுமிச்சஸி.**

*(பொ-ரை): இந்த ஜீவன் பூவுலகில் ஈ கொசு முதலியவைகளின் ஜந்மத்தைப் பெறுகின்றான். இவ்வாறு ஜீவகதி சொல்லப்பட்டது. ஓ இராமா, பின்னும் யாது கேட்க விரும்புகின்றனை? (என்றனர்.) (மசகம்-கொசு)*

**இராமன் வேண்டியதாவது:**

**பகவந்யத்த்வயாப்ரோக்தம் பலம்துஞானகர்மணோ: 31**
**ப்ருஹ்மலோகேசந்த்ரலோகே புங்க்தேபோகாநிதிப்ரபோ**

**கந்தர்வாதிஷுலோகேஷுகதம் போக: ஸமீரித: 32**

*(பொ-ரை): ஓ பகவனே! உம்மால் ப்ருஹ்ம லோகத்தினில், சந்திரலோகத்தினில் போகங்களைப் புசிக்கின்றான் என்று ஞானகர்மங்களின் பயன் யாதொன்று சொல்லப்பட்டதோ, அங்ஙனம் கந்தர்வாதி லோகங்களிலுள்ள போகம் எப்படி?*

**தேவத்வம்ப்ராப்நு யாத்கஶ்சித்கஶ்சிதிந்த்ரத்வமேவவா**
**ஏதத்கர்மபலம்வாஸ்துவித்யா பலமதாபிவா 33**

**தத்ப்ரூஹிகிரிஜாகாந்த தத்ரமேஸம்சயோமஹான்**

*(பொ-ரை): தேவத்துவத்தை ஒருவனும் இந்திரத்துவத்தை ஒருவனும் அடையவேண்டும் என்பது கர்மபலமாகட்டும் அல்லது உபாஸ்தியின் பலமாகட்டும், கந்தர்வாதி போகதார தம்மியத்தைச் சொல்லும். ஓ பார்வதி ரமணா, அவ்விஷயத்தில் எனக்குப் பெரிய ஸந்தேஹம் உளது.*

**சிவபெருமான் சொல்லுகிறார்**

**தத்வித்யா கர்மணோரேவா நுஸாரேணபலம்பவேத் 34**

**யுவாசஸுந்த்ர: சூரோநீரோகோ பலவாந்பவேத்.**
**ஸப்தத்வீபாம் வஸுமதீம்புக்ங்தே நிஷ்கண்டகாம்யதி 35**

**ஸப்ரோக்தோமாநுஷா நந்தஸ்தஸ்மாச்சதகுணஸ்ம்ருத:**
**மநுஷ்யஸ்தபஸாயுக்தோ கந்தர்வோஜாயதேஸ்யது 36**

*(பொ-ரை): கந்தர்வாதிபோகம் வித்தியா கர்மங்களின் அநுஸாரமாயுள்ள பலமேயாம். யௌவனப் பருவம் உடையவனும், அழகுடையவனும், சூரனும், ரோகமில்லாதவனும் பலமுடையவனுமாயுள்ள ஒருவன் ஸப்த ஸமுத்திரங்களால் சூழப்பட்ட உலகை எக்குறையுமின்றி அனுபவிக்கின்றானாயின் அது மாநுஷ ஆநந்தமாம். மனிதன் தவமுடையவனாய்க் கந்தர்வனாயின் மனிதஆனந்தத்தைக் காட்டிலும் அவனுக்கு நூறு பங்கு மிகுதியாய் ஆனந்தமுள்ளது என்று சொல்லப்பட்டது.*

**தஸ்மாச்சதகுணோ தேவகந்தர்வாணாம்நஸம்சய:**
**ஏவம்சதகுணாநந்த: உத்தரோத்தரதோபவேத் 37**

**பித்ருணாம் சிரலோகாநாம் ஆஜாநஸுரஸம்பதாம்**
**தேவதாநாமதேந்த்ரஸ்ய குரோஸ்தத்வத்ப்ரஜாபதே: 38**

**ப்ரஹ்மணஶ்சைவமானந்தா: புரஸ்தாதுத்தரோத்தரம்**

*(பொ-ரை): அதனினும் தேவகந்தர்வர்களுடைய ஆனந்தமானது நூறுபங்கு அதிகமாம் ஸந்தேகமில்லை. இவ்வாறே மேன்மேல் நூறுபங்கு அதிகமாய் ஆநந்தமுளது. சிரலோக பிதிருக்களுக்கும் ஆஜான தேவர்களுக்கும் இந்திரனுக்கும் பிருஹஸ்பதிக்கும் பிரஜாபதிக்கும் ப்ரும்மத்திற்கும் உள்ள ஆனந்தமானது முறையே ஒவ்வொன்றிலும் மேன்மேலும் நூறுபங்கு அதிகமாய் உள்ளது என்றறிக.*

**ஞானாதிக்யாத்ஸுகாதிக்யம்நாந்யதஸ்திஸுராலயே 39**

**ச்ரோத்ரியோ அவ்ரஜிநோ**
**அகாமஹதோயஸ்துத்விஜோபவேத்**
**தஸ்யாப்யேவம்ஸமாக்யாதாஆநந்தாச்சோத்தரோத்தரம் 40**

*(பொ-ரை): ஞானஆதிக்கியத்தினால் சுகச்சிறப்பாம். இதுவன்றித் தேவலோகத்தில் யாதுமில்லை. வேதாத்தியயனம் செய்து அர்த்தம் உணர்ந்தவனும் கெட்டகாரியங்களில்லாதவனும் காமக்கேடில்லாதவனும் ஆகிய யாதொரு அந்தணவரன் உளனோ அவனுக்கும் இவ்வாறே மேன்மேலும் சொல்லப்பட்ட ஆநந்தங்கள் உள்ளனவாம்.*

**ஆத்மஞானாத்பரம்நாஸ்திதஸ்மாத்தசரதாத்மஜ**
**ப்ராஹ்மண: கர்மபிர்நைவவர்த்தே நைவஹீயதே 41**

**நலப்ய: பாதகேநைவகர்மணாஞாநவாநயதி**
**தஸ்மாத்ஸர்வாதிகோவிப்ர ஞாநவாநேவஜாயதே 42**

*(பொ-ரை): ஓ தசரதன் புதல்வனே! ஆதலின் ஆத்ம ஞானத்திலும் சிறந்தது யாதுமில்லை. ஞானமுடைய அந்தணன் கர்மங்களால் வளருதலாவது தாழ்தலாவது இல்லை, ஞானவானாய்*

இருந்தால் பாதகச் செயல்களால் பற்றப்படுகின்றவன் அல்ல. ஆதலால் ஞானவானாகிய அந்தணனே ஸர்வோத்தமனாகின்றான்.

**ஞாத்வாய: குருதேகர்ம தஸ்யாக்ஷய்யபலம்பவேத்**
**யத்பலம்லபதேமர்த்ய: கோடிப்ராஹ்மணபோஜநை: 43**
**தத் பலம்ஸமவாப்நோதிஞானிநம்யஸ்துபோஜயேத்**

*(பொ-ரை): யாதொருவன், அறிந்து கர்மம் செய்கின்றானோ அவனுக்குக் குறைவற்ற பயன் நிகழும். மனிதன் கோடிப்ராஹ்மண போஜனம் செய்வித்தலால் எந்தப் பயனைப் பெறுவானோ அந்தப் பயனை ஞானிக்குப் போஜனம் அளிப்பவன் அடைகின்றான்.*

**ஞானவந்தம்த்விஜம்யஸ்துத்விஷ்யதேசநராதம: 44**
**ஸசுஷ்யமாணோம்ரியதேயஸ்மாதீச்வர ஏவஸ:**

*(பொ-ரை): யாதொரு நராதமன் ஞானியாகிய மனிதனை துவேஷிக்கின்றானோ அவன் தாபமடைந்து நசிக்கின்றான் யாதொரு காரணத்தினால் ஞானியானவன் ஈச்வரனேயோ,*

**உபாஸகோநயாத்யேவ யஸ்மாத்புநரதோகதிம் 45**
**உபாஸநரதோபூத்வாதஸ்மா தாஸ்வஸுகீந்ருப**

*(பொ-ரை): யாதொரு காரணத்தால் உபாஸகன் மீண்டும் அதோகதியை அடைகின்றது இல்லையோ ஆதலால் ஓ அரசனே, உபாஸனா தத்பரனாயிருந்து சுகமுடையவன் ஆவாய்.*

*(பதினொராவது அத்தியாயம் முற்றிற்று.)*





# பனிரண்டாவது அத்தியாயம்

*உபாசனாவிதி - இராமர் வினவும் கேள்விகளுக்கு சிவபெருமான் பதிலுரைக்கின்றார். சம்பத்து, சஞ்சரகம், அத்யாசம், அரோபம் என்ற நான்கு விதமான உபாசனைகளும் விளக்கப்படுகின்றது. இந்திரிய கட்டுப்பாடு களைப்பற்றியும். பரமசிவனின் ரூபங்களைப்பற்றியும், சதாசிவரின் இயல்புகளைப்பற்றியும் இவ்வத்தியாயத்தில் விளக்கப்படு கின்றது.*

**இராமர் வேண்டியதாவது:**

**பகவந்தேவதேவேஶநமஸ்தேஸ்து மஹேஶ்வர**
**உபாஸனாவிதிம்ப்ரூஹிதேசம் காலம்துதஸ்யசு 01**

**பொழிப்புரை:** *ஓ தேவதேவேசா, பகவனே, உமக்கு நமஸ்காரம். ஓ மஹேச்வரா, தேவரீர் உபாஸனையின் பிரமத்தையும் அதற்குரிய தேச காலகாலங்களையும் சொல்லும்.*

**சிவபெருமான் அருளியதாவது:**

**ச்ருணுராமப்ரவக்ஷயாமி தேசகாலமுபாஸநம்**
**மதம்சேநபரிச்சிந்நா தேஹாஸ்ஸர்வதிவௌகஸாம். 02**

**(பொ-ரை):** *ஓ இராமா, உபாஸனத்தையும் தேசகாலத்தையும் சொல்லுகின்றேன் கேட்பாயாக. ஸகலதேவர்களின் தேஹங்களும் எனது அம்சத்தினால் வரைந்து பிரிக்கப்பட்டனவாய் உள்ளன.*

**யேத்வந்யதேவதாபக்தாயஜந்தேச்ரத்தயாந்விதா:**
**தேபிமாமேவ ராஜேந்த்ரயஜந்த்யவிதி பூர்வகம் 03**

**(பொ-ரை):** *எவர் அந்யதேவரின் பக்தியுடை யோரும் ச்ரத்தை உடை யோருமாய் இருந்து தேவாராதனை செய்கின்றனரோ; அரசச்ரேஷ்டனே, அவர்களும் விதிப்படியின்றி என்னை பூஜிக்கின்றனர் ஆகின்றனர்.*

**யஸ்மாத் ஸர்வமிதம் விச்வம் மத்தோநவ்யதிரிச்யதே**
**ஸர்வக்ரியாணாம் போக்தாஹம் ஸர்வஸ்யாஹம்பலப்ரத: 04**

**(பொ-ரை):** *யாதொரு காரணத்தால் இச்சகலப்பிரபஞ்சமும் என்னிலும் வேற்றுமைப்படுகின்றது இல்லையோ ஆதலால் ஸகல கர்மபோக்தா நான், ஸகலர்களுக்கும் கர்மபல தாதாவும் நான்.*

**யேநாகாரேண யேமர்த்யா: மாமேவைகமுபாஸதே**
**தேநாகாரேண தேப்யோஹம் ப்ரஸந்நோவாஞ்சிதம் ததே 05**

*(பொ-ரை): எந்தமனிதர் எவ்வடிவம் உடையவனாய் என்னையே உபாஸிக்கின்றனரோ அம்மனிதருக்கு அவ்வடிவம் கொண்டவராய் ப்ரஸந்நராய் வேண்டிய பொருளைக் கொடுக்கின்றேன்.*

*"யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கவர்க்கு மாதொரு பாகனார் தாம்வருவர் . . . ." – சிவஞானசித்தியார்*

**விதிநாவிதிநா வாபிபக்த்யாயேமாமுபாஸதே**
**தேப்ய: பலம்ப்ரயச்சாமி ப்ரஸந்நோஹம் நஸம்ஶய: 06**

*(பொ-ரை): விதிப்படி யாயினும், விதியில்லாமல் ஆயினும் எவர் என்னைப் பக்தியோடு உபாஸிக்கின்றனரோ, அவர்களுக்கு நான் பிரஸந்நராய் வேண்டியதைத் தருவேன். ஸந்தேஹமில்லை.*

**அபிசேத்ஸு துராசாரோபஜதே மாமநந்யபாக்**
**ஸாதுரேவ ஸமந்தவஸ்ஸம்யக்வ்ய வஸிதோஹிஸ: 07**

*(பொ-ரை): மிக்கக்கெட்ட நடத்தை உடையோனாயினும், என்னை எவன் ஏனையபற்றை விடுத்துப் பூஜிக்கின்றானோ அவன் ஸாது என்றே எண்ணத்தக்கவன். யாதொருகாரணத்தால் நல்ல திட நிச்சயம் உடையவன் ஆகின்றானோ,*

**ஸ்வஜீவத்வேந யோவெத்தி மாமேவைகமநந்யதீ**
**தம்நபச்யந்திபாபாநி ப்ரஹ்மஹத்யாதிகாந்யபி 08**

*(பொ-ரை): எவன் மற்றதில் மனதைச்செலுத்தாதவனாய் என்னையே தனது ஆத்மாவாய் அறிகின்றானோ. அவனைப் ப்ரும்ம ஹத்தி முதலிய மஹாபாவங்களும் அணுகுகின்றது இல்லை.*

**உபாஸாவிதயஸ்தத்ர சத்வார:பரிகீர்த்திதா**
**ஸம்பதாரோபஸம்வர்காத்யாஸாகிதிமநீஷிபி: 09**

*(பொ-ரை): ஆண்டு உபாஸனா முறையானவை ஸம்பத், ஆரோபம், ஸம்வர்கம், அத்யாஸம் என்று நான்குவகையாய்ப் பெரியோர்களால் சொல்லப்பட்டுள்ளன.*

**அல்ப்பஸ்யசாதிகத் வேநகுணயோகாத்விசிந்தநம்**
**அநந்தம்வைமநஇதி ஸம்பத்விதிருதீரித: 10**

(பொ-ரை): அற்பமாய் உள்ளதை குணஸம்பந்தத்தால் மறைத்தாகச் சிந்தித்தல், அதாவது மனம் அநந்தமே என்ப முதலியது **ஸம்பத் உபாஸனை** என்று சொல்லப்படுவதாம்.

**விதாவாரோப்யயோபாஸா ஸாரோப: பரிகீர்த்தித:**
**யத்வதோங்காரமுத்கீதமுபாஸீதேத்யுதாஹ்ருத** 11

(பொ-ரை): விதியில் அங்கத்தில் ஆரோபித்து யாதொரு உபாஸனை உளதோ அஃது **ஆரோபம்** எனப்படுவதாம். எப்படியெனின் ஓங்காரத்தை உத்கீதமாக உபாஸனைசெய்க என்று சொல்லப் பட்டதோ,

**ஆரோபோபுத்திபூர்வேணய உபாஸாவிதிஶ்சஸ:**
**யோஷித்யக்நிமதிர்யத்ததத்யாஸ: ஸஉதாஹ்ருத:** 12

(பொ-ரை): புத்திபூர்வமாய் யாதொரு ஆரோபம் உளதோ, அந்த உபாசனா விதியே, அதாவது ஸ்திரீயினிடம் அக்கிநிபுத்தி செய்வது முதலியது **அத்தியாஸம்** என்னப்படுவதாம்.

**க்ரியாயோகேந சோபாஸாவிதிஸ்ஸம்வர்க்கஉச்யதே**
**ஸம்வர்த்தவாயு ப்ரளயே பூதாந்யேகோவஸீததி** 13

(பொ-ரை): கிரியா ஸம்பந்தத்தால் நிகழும் உபாஸனா முறையானது **ஸம்வர்க்கம்** எனப்படுவதாம். அதாவது பிரளயத்தில் பூதங்களை ஸம்வர்த்தம் எனும் வாயு ஒன்றே அடக்கிக் கொள்ளுகின்றது என்பதாம்.

**உபஸங்கம்யபுத்யாயதாஸநம் தேவதாத்மநா**
**தது பாஸநமந்தஸ்யாத் தத்பஹிஸ் ஸம்பதாத்ய:** 14

(பொ-ரை): புத்தி விருத்தியால் பரமாத்ம தேவதா ஸ்வரூபமாக குருமூலமாய் நிச்சயித்துத் தியானம்செய்தல் யாதோ அஃது **அந்தர் உபாஸனமாம்.** முற்கூறிய ஸம்பதாதியுபாஸனை வெளியுபாஸனையானது பற்றி பஹிர் உபாஸனையாம்.

**ஞானாந்தராநந்தரிதஸஜா திஞானஸந்ததே:**
**ஸம்பந்ததேவதாத்மத்வம் உபாஸனமுதீரிதம்** 15

*(பொ-ரை):* ஏனைய சிந்தனைகளால் சிறிதும் இடையில் தடைப்படாது ஓர் வகைப்பட்டுள்ள விருத்தி அப்பியாஸத்தின் பலத்தினால் நன்கு பரமாத்ம ஸ்வரூபத்தை அறியப்பெற்றிருத்தல் உபாஸனை என்னப்படுவதாம்.

**ஸம்பதாதிஷுபாஹ்யேஷுத்ருடபுத்திருபாஸநம்**
**கர்மகாலேததங்கேஷு த்ருஷ்டிமாத்ரமுபாஸநம் 16**

*(பொ-ரை):* ஸம்பத் முதலிய பிரபஞ்சப்பொருள்களில் உறுதியாகிய புத்தியானது உபாஸனமாம். கர்மகாலத்தில் அக்கர்ம அங்கங்களிலும் நோக்கம் மாத்திரம் உபாஸனமாம்.

**உபாஸனமிதிப் ரோக்தம் ததங்காநிப்ருவேச்ருணு**
**தீர்த்தக்ஷேத்ராதிகமநம் ஸரத்தாம்தத்ரபரித்யஜேத் 17**
**ஸ்வசித்தை காக்ரதா யத்ரதத்ராஸீதஸுகம் த்விஜ:**

*(பொ-ரை):* இவ்வாறு உபாஸனம் சொல்லப்பட்டது. அதன் அங்கங்களைச் சொல்லுகின்றேன் கேட்பாயாக. தீர்த்தக்ஷேத்திராதிகளுக்குச் செல்லுதலையும் அதனிலுள்ள ச்ரத்தையையும் விட்டுவிடுக. எங்கு சித்தம் ஏகாக்கிரப்படுகிறதோ அங்கு த்விஜன் ஸுகமாக இருந்து தியானிப்பானாக. (ஏகாக்கிரப்படுதல்-ஒன்றுபடுதல்)

**கம்பளேம்ருதுதல்பே வாவ்யாக்ரசர்மணி வாஸ்தித: 18**

**விவிக்ததேசேநியதஸ்ஸமக்ரீ வஸ்ரஸ்தநு:**
**அத்யாஸரமஸ்தஸ்ஸகலாநீந்த்ரியாணி நிருத்யச**
**பக்த்யாதஸ்வகுரும்நத்வாயோகம்வித்வாம்ஸசயோஜயேத் 19**

*(பொ-ரை):* கம்பளத்தில் அல்லது மிருதுவாகிய வஸ்திரத்திலாவது புலித்தோலிலாவது இருந்து, ஏகாந்தமாகிய இடத்தில் நியதனாய், கழுத்து தலை உடல் இவைகளை ஒழுங்காய் இருக்கச் செய்துகொண்டு, அத்தியாஶ்ரம விரதம்பூண்டு, ஸகலேந்திரியங்களையும் தகைந்து, தனது குருவைப் பணிந்து, தான் உபதேசம்பெற்ற ஸ்வரூபத்தை அநுஸந்தித்துக்கொண்டு சித்தத்தின் ஏனைய விருத்திகளை (நிரோதனம்) தகைய வேண்டும்.

**யஸ்த்வவிக்ஞாநவாந்பவத்யவ்யக்தமநஸாஸதா**
**தஸ்யேந்திரியாண்யவஶ்யாநி துஷ்டாச்வா இவஸாரதே: 20**

*(பொ-ரை): யாதொருவன் எப்போதும் மோகங்கொண்டு விஞ்ஞானம் இல்லாதவனாய் இருக்கின்றானோ அவனுக்கு இந்திரியங்கள் தேர்ப்பாகனுக்கு துஷ்டக்குதிரைகள்போல செய்யாதனவாம்.*

**விஞ்ஞாநியஸ்து பவதியத்நேநமநஸாஸஹ**
**தஸ்யேந்த்ரியாணி வச்யாநி ஸதஸ்வா இவஸாரதே: 21**

*(பொ-ரை): யாதொருவன் உழைத்து விஞ்ஞானி ஆகின்றானோ அவனுக்கு மனஸோடுகூட இந்திரியங்கள் தேர்ப்பாகனுக்கு நல்ல குதிரைகள் போல செப்பட்டன ஆகின்றன.*

**யஸ்த்வவித்ஞாநவாந்பவத்யமநஸ்கஸ்ஸதாஶுசி:**
**நஸதத்பதமாப்நோதி ஸம்ஸாரமபிகச்சதி 22**

*(பொ-ரை): யாதொருவன் அவிஞ்ஞானவானாயும், மனம் செய்யாதவனாயும், ராகத்துவேஷம் உடையவனுமாய் இருக்கின்றானோ அவன் அப்பரபதத்தை அடைகின்றது இல்லை. ஸம்ஸாரத்தையே அடைகின்றான்.*

**விஞ்ஞாநீயஸ் துபவதிஸமநஸ்கஸ்ஸதாஶுசி:**
**ஸதத்பதமவாப்தோதியஸ்மாத்பூயோநஜாயதே 23**

*(பொ-ரை): யாதொருவன் விஞ்ஞானம் உடையோனும், மனம்செய்யப்பட்டவனும், எப்போதும் காமாதியற்றவனுமாய் உள்ளவனோ அவன் மீண்டும் பிறவாத பதத்தை யடைகின்றான்.*

**விஞ்ஞானஸாரதிர்யஸ்துமந: ப்ரக்ரஹஏவச**
**ஸோத்வந: பாரமாப்நோதி மமைவபரமம்பதம் 24**

*(பொ-ரை): யாதொருவன் விஞ்ஞானமாகிய ஸாரதியை உடையோனும், மனமாகிய கடிவாளத்தை உடையோனுமாய் உளனோ அவன் மார்க்கத்தின் முடிவாகிய எனது பரமமான பதத்தையே அடைகின்றான்.(மார்க்கம்-வழி)*

**ஹ்ருத்புண்டரீகம் விரஜம் விசுத்தம் விசதம்ததா**
**விசோகம்சவிசிந்த்யா த்ரத்யாயேந்மாம்பரமேச்வரம் 25**

**அசிந்த்யரூபமவ் யக்தமநந்தமம்ருதம்சிவம்**
**ஆதிமத்யாந்தரஹிதம்ப்ரசாந்தம்ப்ரும்ஹகாரணம் 26**

**ஏவம்விபும்சிதாநந்தமரூபமஜமத்புதம்**
**சுத்தஸ்படிகஸங்காசமு மாதேஹார்த்தாரிணம் 27**

**வ்யாக்ரசர்மாம்பரதரம் நீலகண்டம் த்ரிலோசநம்**
**ஜடாதரம் சந்த்ரமௌளிம் நாகயஞ்ஞோப வீதிநம் 28**

**வ்யாக்ரசர்மோத்தரீயம்ச வரேண்யமபயப்ரதம்**

**பராப்யாமூர்த்வஹஸ்தாப்யாம்பிப்ராணம்பரசும்மருகம்**
**பூதிபூஷிதஸர்வாங்கம் ஸர்வாபரண பூஷிதம் 29**

*(பொ-ரை): சோகத்திற்கும், ராகத்துவேஷாதிகளுக்கும் இடமில்லாததும், மிக்கச் சுத்தமும், பிரகாசமுமாயுள்ள ஹ்ருதய கமலத்தை நன்கு சிந்தித்து அங்கு மனதிற்கு எட்டாதவனும், இந்திரியங்களுக்கு விஷயம் இல்லாதவனும், பரிச்சேத மில்லாதவனும், நாசமில்லாதவனும், முதல்நடு முடிவில்லாதவனும் ராகத்துவேஷாதிகள் இல்லாதவனும், ஸகல ப்ரபஞ்ச அதிஷ்டான மாய் உள்ளவனும், ப்ருஹ்மமும், வியாபகனும், அரூபனும், பரமேச்வரனுமாய் உள்ளவனாயினும் அற்புதமாய் சுத்தஸ்படிகம் போன்றவனும், உமாதேவியைப் பாதிதேஹமாய்க் கொண்ட வனும், புலித்தோலை இடையில் அணிந்தவனும், கறுத்தகண்டம் உடையோனும், முக்கண்ணனும், சடைதரிக்கின்றவனும், சந்திரனைச் சிரஸினில் அணிந்தவனும், அரவப் பூணூலனும், புலித்தோலை உத்தரீயமாய்க் கொண்டவனும், வரமளிக்கின்ற வனும், அபயதானம் செய்கின்றவனும், உயரத் தூக்கிய மற்றைய இரண்டுகைகளால் கோடரியையும் மானையும் தரிக்கின்றவனும் விபூதிபூசிய ஸர்வஅங்கங்களையும் உடையவனும் ஸகலாபரணங் களாலும் அலங்கரிக்கப் பெற்றவனுமாய் இவ்வாறுள்ள உருவம் உடையோனாகிய என்னைத் தியானம் செய்குக.*

*(இங்கு மனோவாக்குகளுக்கு எட்டாத பரிபூரணாநந்தபோத வடிவமாய் உள்ள பரமாத்மாவுக்கு ஏகதேசத்தில் விளங்குவதாகிய*

உருவம் சொல்லுவது பொருந்துவது எவ்விதம் எனின் லோக அநுக்கிரஹார்த்தமாய் திவ்விய சக்திமஹிமையால் அங்ஙனம் உருவம் பெற்றிருத்தல் பொருந்துவதேயாம் என்க.)

**பிரமாணம் : ச்வேதாரவதம் :**

"பராஸ்யசக்திர்விவிதைவச்ரூய தேஸ்வாபாவி கீஞானபலக்ரியாச"

"பவிம்ப்ரபாந்தமம்ருதம்ப்ருஹ்ம" என்று தொடங்கி, "உமாஸஹாயம் பரமேஸ்வரம்ப்ரபும் த்ரிலோசனம் நீலகண்டம் ப்ரசாந்தம்" என்று கூறிய கைவல்லியம்.

"உமார்த்த விக்ரஹா சுத்தாத்ரிணேத்ரா சந்த்ரசேகரா
நீலக்ரீவா பராநந்தப்ரமோதாத் தாண்டவப்ரியா
ப்ருஹ்ம விஷ்ணுமஹாதே வைருபாஸ்யா குணமூர்த்திபி:
ஸர்வமூர்த்தி விஹீநஸ்யஸர்வபூதாதி பஸ்யது
ததாப்யேஷாபராமூர்த்திரித் யேஷாமஸாஸ் வதீச்ருதி:"

என்ற ஸூதஸம்ஹிதா க்ரந்தத்திலும் இங்ஙனமே பரிபூரண சிதாநந்த உருவனாயினும் உமார்த்ததேஹங் கொண்டு விளங்குகின்றான் என்று போதிக்கப்படுகின்றது.

**ஏவமாத்மாரணிமக்ருத்வாப்ரணவம் சோத்தராரணிம்**
**தயாநதிர்மதனாப்யாஸாத் ஸாக்ஷாத்பஶ்யதிமாம்ஜந:** 30
**வேதவாக்யைாலப்யோஹம்நசாஸ்த்ரைர்நாபிசேதஸா**

*(பொ-ரை):* இங்ஙனம் மனிதன் ஆன்மாவை அரணியாகவும், பிரணவத்தை மேலரணியாகவும் செய்து தியானமாகிய கடைதலைத் தடையின்றிச் செய்தலால், என்னை ஸாக்ஷாத்காரமாய்த் தரிசிக்கின்றான். நான் வேதவாக்கியங்களாலும் சாஸ்திரங்களினாலும் மனதாலும், காணக்கூடியவன் அல்லன்.

**நாவிரதோதுஶ்சரிதாந்நாஸாந்தோநாஸமாஹித:**
**நாசாந்தமாநஸோவாபிப்ரஜ்ஞாநேநைநமாப்நுயாத்** 31

*(பொ-ரை):* கெட்ட காரியங்களை ஒழிக்காதவனும், இந்திரியங்களை வெல்லாதவனும், ஏகாக்கிர சித்தமில்லாதவனும், மனம் அடங்கப்பெறாதவனும் இவனை அடைகின்றதில்லை. மற்று ப்ரஹ்மஞானத்தினாலேயே இவனையடையலாம்.

**ஜாக்ரத்ஸ்வப்நஸுஷுப்த்யாதிப்ரபஞ்சோய: ப்ரகாஶதே**
**தத் ப்ரஹ்மாஹமிதி ஜ்ஞாத்வா ஸர்வபந்தை: ப்ரமுச்யதே 32**

*(பொ-ரை): யாதொருவன் ஜாக்கிரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி முதலிய ப்ரபஞ்சமாகத் தோன்றுகின்றானோ, அப்படிப்பட்ட ப்ருஹமம் யான் என்று அறிந்து ஸகல பந்தங்களினாலும் விடுபடுகின்றான்.*

**த்ரிஷுதாமஸு யத்போக்யம் போக்தாபோகஶ்சயத்பவேத்**
**தத்ஜ்யோதிர்லக்ஷணஸ்ஸாக்ஷீ சிந்மாத்ரோஹம் ஸதாசிவ: 33**

*(பொ-ரை): மூன்றுவஸ்துகளிலும் யாதொருபோக்கியமும் போக்தாவும் போகமும் உளதோ அப்படிப்பட்ட சோதிவடிவனும் ஸாக்ஷிரூபனும் சித்வடிவனுமாகிய ஸதாசிவன் யான்.*

**கோடிமத் யாஹ்ந ஸூர்யாபம் சந்த்ரகோடிஸுசீதளம்**
**ஸூர்யசந்த்ராக்நிநயநம் ஸ்மேரவக்த்ரஸரோருஹம் 34**

*(பொ-ரை): கோடிஸூரியர்போல் ஜ்வலிக்கின்றதும், கோடி சந்திரர்போல ஆனந்தகரமாய் உள்ளதும், ஸூர்யசந்திர அக்னிகளை நேத்திரமாக உடையதும், புன்னகைகொண்ட முகத்தாமரை மலரை உடையதும் ஆகிய ஸதாசிவனுடைய திருவடிவத்தைத் தியானித்து ஸகல பந்தங்களினின்றும் விடுபடுகின்றான்.*

**ஏகோதேவஸ் ஸர்வபூதேஷுகூட:**
**ஸர்வவ்யாபீஸர்வ பூதாந்தராத்மா**
**கர்மாத்யக்ஷஸ்ஸர்வ பூதாதிவாஸஸ்ஸாக்ஷீ**
**சேதாகேவலோ நிர்குணஶ்ச 35**

*(பொ-ரை): ஏகனாகிய தேவன் ஸகல பூதங்களிலும் மறைபட்டுள்ளவனும், ஸர்வவியாபகனும், ஸகல பூதங்களுக்கும் அந்தராத்மாவாய் உள்ளவனும், கர்மங்களுக்கு அத்தியக்ஷனும், ஸகல பூதங்களிலும் வஸிக்கின்றவனும், ஸாக்ஷியும், அறியச் செய்வோனும், கேவலனும், நிர்க்குணனுமாய் உள்ளவன்.*

**ஏகோவசீ ஸர்வபூதாந்த ராத்மாப்யேகம்**
**பீஜம் நித்யதா ய:கரோதி**

**தம்மாம் நித்யம்யேநு பச்யந்திதீராஸ்**
**தேஷாம்சாந்திஸ்ஸா ஸ்வதீநேதரேஷாம் 36**

*(பொ-ரை): யாதொருவன் ஒப்புயர்வு இல்லாதவனும் ஸர்வத்தையும் தன் வசப்படுத்தியவனும், ஸர்வ பூதங்களிலும் அந்தராத்மாவாய் உள்ளவனாயினும், ஒப்புயர்வு இல்லாததாகிய (மாயையான) காரணத்தை, (ஞானிகள் தவிர மற்றவர்க்கு) நித்தியமாய் இருக்கும்படி செய்கின்றானோ, நித்தியனாகிய என்னை எந்த தீரர்கள் (இந்திரியங்களை வென்றவர்) சாஸ்திர ஆசிரியரது உபதேசத்தால் ஸாக்ஷாத்கரிக்கின்றனரோ அவர்களுக்கே நித்யமாகிய சாந்தியாம். ஏனையோர்க்கு அல்ல.*

**அக்நிர்யத்தைகோபுவநம் ப்ரவிஷ்டோ**
**ரூபம்ரூபம் ப்ரதிரூபோபபூவ**
**ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா**
**ரூபம்ரூபம் ப்ரதிரூபோபஹிஸ்ச. 37**

*(பொ-ரை): எப்படி அக்கினி ஒருவனாயினும், உலகப் பொருள்களை அடைந்து உருவம் தோறும் பிரதிரூபம் உடையவனாய் உளனோ, அவ்விதமே ஒருவனாயினும், ஸகல பூதங்களுக்கும் அந்தராத்மாவாய் ரூபம் தோறும், பிரதிரூபம் உடையவனாய் வெளியிலும் உளன்.*

**வேதேஹமாம்ய:புருஷம் மஹாந்தம்**
**ஆதித்யவர்ணம் தமஸ: பரஸ்தாத்**
**ஸஏவ வித்வாநம்ருதோத்ரபூயாந்நாந்ய:**
**பந்தா அயநாயவித்யதே 38**

*(பொ-ரை): இந்த ஸம்ஸாரத்தினில் எவன் பூர்ணனும், வியாபகனும், ஆதித்தன் போல் ஸ்வப்ரகாசனும், பிரகிருதிக்கு அதீதனும் ஆகிய என்னை அறிகின்றானோ அந்த ஞானியே இந்தப் பிரபஞ்சத்தினில் முக்தனாகின்றான். முக்திக்கு வேறு வழியில்லை.*

**ஹிரண்யகர்ப்பம் விததாமி பூர்வம்வேதாம்**
**ஸ்சதஸ்மைப்ரஹிணோமி யோஹம்**
**தமேவமீட்யம் புருஷம் புராணம் நிஸ்சித்யமாம்**
**ம்ருத்யுமுகாத் ப்ரமுச்யதே 39**

(பொ-ரை): யாதொரு நான் முதலில் ஹிரண்யகர்ப்பனை உண்டாக்குகின்றேனோ, அவனுக்கு வேதங்களை உபதேசிக் கின்றேனோ இவ்வாறு துதிக்கப்படுவோனும் புராண புருஷனு மாகிய என்னை உள்ளபடி அறிபவன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுகின்றான்.

**ஏவம் சாந்த்யாதி யுக்தஸ்ஸந் வேத்திமாமயஸ்து தத்வத:**
**நிர்முக்தது:க் கஸந்தாந: ஸோந்தேமய்யேவலீயதே. 40**

(பொ-ரை): என் சாந்தியாதிகளை உடையவனாய்க் கொண்டு என்னை இவ்வாறு உள்ளபடி அறிகின்றானோ அவன் துக்கபரம்பரைகள் ஒழியப் பெற்றவனாய்க் கொண்டு இறுதியில் என்னிடமே அடங்குகின்றான்.

*(பனிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.)*





**குரு மூர்த்தி**

# மோக்ஷயோகம் என்னும் பதின்மூன்றாம் அத்தியாயம்

*மோட்க்ஷஞானயோகம் - சாலோபம், சாமீபம், சாரூபம், சாயுஜ்யம், கைவல்யம் என்ற ஐந்து வகை மோட்க்ஷ நிலைகள் விளக்கப்படுகின்றது. வேதாந்த சிந்தனைகளை குருமுகமாக அறிய வேண்டும் என்று வலியுறுத்தப்படுகின்றன. மோட்க்ஷம் எது? என்பதைப் 'பற்றி இவ்வத்தியாயத்தில் காணலாம்.*

**சூதர் சொன்னதாவது:**

**ஏவம்ச்ருத்வாகௌஸலேயஸ்துஷ்டோ மதிமதாம்வர:**
**பப்ரச்சகிரிஜாகாந்தம் ஸுபகம் முக்திலக்ஷணம் 01**

பொழிப்புரை: இவ்வாறு கூறியதைக் கேட்டுப் புத்திமான் களுள் சிறந்தவனாகிய ராமன் ஸந்தோஷித்து கிரிஜாநாதனைச் சோபனமாகி முக்திஸ்வரூபத்தைக் கேட்டான்.

**இராமர் வேண்டியதாவது:**

**பகவந் கருணாவிஷ்டஹ்ருதயத்வம் ப்ரஸீதமே**
**ஸ்வரூபலக்ஷணம் முக்தே: ப்ரப்ரூஹிபரமேஶ்வர. 02**

*(பொ-ரை):* ஏ பகவனே, கருணாவள்ளலே, நீர் கருணை செய்யும் முக்தியின் ஸ்வரூபலக்ஷணத்தை எனக்கு நன்கு சொல்லும்.

**சிவபெருமான் அருளியதாவது:**

**ஸாலோக்யமபிஸாரூப்யம் ஸார்ஷ்ட்யம் ஸாயுஜ்யமேவச**
**கைவல்யம்சேதிதாம் வித்திமுக்திம்ராகவபஞ்சதா. 03**

*(பொ-ரை):* ஓ ராகவா, முக்தியானது ஸாலோக்யம், ஸாரூப்யம், ஸார்ஷ்ட்யம், ஸாயுஜ்யம், கைவல்யம் என்பதாக ஐந்துவிதம் என்றறிக.

**மாம் பூஜயதி நிஷ்காமஸ்ஸர்வதா ஜ்ஞானவர்ஜித:**
**ஸ மே லோகம் ஸமாஸாத்ய புங்தே போகாந் யதேப்ஸிதாந். 04**

(பொ-ரை): என்னையுள்ளபடி அறியாதவனாய் எப்பொழுதும் காமம் இல்லாதவனாய் என்னைஎவன் சிவலிங்காதிகளில் பூஜிக்கிறானோ அவன் எனது உலகத்தையடைந்து விரும்பிய வண்ணம் போகங்களைப் புஜிக்கின்றான்.

**ஜ்ஞாத்வா மாம் பூஜயேத் யஸ்து ஸர்வகாமவிவர்ஜித:**
**மயா ஸமாநரூபஸ்ஸந் மம லோகே மஹீயதே. 05**

(பொ-ரை): எவன் என்னையறிந்து ஸகலகாமமும் இன்றி பூஜிக்கின்றானோ, அவன் எனக்கு ஸமானமான ரூபம் உடையவனாய் என் லோகத்தில் விளங்குவான்.

**இஷ்டாபூர்த்தாதிகர்மாணி மத்ப்ரீத்யை குருதே துய:**
**ஸோபி தத்பலமாப் நோதி நாத்ர கார்யா விசாரணா 06**

**யத்கரோதி யதஶ்நாதி யஜ்ஜுஹோதி ததாதியத்**
**யத்தத் பஶ்யதி தத் ஸர்வம் ய: கரோதி மதர்ப்பணம் 07**

**மல்லோகே ஸ ஸ்ரீயம் புங்தே மத்துல்யம் ப்ராபவம் பஜந்**

(பொ-ரை): யாதொருவன் யாகம், அன்னசத்திரம், வாபீ கூபம் தடாகாதிப் பிரதிஷ்டை முதலிய கர்மங்களை எனது பிரீதியர்த்த மாகவே செய்கின்றானோ அவனும் அதன் பிரயோஜனத்தைச் சந்தேகமில்லாமல் அடைகின்றான். எதனைச் செய்கின்றானோ எதனைப் புசிக்கின்றானோ, எதனை ஹோமம் செய்கின்றானோ, எதனைக் கொடுக்கின்றானோ, எவ்வெப்பொருளைக் காண் கின்றானோ, அதனையெல்லாம் என்பொருட்டு ஸமர்ப்பணம் செய்வோன் என் உலகில் எனக்குநிகராகிய மஹிமை பெற்ற வனாய்க் கொண்டு போகங்களைப் புஜிக்கின்றான்.

**யஸ்து சாந்த்யாதி யுக்தஸ்ஸந் மாமாத்மந்வேந பஶ்யதி 08**

**ஸ ஜாயதே பரஞ்ஜ்யோதிரத்வைதம் ப்ரஹ்ம கேவலம்**
**ஆத்மஸ்ஸ்வரூபாவஸ்தாநம் முக்திரித்யபிதீயதே 09**

(பொ-ரை): எவன் சாந்திமுதலிய ஸாதனங்களோடு கூடியவனாய்க் கொண்டு என்னைத் தானாகக் காண்கின்றானோ அவன் அத்துவிதமும் பரஞ்சோதியுமாகிய கேவலம் ப்ரஹ்மமா கின்றான். ஆன்மஸ்வரூப மாத்திரமாய் நிற்றல் முக்தி என்னப்படு கின்றது.

**ஸத்யம் ஜ்ஞானமனந்தம் யதாநந்தம் ப்ரஹ்ம கேவலம்**
**ஸர்வதர்மவிஹீநஞ்ச மனோவாசாமகோசரம்** 10

**ஸஜாதீயவிஜாதீயபதார்த்தானாமஸம்பவாத்**
**அந்தஸ்தத்வ்யதிரிக்தாநாம் அத்வைதமிதி ஸம்ஜ்ஞிதம்** 11

**மத்வா ரூபமிதம் ராம சுத்தம் யதபிதீயதே**

(பொ-ரை): *ஸத்யமும் ஞானமும் அனந்தமும் பேரின்பமுமான யாதொரு ப்ருஹ்மமுளதோ, யாதொன்று ஸகல தன்மைகளும் இல்லாததும் மனோவாக்குகளுக்கு எட்டாததுமாய் உள்ளதோ, தன்னினப் பிறவினப் பொருள்கள் இராமையால் அதற்கு அந்நியப் பொருள்களின் அந்தமானது அத்வைதம் என்று சொல்லப்படுகின்றது; ஓ இராமா, யாதொன்று சுத்தம் என்று சொல்லப்படுகின்றதோ இந்தவடிவத்தைச் சிந்தித்துச் சுத்தனாகின்றான்.*

**மய்யேவ த்ருஶ்யதே ரூபம் ஜகத் ஸ்தாவரஜங்கமம்** 12

**வ்யோம்நி கந்தர்வநகரம் யதா த்ருஷ்டம் ந த்ருஶ்யதே**
**அநாத்யவித்யயா விஶ்வம் ஸர்வம் மய்யேவ கல்ப்யதே** 13

**மமஸ்வரூபஜ்ஞாநேந யதாவித்யா ப்ரணஶ்யதி**
**ததைக ஏவ வர்த்தேஹம் மனோவாசாமகோசர:** 14

**ஸதைவ பரமானந்த: ஸ்வப்ரகாஶஶ்சிதாத்மநா**

(பொ-ரை): *உருவப் பொருளாகிய ஸ்தாவர ஜங்கமமாகிய ஜகமானது என்னிடமே காணப்படுகின்றது. ஆகாயத்தில் கந்தர்வ நகரம் காணப்பட்டதாய்க்கொண்டு எப்படி மறைகின்றதோ அப்படியே என்னிடத்திலேயே பிரபஞ்சம் எல்லாம் அனாதி அவித்தையால் கற்பிக்கப்படுகின்றது. எப்பொழுது எனது ஸ்வரூபஞானத்தால் அவித்தை தொலைகின்றதோ அப்பொழுது மனோவாக்குகளுக்கு எட்டாதவனும் எப்பொழுதும் பரமானந்தனும் ஞானவடிவம் பற்றி ஸ்வயம்பிரகாசனும் ஆகிய யான் ஒருவனே இருக்கின்றேன்.*

**ந கால: பஞ்சபூதாநி ந திஶோ விதிஶஶ்ச ந** 15
**மதந்பந்நாஸ்தி யந்கிஞ்சித் ததா வர்த்தே ஹமேகல:**

*(பொ-ரை): காலமில்லை, ஐம்பூதங்களில்லை, திசைகளில்லை, திசை வெளிகளுமில்லை, எனக்கந்நியமாய் யாதுமில்லை அப்போது யான்ஒருவனே இருக்கின்றேன்.*

**நஸந்த்ருஸே திஷ்டதி மே ஸ்வரூபம்**
**நசக்ஷுஷா பஶ்யதி மாம்து கஶ்சித்**
**ஹ்ருதா மநீஷா மநஸாபிக்லுப்தம்**
**யேமாம் விதுஸ்தே ஹ்யம்ருதா பவந்தி 16**

*(பொ-ரை): எனது வடிவங்கள் அவனுக்கு எதிர்ப்படுகின்றதல்ல. ஆதலால் அவனும் என்னை இந்திரியங்களால் அறிகின்றதில்லை. ஸங்கற்பாதிகளை அடக்குவதாகிய புத்தியினால் நன்றாய் மநநம் செய்யப்படுவதுபற்றி அறியப்படும் என்னை எவர் அறிகின்றனரோ அவர்களே முக்தர்கள் ஆகின்றனர்.*

**இராமன் வேண்டியதாவது:**

**கதம் பகவதோ ஜ்ஞானம் சுத்தம் மர்த்யஸ்ய ஜாயதே**
**தத்ரோபாயம் ஹா ப்ரூஹி மயி தேநுக்ரஹோ யதி. 17**

*(பொ-ரை): ஹரரே, மனிதனுக்கு பகவானது சுத்த ஞானமானது எப்படி உதிக்கும்? உமக்கு என்னிடம் அநுக்கிரஹம் இருக்கின் அதன் உபாயத்தைச் சொல்லியருளும்.*

**சிவபெருமான் அருளியதாவது:**

**விரஜ்ய ஸர்வபூதேப்ய ஆவிரிஞ்சிபதாதபி**
**க்ருணாம் விதத்ய ஸர்வத்ர புத்ரமித்ராதிகேஷ்வபி. 18**

**ஶ்ரத்தாளுர் முக்திமார்கேஷு வேதாந்தஜ்ஞானலிப்ஸயா**
**உபாயநகரோ பூத்வா குரும் ப்ரஹ்மவிதம் வ்ரஜேத். 19**

*(பொ-ரை): ப்ரஹ்மபதம் ஈறாயுள்ள ஸகல பொருள்களிலும் ஒழிவடைந்து, புத்திர மித்திர களத்திராதி ஸகலத்தையும் வெறுத்து, மோக்ஷ சாஸ்திரத்தில் சிரத்தை உள்ளவனாய், வேதாந்தஞானம் பெறவேண்டுமெனும் விருப்பத்தால் காணிக்கையோடு கூடிய கையனாய் ப்ரஹ்மஞானியாகிய குருவை அடைவானாக.*

**தமர்த்தம் புரத: க்ருத்வா தண்டவத் ப்ரணமேத் குரும்**
**உத்தாய சாஞ்ஜலிம் க்ருத்வா வாஞ்சிதார்த்தாந் நிவேதயேத் 20**

**ஸேவாபி: பரிதோஷ்யைநம் சிரகாலம் ஸமாஹித:**
**ஸர்வவேதாந்த வாக்யார்த்தம் ஶ்ருணுயாத் ஸுஸமாஹித: 21**

*(பொ-ரை):* தான் கொண்டுவந்த பொருளை குருவின் எதிரில் வைத்து வணங்கிப் பிறகு தனக்கு வேண்டியவைகளைக் கேட்டுக் கொள்ளவும். குருவை பலகாலஞ் சேவித்து வழிபடுதலால் ப்ரீதியடையச் செய்து அஜாக்கிரதை யின்றியவனும் சித்தத்தை ஒருமைப்படுத்தியவனுமாய் இருந்து ஸகல வேதாந்த வாக்கியங் களின் பொருளை ஶ்ரவணம் செய்வானாக. (ப்ரீதி-மகிழ்ச்சி)

**ஸர்வவேதாந்தவாக்யாநாம் மயி தாத்பர்யநிஶ்சயம்**
**ஶ்ரவணம் நாம தத் ப்ராஹு: ஸர்வே தே ப்ரஹ்மவாதிந: 22**

*(பொ-ரை):* ஸகலவேதாந்த வாக்கியங்களின் தாத்பரியத்தை என் விஷயமென விசாரித்து நிச்சயித்துக் கொள்ளுதல் சிரவணம் என்பதாக ப்ரஹ்மவாதிகள் எல்லாரும் சொல்லுகின்றனர்.

**லோஹமண்யாதித்ருஷ்டாந்த யுக்திபிர்யத்விசிந்தனம்**
**ததேவ மநநம் ப்ராஹு: வாக்யார்த்தஸ்யோபப்ரும்ஹணம். 23**

*(பொ-ரை):* இரும்பு, ரத்தினம் முதலிய திருஷ்டாந்தங்களைக் கொண்டு யுக்திகளால் சிந்தித்தலே வாக்யார்த்தத்தின் உபப்ரும்ஹணமாகிய மநநம் என்று சொல்லுகின்றனர்.

**நிர்மமோஹிநிரஹங்கார: ஸம:ஸங்கவிவர்ஜித:**
**ஸதாசாந்த்யாதியுக்தஸ்ஸநநாத்மந்யாத்மாநமீக்ஷதே**
**யத்ஸதாத்யாநயோகேநதாந்நித்யாஸநம்ஸ்ம்ருதம். 24**

*(பொ-ரை):* எனது யான் எனும் பாவனைகளை அகற்றிய வனாய் எல்லாவற்றிலும் ஸமபாவனை யுடையவனாய், எந்த ஸங்கற்பப்பற்றும் இராதவனாய், எப்போதும் சமதமாதிகளை யுடையவனாய்க்கொண்டு, ஸதா தியானயோகத்தினால் புத்தியினை உபலக்ஷணமாய்க் கொண்டு ஆன்மாவைக் காண்கின்றான் என்பதே நிதித்தியாஸநம் என்னப்படும்.

**ஸர்வகர்மக்ஷய வஶாத்ஸா க்ஷாத்காரோபிசாத்மந:**
**கஸ்யசிஜ்ஜாயதே சீக்ரம்சிரகாலேந கஸ்யசித். 25**

*(பொ-ரை):* ஆத்மாவின் ஸாக்ஷாத்காரமும் எவரோ ஒருவருக்கு ஸகல கர்மங்களும் நீங்கவே விரைவினில் உதிக்கின்றது, சிலருக்கு பலகாலத்திற்குப் பின்னர் உதிக்கின்றது.

**கூடஸ்தாநீஹ கர்மாணி கோடிஜந்மார்ஜிதாந்யபி**
**ஜ்ஞாநேநைவ விநஶ்யாந்தி நதுகர்மா யுதைரபி. 26**

*(பொ-ரை):* இந்த ஸம்ஸாரத்தில் பலகோடி ஜன்மங்களில் ஸம்பாதிக்கப்பட்டுள்ள கர்மக்குவியலும் ஜ்ஞானத்தினாலேயே நசிக்கின்றன, எவ்வளவு கர்மங்களைச் செய்யினும் அழிவனவல்ல.

**ஜ்ஞானாதூர்த்வம் துயத்கிஞ்சித் புண்யம்வா பாபமேவவா**
**க்ரியதே பஹுவால்ப்பம்வா நதேநாயம் விலிப்யதே. 27**

*(பொ-ரை):* ஞானோதயத்திற்குப் பின் புண்ணியமோ பாபமோ யாதேயினும் மிகுதியாவது ஸ்வற்பமாவது செய்யப்படின் அக்கர்மத்தால் ஞானியானவன் சிறிதும் பற்றப்படுகின்றதில்லை.

**சரீராரம்பகம்யத்து ப்ராப்தம் கர்மஜந்மிந:**
**தத்போகே நைவநஷ்டம் ஸ்யாத்நதுஞாஜ்நேந நச்யதி. 28**

*(பொ-ரை):* ஞானியினது சரீரத்தைப் பயனாய்க் கொண்டுள்ள எந்த ப்ராப்த கர்மம்உளதோ அஃது அதனால் புசிக்க வேண்டியன வாய் ஏற்கனவே ஏற்பட்டுள்ள போகங்களைப் புசிப்பதனாலேயே தீரும்அன்றி ஞானத்தினால் நாசமாகின்றது இல்லை.

**நிர்மோஹோ நிரஹங்காரோ நிர்லேபஸ் ஸங்கவர்ஜித:**
**ஸர்வபூதேஷுசாத்மாநம் ஸர்வபூதாநி சாத்மநி**
**ய:பஶ்யந் ஸஞ்சரதேஷ ஜீவந்முக்தோபி தீயதே. 29**

*(பொ-ரை):* எவன் மோஹம் நீங்கியவனும், அஹங்காரம் இல்லாதவனும், ஸம்பந்த மற்றவனும், ஸங்கற்ப மற்றவனுமாய், ஸகலபூதங்களிலும் ஆன்மாவையும் ஆன்மாவினில் ஸகல பூதங்களையும் பார்த்துக் கொண்டு ஸஞ்சரிக்கின்றானோ இவனே ஜீவன் முக்தன் என்னப்படுகின்றான்.

**அஹிநிர்ல்வயிநீயத்வ த்ரஷ்டுபூர்வம் பயப்ரதா**
**ததோஸ்யநபயம் கிஞ்சித்தத்வத்ரஸ்டுரயம்ஜந: 30**

*(பொ-ரை): பாம்புச் சட்டையானது பூர்வம் காண்பவனுக்குப் பயஹேதுவாயும், தேஹத்திலிருந்து பிரிந்தபிறகு காண்போனுக்குப் பயஹேதுஅல்லாததுமாய் இருக்கின்றதோ அவ்வாறே. இச்சீவன் முக்தனும் காண்பவருக்கு ஆகின்றான் என்றறிக.*

**யதாஸர்வேப்ரமுச்யந்தே காமாயேஸ்யவசங்கதா:**
**அதமர்த்யோ அம்ருதோ பவத்யேதாவதநுஶாஸனம் 31**

*(பொ-ரை): இவனிடமுள்ள ஸகல வாஸனைகளும் எப்போது முற்றும் ஒழிகின்றனவோ அதற்குப் பிறகே இம்மனிதன் முக்தன் ஆகின்றான், இவ்வளவே சிக்ஷையாம்.*

**மோக்ஷஸ்யநஹிவாஸோஸ்திநக்ராமாந்தரமேவவா**
**அஜ்ஞாநஹ்ருதயக்ரந்திநாஶோமோக்ஷஇதிஸ்ம்ருத: 32**

*(பொ-ரை): மோக்ஷம் எனும் பொருளுக்கு எங்கேயாவது வசித்தல் என்பது இல்லவே இல்லை. க்ராமாந்தரம் (வேறு கிராமத்தில் இருத்தல்) என்பதும் இல்லை, அஞ்ஞானம் எனும் ஹ்ருதயக்ரந்தி நசித்தலே மோக்ஷம் எனப்படுவதாம்.*

**வ்ருஷாக்ராத்ச்யுதபாதோய: ஸததைவபதஸ்யத:**
**தத்வஜ்ஞானவதோமுக்தி: ஜாயதேநிஶ்சிதாபிது. 33**

*(பொ-ரை): மரத்தின் நுனியினின்றும் தவறினவனுக்கு உடனே கீழ்விழுதல் எங்ஙனமோ அங்ஙனமே, ஞானவானுக்கு முக்திப்பேறு நிச்சயிக்கப்பட்டது ஆகின்றது.*

**தீர்த்தேசண்டாலகேஹேவாயதிவாநஷ்டசேதந:**
**பரித்யஜந்தேஹமேவம்ஜ்ஞாநாதேவவிமுச்யதே. 34**

*(பொ-ரை): தீர்த்தத்திலாயினும், சண்டாளன் வீட்டிலாயினும், அறிவிழந்தவனாய் எங்கு மரிக்கினும் ஞானத்தினாலேயே முக்தன் ஆகின்றான்.*

**ஸம்வீதோயேநகேநாச்நந்பக்ஷயம் வாஅபக்ஷ்யமேவவா**
**சயாநோயத்ரகுத்ராபிஸர்வாத்மாமுச்ய தேத்ரஸ: 35**

(பொ-ரை): எதையாவது உடுத்திக் கொண்டும், புசிக்கத் தக்கதும், புசிக்கத்தகாததும் எதையாயினும் புசிக்கின்றவனும், எங்கேயாவது படுக்கின்றவனுமாயினும், எவன் ஸர்வமும் ஆத்மாவாய்க் கொண்டவனோ அவன் இத்தேஹம் நீங்கவே முக்தன் ஆகின்றான்.

**க்ஷீராதுத்ருதமாஜ்யம்யத்க்ஷிப் தம்பயஸிதத்புந:**
**நதேநைவைகதாம்யாதிஸம்ஸா ரேஜ்ஞானவாஸ்ததாம் 36**

(பொ-ரை): பாலினின்று கடைந்து எடுக்கப்பட்ட நெய் மீண்டும் அப்பாலினில் எப்படி ஒன்றாய்க் கலப்பது இல்லையோ அப்படியே ஞானவானாகிய மனிதன் மீண்டும் ஸம்ஸாரத்தினில் சேருவதில்லை.

**நித்யம்படதியோத்யாயமிமம்ராமஶ்ருணோதிவா**
**ஸமுச்யதேதேஹபந்தாதநாயாஸேநராகவ. 37**

(பொ-ரை): ஓ ராமனே, எவன் இவ்வத்தியாயத்தைத் தினந்தோறும் படனமாவது சிரவணமாவது செய்கின்றானோ, ஓஇராகவா, அவன் தேஹச் சிறையினின்றும் சுளுவாய் விடுபடுகின்றான். (சுளு-சுலபம்)

**தத: ஸம்ஶயசித்தஸ்த்வம் நித்யம்படமஹீபதே**
**அநாயாஸேநதேநைவஸர்வதாமோக்ஷமாப்ஸ்யஸி. 38**

(பொ-ரை): ஆதலால் சந்தேக சித்தம் உடையோனாகிய நீ, தினந்தோறும் படிப்பாயாக; ஓ அரசனே, அதனாலேயே சுளுவில் எவ்வாற்றானும் முக்தியடைவாய்.

*(பதிமூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.)*



# பஞ்சகோஸோபபாதளம் என்னும் பதினான்காவது அத்தியாயம்

*பஞ்சகோசவிவேசம் - இராமரின் சந்தேகங்களுக்கு சிவபெருமான் விடையளிக்கின்றார். ஆத்மாவின் இயல்பும் தேகங்கள் மற்றும் பஞ்சகோசங்களைப் பற்றிய இயல்புகளை இவ்வத்தியாயத்தில் காணலாம். சிவார்ப்பணங்களின் சிறப்பும் இதில் கூறப்படுகின்றது.*

**இராமர் வேண்டியதாவது:**

**பகவந்யதிதேரூபம் ஸச்சிதாநந்த விக்ரஹம்**
**நிஷ்களம் நிஷ்க்ரியம் சாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம்** 01

**ஸர்வதர்மவிஹீநம் சமநோவாசா மகோசரம்**
**ஸர்வவ்யாபித யாத்மாந மீக்ஷதே ஸர்வதஸ்திதம்** 02

**ஆத்மவித்யா தபோமூலம் தத்ப்ரஹ்மோப நிஷத்பரம்**
**அமூர்த்தம் ஸர்வ பூதாத்மாகாரம் காரணகாரணம்** 03

**யத்ததத்ரேச்ய மக்ராஹ்யம் தத்க்ராஹ்யம்வாகதம்பவேத்**
**அத்ரோபாயமஜாநாநஸ் தேநபிந்நோஸ்மிசங்கர.** 04

*பொழிப்புரை:* ஓ பகவனே, உமது ரூபம் ஸச்சிதாநந்த வடிவமும் நிஷ்களமும், கிரியையில்லாததும், சாந்தமும், குற்றமற்றதும், அஸங்கமும், எத்தன்மையும் இல்லாததும், மனோவாக்குகளுக்கு எட்டாததுமாய் உளதோ எந்த ஆன்மாவை ஸர்வ வியாபகத் தன்மையதாய்க் காண்கின்றானோ, அங்ஙனம் எங்குமுள்ளதும் ஆத்மவித்தை தவம் இவைகளால் காணப்படுவதும், உபநிஷத்தின் தாத்பரியமாய் உள்ளதும் மூர்த்தம் அல்லாததும், ஸகல பூதாத்ம வடிவமும், காரணங்களுக்கு காரணமும், காணக்கூடாததும், பற்ற ஒணாததுமாய் இங்ஙனம் உள்ளதாயின் அந்த ப்ரஹ்மமானது எப்படித்தான் கிரஹிக்கக் கூடியதாகும்; ஓ சங்கரனே, இதற்குறிய உபாயத்தை அறியேனாதலின் பேதம் உடையோனாய் இருக்கின்றேன்.

**சிவபெருமான் அருளினார்:**

**ச்ருணுராஜன்ப்ரவக்ஷ்யாமிதத்ரோபாயம்மஹாபுஜ**
**ஸகுணோபாஸநாபிஸ்துசித்தைகாக்ர்யம் விதாயச** 05

**ஸ்தூலஸௌராம்பிகா ந்யாயாத்தத்ரசித்தம்ப்ரவர்த்தயேத்.**

*(பொ-ரை): பெருந்தோளனாகிய இராமா, அதற்கு உபாயம் கூறுகின்றேன் கேட்பாயாக; ஸகுணோபாஸனைகளால் சித்த வியக்தமாய்க் காணப்படும் கானல்நீர் போன்ற ஏகாக்கிரத்தன்மை ஸம்பாதித்து நியாயமாய் அதனில் சித்தத்தைப் பிரவர்த்திக்கச் செய்யவேண்டும்.*

**தஸ்மிந்நந்நமயேபிண்டேஸ்தூலதே ஹேதநூப்ருதாம் 06**

**ஜந்மவ்யாதிஜராம்ருத்யுநிலயேவர்த்ததேத்ருடா**
**ஆத்மபுத்திரஹம்மானாத்கதாசிந்நவிஹீயதே 07**

*(பொ-ரை): பிராணிகளுக்கு அன்னமயமான பிண்டமும் ஜனன, வியாதி, ஜரா மரணங்களுக்கு இருப்பிடமுமாகிய ஸ்தூல தேகத்தினில் அஹங்காரத்தினால் ஆத்மபுத்தி திடமாய் இருக்கின்றது. ஒருபோதும் நீங்குகின்றது இல்லை.*

**ஆத்மாநஜாயதேநித்யோம்ரியதேவாகதம்சந**
**யஜ்ஜாயதே அஸ்திவிபரிணமதேவர்த்ததேபிச 08**

**க்ஷீயதேநஶ்யதீத்யே தேஷட்பாவாவபுஷ:ஸ்ம்ருதா: 09**

*(பொ-ரை): ஆன்மா உற்பத்தி ஆகின்றதில்லை, நித்தியம் எவ்வாற்றாலும் அழிகின்றது இல்லை. யாதொரு காரணத்தினால் தோன்றல், இருத்தல், மாறுதல், வளருதல், குறைதல், நசித்தல் எனும் இந்த ஆறு பாவவிகாரங்களும் தேகத்திற்கே உள்ளனவோ,*

**ஆத்மனோநவிகாரிதவம் கடஸ்தநபஸோயதா**
**ஏவமாத்மா வபுஸ்தஸ்மாதிதிஸம்சிந்தயேத்புத: 10**

*(பொ-ரை): எப்படி குடத்திலிருக்கும் ஆகாயத்திற்குப் போலவே ஆன்மாவுக்கு விகாரப்படும் தன்மை இல்லை. இவ்வாறு அறிவாளன் ஆன்மாதேகத்திற்கு அன்னியன் என்று சிந்திக்க வேண்டும்.*

**மூஷாநிஷிப்தஹேமாப: கோச: ப்ராணமயோபவேத்**
**க்ஷுத்பிபாஸாபராபூதோநாயமாத்மாஜடோயத: 9**

*(பொ-ரை): அக்கினில் வார்க்கப்பட்ட பொன்போன்றதும், பசிதாகங்களால் வ்யாகுலப்பட்டதுமாகிய கோசமானது ப்ராணமயம் என்பதாம் இது ஜடமாதலின் ஆன்மாவல்ல.*

**சித்ரூப ஆத்மாயேனைவஸ்வதேஹமபிபச்யதி**
**ஆத்மைவஹிபரம்ப்ரும்ஹநிர்லேபஸ்ஸுகநீரதி: 11**

*(பொ-ரை): ஆன்மா அறிவுவடிவமே. எதனாலேயே தனது தேகம்முழுதும் அறிகின்றதோ சம்பந்தமற்றதும் ஆனந்த நிதியுமாகிய பரப்ரும்ஹமானது ஆன்மாவேயன்றோ.*

**நததச்நாதிகிஞ்சைதந்நத தச்நாதி கிஞ்சந. 12**

*(பொ-ரை): அது எதனையும் புசிக்கின்றதில்லை, யாதும் அதனை புசிக்கின்றதில்லை.*

**தத: ப்ராணமயேகோசேகோசோஸ்த்யேவமநோமய:**
**ஸஸங்கல்பவிகல்ப்பாத்மாபுத்தீந்திரியஸமாயுத: 13**

*(பொ-ரை): அதன்பின்னர் பிராணமயகோசத்தில் மனோமய கோசம் உளது. மனோமயகோசமானது ஞானேந்திரியங்களோடு கூடியதாகிய மனமேயாம்.*

**காம: க்ரோதஸ்ததாலோபோமோஹோமாத்ஸர்யமேவச**
**மதஶ்சேத்யரிஷட்வர்க்கோ மமதேச்சாதயோபிவா 14**

**மனோமயஸ்யகோசஸ்யதர்மா ஏதஸ்யதத்ரது**
**யாகர்மவிஷயாபுத்திர்வேதசாஸ்த்ரார்த்த நிச்சிதா 15**

**ஸாதுஞானேந்திரியைஸ்ஸார்த்தம் விக்ஞாநமயகோசத:**
**இஹகர்த்ருத்வாபிமானீஸ ஏவது நஸம்சய: 16**

*(பொ-ரை): காமம், குரோதம், லோபம், மோஹம், மாச்சரியம், மதம் எனும் இவ்வறுவகை பகைக்கூட்டமும், மமதை விருப்பம் முதலியனவும் இந்த மனோமயகோசத்தின் தர்மங்களேயாம். இனி அதனில் வேதசாஸ்திர அர்த்தத்தை நிச்சயிப்பதும் கர்மாவை விஷயமாய்க் கொண்டதுமாகிய புத்தியே ஞானேந்திரியங்களோடுகூடி விக்ஞாநமய கோசம் என்பதாம். இதேதேகத்தினில் கர்த்ருத்வாபிமானம் உடையதும் இதுவே சம்சயமில்லை. (சம்சயம் - சந்தேகம்)*

**இஹாமுத்ரகதிஸ்தஸ்யஸஜீவோவ்யாவஹாரிக:**
**வ்யோமாதிஸாத்விகாம்சேப்யோ ஜாயந்தேதீந்த்தரியாணிது 17**

*(பொ-ரை): அந்த விக்ஞாந மயகோசனுக்கு இங்குமங்கும் சஞ்சாரமாம், அவனே வ்யவஹாரத்தில் சம்பந்தப்பட்டவனாகிய ஜீவனாம். ஆகாயம் முதலியவைகளின் ஸத்வ அம்சங்களினின்றும் ஞானேந்திரியங்கள் தோன்றுகின்றன.*

**வ்யோம்ந: ச்ரோத்ரம்புவோக்ராணம்ஜலாஜஜிஹ்வாததேஜஸ:**
**சக்ஷுர்வாயோஸ்த்வகுத்பந்நாதேஷாம் பௌதிகதாதத: 18**

*(பொ-ரை): ஆகாயத்திலிருந்து சுரோத்திர இந்திரியமும், ப்ருதிவியிலிருந்து நாசிக இந்திரியமும், ஜலத்தினின்றும் ஜிஹ்வா இந்திரியமும், தேஜஸிலினின்றும் சக்ஷு இந்திரியமும், வாயுவினின்றும் த்வக் இந்திரியமும் உற்பன்னமாகியது. ஆதலால், அவைகளுக்கு பௌதிகத்வம் உளது என்பதாம்.*

**வ்யோமாதீநாம்ஸமஸ்தாநாம் ஸாத்விகாம்ஸேப்யஏவது**
**ஜாயதேபுத்திமனஸீபுத்தி: ஸ்யாந்நிஶ்சயாத்மிகா 19**

*(பொ-ரை): ஆகாயமுதலிய எல்லா பூதங்களின் சத்துவாம்சங்களினின்றே புத்திமனங்கள் தோன்றுகின்றன. புத்தியாவது நிச்சயவடிவேயாம்.*

**வாக்பாணிபாதபாயூபஸ்தாநி கர்மேந்த்ரியாணிது**
**வ்யோமாதீநாம் ரஜோம்சேப்யோவ்யஸ்**
**தேப்யஸ்தாந்யநுக்ரமாத். 20**

*(பொ-ரை): அந்த வாக், பாணி, பாதம், பாயு குஹ்யங்கள் என்னும் கர்மேந்திரியங்கள் ஆகாயம் முதலிய பூதங்களின் பிரத்யேக ரஜோ அம்சங்களினின்றும் முறையே தோன்றுகின்றன.*

**ஸமஸ்தேப்யோரஜோம்சேப்ய: பஞ்சப்ராணாதிவாயவ:**
**ஜாயந்தேஸப்ததசகமேவம்லிங்கசரீரகம் 21**

*(பொ-ரை): பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் எனும் வாயுக்கள் ஐந்தும் அப்பூதங்களின் சேர்ந்துள்ள ரஜோ அம்சங்களினின்றும் தோன்றின. இப்பதினேழு தத்துவமும் லிங்கசரீரம் என்பதாம்.*

**ஏவம்லிங்கசரீரம்துதப்தாய: பிண்டவத்யத:**
**பாஸ்பராத்யாஸயோகாத் ஸாக்ஷிசைதந்ய ஸம்யுதம்** 22

*(பொ-ரை): இந்த லிங்கசரீரமானது, யாதொரு காரணத்தினால் ஒன்றொடு ஒன்றின் ஒற்றுமைப்பட்டுக் கற்பனையினால் காய்ச்சிய இரும்புத் துண்டம்போல ஸாக்ஷியாகிய அறிவோடு கூடியதாகின்றது.*

**ததாநந்தமய: கோசோபோக்த்ருத்வம் ப்ரதிபத்யதே**
**வித்யாகர்மபலாதீநாம் போக்தேஹாமுத்ரஸஸ்ம்ருத:** 23

*(பொ-ரை): அவ்வானந்தமாகிய கோசம் போக்தாவாய் இருக்கும் தன்மையை அடைகின்றது. அவனே இம்மையிலும் மறுமையிலும் உபாஸ்தி கருமபயன் முதலியவைகளைப் புசிப்பவன் எனச் சொல்லப்படுகின்றது. (போக்தா-புசிப்பவன்)*

**யதாத்யாஸம்விஹாயைஷஸ்வஸ்வரூபேணதிஷ்டதி**
**அவித்யாமாத்ரஸம்யுக்த: ஸாக்ஷ்யாத்மாஜாயதேததா** 24

*(பொ-ரை): இவ்வான்மா எப்போது ஒற்றுமைப்பட்டு மயக்கத்தை விடுத்து தன் நிஜரூபத்தோடு மாத்திரம் இருக்கின்றானோ அப்போது அவித்தைமாத்திரத்தோடு கூடியவனாய் ஸாக்ஷிவடிவன் ஆகின்றான்.*

**த்ரஷ்டாந்த: கரணாதீநாமநுபூதேஸ்ம்ருதேரபி**
**அதோந்த: கரணாத்யாஸாதத்யாஸித்வேநசாத்மந:** 25

**போக்த்ருத்வம் ஸாக்ஷிதாசேதித்வைதம் தஸ்யோபபத்யதே**

*(பொ-ரை): அந்தக்கரணம் முதலியவைகளுக்கும் அநுபவத்திற்கும் நினைவிற்கும் ஸாக்ஷி - காண்போன். ஆதலால் அந்தக் கரணத்தோடு அத்தியாஸத்தினால் ஆன்மாவுக்கு அத்தியாஸத்தை உடையதாயிருக்கும் தன்மையாலும், போக்திருத்துவம் ஸாக்ஷித்வம் என்னும் இருவகைத் தன்மைகளும் அவனுக்குப் பொருந்துவதாம்.*

**ஆதபஸ்சாபிதச் சாயாதத்ப்ரகாசேவிராஜதே** 26

**ஏகோபோஜயிதாதத்ரபுங்தே அந்ய: கர்மண: பலம்**
**க்ஷேத்ரஜ்ஞம்ரதிநம்வித்திசரீரம்ரதமேவது.** 27

(பொ-ரை): வெய்யிலும், அதன் பிரதிபிம்பமும் (நிழலும்) அதன் பிரகாசத்திலேயே விளங்குகின்றது. ஆண்டு ஒருவன் புசிக்கச் செய்வோன், மற்றொருவன் கர்மபலத்தைப் புசிப்பவன். ஆன்மாவை ரதத்தையுடையோன் எனவும் சரீரத்தை ரதமே எனவும் அறிவாயாக.

**புத்திம்துஸாரதிம்வித்திப்ரக்ரஹம்துமநஸ்ததா**
**இந்திரியாணிஹயாந்வித்திவிஷயாஸ்தேஷுகோசரா: 28**

(பொ-ரை): புத்தியை தேர்ப்பாகனாகவும், மனஸை கடிவாளமாகவும், இந்திரியங்களை குதிரைகளாகவும் அறி. சப்த ஸ்பர்சம் முதலிய பொருள்கள் ஆண்டுசெல்லவேண்டிய இடங்கள் எனவும் அறியத்தக்கது.

**இந்த்ரியைர்மநஸாயுக்தம் போக்தாரம்வித்திபுருஷம்**
**ஏவம்சாந்த்யா தியுக்தஸ்ஸந்நுபாஸ்தேயஸ்ஸதாத்விஜ: 29**

**உத்காட்யோத்காட்யைகமேகம்யதைவகதளீதரோ:**
**வல்கலாநிதத: பச்சாத்லபதேஸாரமுத்தமம் 30**

**ததைவபஞ்சகோசேஷு மந:ஸங்க்ராமயம்க்ரமாத்**
**தேஷாம்மத்யேததஸ்ஸாரமாத்மாநமபிவிந்ததி 31**

(பொ-ரை): இந்திரியங்களோடும் மனஸோடும்கூடிய ஆன்மாவையே போக்தா என்றறிக. இவ்விதம் சமம் முதலியவை களை உடையவனாய்க்கொண்டு எவ்வந்தணன் எப்போதும் உபாஸிக்கின்றானோ, எங்ஙனம் வாழைமரத்தின் பட்டைகளைத் தனித்தனியே ஒவ்வொன்றாகப் பிரித்துப் பிரித்து அடுக்கின் அதன் நடுவினில் உள்ள தண்டை அடைவானோ, அவ்வாறே பஞ்ச கோசங்களில் அறிவை நன்கு செலுத்துகின்றவனாய்க் கொண்டு ஒன்றொன்றாகத் தள்ளுவானாயின், அவைகளின் நடுவினிலுள்ள ஸாரமாகிய ஆன்மாவை அடைகின்றான்.

**ஏவம்மநஸ்ஸமாதாயஸம்யதோமநஸித்விஜ:**
**அதப்ரவர்தயேச்சிதம் நிராகாரேபராத்மநி 32**

*(பொ-ரை): இவ்வாறு இந்திரியங்களை அடக்கி, மனஸிலேயே மனஸையும் அடக்கும் அந்தணன், அதன்பின்னர் சித்தத்தை அருவனாகிய பரமான்மாவிடம் செலுத்துவோனாகுக.*

**ததோமந: ப்ரக்ருஹ்ணாதிபராத்மாநம்ஹிகேவலம்**
**யத்தத்ரேச்யமக்ராஹ்யமஸ்தூலாத்யுக்திகோசரம்** 33

*(பொ-ரை): அதன்பின்னர் மனமானது, எத்தன்மையும் இராதவனும், காண ஒண்ணாதவனும், அடைய ஒண்ணாதவனும், அஸ்தூலம் முதலிய சொற்களுக்கு இலக்கியமாய் உள்ளவனுமாகிய பரமான்மாவை உள்ளபடி அறிந்துகொள்ளுகின்றது.*

**இராமர் வேண்டியதாவது:**

**பகவச்சரவணேநைவ ப்ரவர்த்தந்தே ஜநா:கதம்**
**வேதசாஸ்த்ரார்த்தஸம்பந்நாயஜ்வாநஸ்ஸத்யவாதிந:** 34

**ச்ருண்வந்தோபிததாத்மாநம் ஜாநதேநைவகேசந**
**ஜ்ஞாத்வாபிமந்யதேமித்யா கிமேதத்தவமாயயா** 35

*(பொ-ரை): ஓ பகவனே, வேதசாஸ்திர அர்த்தங்களை உணர்ந்தவர்களும், வேள்வி செய்கின்றவர்களும், சத்தியமே பேசுகின்றவர்களுமாய் இருந்தும் ஜனங்கள் சிரவணஞ் செய்கின்றதில் ஏன் பிரவர்த்திக்கின்றதில்லை? மற்றும் சிலர் சிரவணஞ் செய்கின்றவர்களே ஆயினும் ஆன்மாவை ஏன் அறிகின்றதில்லை? அறிந்தும் சிலர் மித்தையாகக் கொள்கின்றனரே ஏன்? இது உமது மாயையினாலா என்ன?*

**சிவபெருமான் அருளினார்:**

**ஏவமேவமஹாபாஹோநாத்ரகார்யாவிசாரணா**
**தைவீஹ்யேஷாகுணமயீமமமாயாதுரத்யயா** 36

**மாமேவயேப்ரபத்யந்தேமாயாமேதாம் தரந்திதே**
**அபக்தாயேமஹாபாஹோமமச்ருத்தாவிவர்ஜிதா:** 37

**பலம்காமயமாநாஸ்தேவைஹிகாமுஷ்மிகாதிகம்**
**க்ஷயிஷ்ணவல்பம்ஸாதிசயம்தத:கர்மபலம்மதம்** 38

**ததவிஜ்ஞாயகர்மாணியேகுர்வந்திநராதமா:**
**மாது:பதந்திதேகர்பேம்ருத்யோர்வக்த்ரேபுந:புந: 39**

*(பொ-ரை): ஓ மஹாபாஹுவாகிய இராமா, இது இவ்வாறே இதனில் சிறிதும் விசாரணைசெய்யவேண்டாம். இது தாண்டுதற்கு அரியதும் குணமயமுமாய் உள்ள எனது மாயையேயாம். என்னையே எவர் உபாஸிக்கின்றனரோ, அவர்களே இம்மாயை யைத் தாண்டுகின்றனர்.*

*சிரத்தை இல்லாதவர்களும் எனக்கு அபக்தர்களுமாய் எவர் இருக்கின்றனரோ அவர்கள் இம்மை மறுமைப் பயன்களைக் காமுறுகின்றவர்களாய் இருக்கின்றனர். ஆதலின் கர்மபலமானது அழிகின்றதும், அற்பமும், தாரதம்மியம் உடையதும் என நிச்சயிக்கப்பட்டது. அதனையறியாமல் எந்த* **நராதமர்கள்** *கர்மங்களைச் செய்கின்றனரோ அவர்கள் அன்னையின் கருப்பை யிலும் யமன் வாயினிலும் அடிக்கடி வீழ்கின்றனர்.*

**நாநாயோநிஷுஜாதஸ்யதேஹிநோயஸ்யகஸ்யசித்**
**கோடிஜன்மார்ஜிதை: புண்யை:மயிபக்தி:ப்ரஜாயதே 40**

*(பொ-ரை): எண்ணிறந்த பல யோநிகளில் பிறந்தவன் ஆயினும், எந்த தேஹியாய் இருக்கினும், எண்ணிறந்த பல ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட புண்ணியங்களாலேயே என்னிடம் பக்தி ஏற்படுகின்றது.*

**ஸஏவலபதேஜ்ஞானம்மத்பக்த: ச்ரத்தயாந்வித:**
**நாந்யகர்மாணிகுர்வாணோஜந்மகோடிசதைரபி 41**

*(பொ-ரை): எவன் என்னிடம் பக்திஉடையவனும், சிரத்தை உடையவனுமாய், எண்ணிறந்த பலகோடி ஜன்மங்களைப் பெறினும், காம்யகர்மங்களைச் செய்யாமல் இருப்பானாயின் அவனே ஞானத்தைப் பெறுகின்றான்.*

**தத:ஸர்வம்பரித்யஜ்யமத்பக்திம்ஸமுதாஹர:**
**ஸர்வதர்மாந்பரித்யஜ்யமாமேகம்சரணம்வ்ரஜ 42**

**அஹம்த்வாஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிமாசுச:**

*(பொ-ரை): ஆதலால் எல்லாவற்றையும் விடுத்து எனது பக்தியைச் செய்வாயாக; பயனில் விருப்பம் முதலிய பந்தஹேதுவாகிய ஸகலதன்மைகளையும் விடுத்து என்னொருவனையே சரணமடைவாயாக; உன்னை ஸகலகர்மங்களினின்றும் விடுபடச் செய்வேன் சோகம் அடைய வேண்டாம்.*

**யத்கரோஷிய தச்நாஸியஜ்ஜுஹோஷிததாஸியத்** **43**

**யத்தத்பச்யஸிராமத்வம்தத்குருஷ்வமதர்பணம்**
**தத: பரதரம்நாஸ்தி பக்திர்மயிரகூத்தம** **44**

*(பொ-ரை): யாதொன்றைச் செய்கின்றனையோ, யாதொன்றைப் புசிக்கின்றனையோ, யாதொன்றை ஹோமம் செய்கின்றனையோ, யாதொன்றைப் பார்க்கின்றனையோ ஓ இராமா நீ அதனை எனக்கு அர்ப்பணம் செய்வாயாக; ரகுகுலதிலகனே, என்னிடம் பக்தியானது அதனினும் மேலாகியது யாதுமில்லை.*

*(பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.)*





**கங்காள மூர்த்தி**

# பக்தியோகம் என்னும் பதினைந்தாவது அத்தியாயம்

*சிவபக்தியோகம் - சிவபக்திகளை எவ்வாறு செய்வது என்பது பற்றியும், யாரெல்லாம் சிவனுக்கு பிரியமாக இருக்கிறார்கள் என்பது பற்றியும், ருத்ர மந்திரங்களை உபாசிப்பது பற்றியும் இவ்வத்தியாயத்தில் காணலாம்.*

**இராமர் வேண்டியதாவது:**

**பக்திஸ்தேகீத்ருசீதேவஜாயதேஸாகதம்சஸா**
**யயாநிர்வாணரூபம் துலபதே மோக்ஷமுத்தமம். 01**

*பொழிப்புரை: ஓ தேவனே, உனது பக்தி எப்படிப்பட்டது? அந்த பக்தியானது எப்படி உண்டாகின்றது? எந்தபக்தியினாலேயே கைவல்யமாகிய உத்தமமான மோக்ஷத்தை அடைகின்றானோ?*

**தத்ப்ரூஹிகீரிஜாகாந்தப்ராப்யதே யேநநிர்வ்ருதி: 02**

*(பொ-ரை): கிரிஜா காந்தராகிய இறைவனே, எதனால் ஸுக மானது அடையப்படுகின்றதோ அதனைச் சொல்லும்.*

**சிவபெருமான் அருளியதாவது:**

**யோவேதாத்யயநம்யஜ்ஞம்தாநாநிவிவிதாநிச**
**மதர்பணதியாகுர்யாத்ஸமேபக்தஸ்ஸமேப்ரிய: 03**

*(பொ-ரை): எவன் வேதாத்யயனத்தையும், வேள்வியையும், பற்பல வகைகளாகிய தானங்களையும் எனக்கு அர்ப்பணம் செய்யும் பாவனையோடு செய்கின்றானோ, அவன் எனது பக்தன் அவன் எனக்கு பிரியன்.*

**நர்யபஸ்மஸமாதாயவிசுத்தம்சரோத்ரியாலயாத்**
**அக்நிரித்யாதிபிர்மந்த்ரைரபிமந்த்ர்யயதாவிதி 04**

**உத்தூளயதிகாத்ராணிதேநசார்சதிமாமபி**

*(பொ-ரை): வேதமோதியவனிடத்தினின்றும் பரிசுத் தூய்மையாயுள்ள அக்கினிஹோத்திர விபூதியை எடுத்து 'அக்நிரிதி' என்பது முதலிய மந்திரங்களால் அபிமந்திரித்து விதிப்படி*

*அங்கங்களில் பூசுகின்றது என்பதும், அதனாலேயே என்னையும் அர்ச்சிக்கின்றது என்பதுமாகிய யாதொன்றுளதோ,*

**தஸ்மாத்பரதராபக்தி: மமராமநவித்யதே** 05

**ஸர்வதாசிரஸா கண்டேருத்ராக்ஷாந்தாரயேத்துய:**
**பஞ்சாக்ஷரீஜபரத: ஸமேபக்த: ஸமேபரிய:** 06

*(பொ-ரை): ஓ இராமா, அதனிலும் சிறந்ததாகிய பக்தி எனக்கில்லை. எப்போதும் எவன் ருத்திராக்ஷங்களை சிரஸிலும் கண்டத்திலும் தரிக்கின்றானோ, பஞ்சாக்ஷரஜபத்தை முக்கியமாய்க் கொண்டும் இருக்கின்றானோ அவனே எனக்குப் பக்தன். அவனே எனக்குப் பிரியன்.

**பஸ்மச்சந்நோபஸ்மசாயீஸர்வதாவிஜிதேந்த்ரிய:**

**யஸ்துருத்ரம்ஜபேந்நித்யம்சிந்தயேந்மாமநந்யதீ:**
**ஸதேநைவசதேஹேநஸிவஸ்ஸம்ஜாயதெஸ்வயம்** 07

*(பொ-ரை): விபூதி பூசியவனும், விபூதியைப் படுக்கை யிட்டுப் படுப்போனும், எப்போதும் அடங்கியுள்ள இந்திரியங்களை உடையோனுமாக, யாதொருவன் ருத்திரத்தைத் தினந்தோறும் ஜபிக்கின்றவனும், வேறு சிந்தையில்லாதவனாக என்னைச் சிந்திப்பவனுமாய் உளனோ, அவன் அதேதேகத்தோடு சிவனாக ஆகின்றான்.*

**நர்யபஸ்மஸமாதாயவிசுத்தம்ச்ரோத்ரியாலயாத்**
**அக்நிரித்யாதிபிர்மந்த்ரைரபிமந்த்ர்யயதாவிதி** 08

**உத்தூளயதிகாத்ராணி தேநசார்சதிமாமயி**

*(பொ-ரை): வேதமோதியவன் இடத்தினின்றும் மிக்கத் தூய்மையாயுள்ள அக்கிநிஹோத்திர விபூதியை எடுத்து அக்நிரிதி என்பதுமுதலிய மந்திரங்களால் அபிமந்திரித்து விதிப்படி அங்கங்களில் பூசுகின்றது என்பதும் அதனாலேயே என்னையும் அர்ச்சிக்கின்றது என்பதுமாகிய யாதொன்றுளதோ,*

*குறிப்பு:- (பஸ்மமானது ஐஸ்வர்யத்தைக் கொடுக்குந் தன்மையால் விபூதி, பூதியெனும் பெயர்பெற்றதாக "ஐச்வர்யகாரணாத் பூதி: என்னும் பிருஹஜ்ஜாபாலோபநிஷத்).*

**பிருஹஜ்ஜாபாலம்**

''திக்பஸ்மரகிதம்பாலம் திக்கிராம மசிவாலயம்
திக்நீசார்ச்சநம் ஜந்ம திக்வித்யா மசிவாச்ரயாம்.''

*(இ.ள்.) பஸ்மமணியாத நெற்றியைச்சுடு, சிவாலயமில்லாத கிராமத்தைக் கொளுத்து, சிவார்ச்சனை இல்லாதவனது ஜன்மத்திலே தீயவை, சிவனை ஆசிரயிக்காத சாஸ்திரத்தை எரித்துவிடு.*

**பிருஹஜ்ஜாலோப நிஷத்**

தேநாதீதம் ச்ருதந்தேநதே நஸ்ரவமநுஷ்டிதம்
யேநவிப்ரேண சிரஸித்ரிபுண்டரம் பஸ்மநாத்ருதம்

த்யக்தவர்ணாச்ரமா சாரோலுப்தஸர்வக்ரி யோபிய:
ஸக்ருத்திரயக் த்ரிபுண்டராங்கத தாரணாத்ஸோபிபூஜ்யதே

யேபஸ்மதாரணம் த்யக்த்வாகர்ம குர்வந்திமாநவா:
தேஷாம் நாஸ்திவிநிர்மோக்ஷஸ் ஸம்ஸாராஜ் ஜன்மகோடிபி:

*(இ.ள்.) எந்த பிராமணனால் சிரசில் விபூதித் திரிபுண்டர தாரணம் செய்யப்பட்டதோ அவனால் வேதமெல்லாம் அத்யயனம் பண்ணப்பட்டனவாயின. சற்கருமம் அனைத்தும் அனுஷ்டிக்கப் பட்டனவாயின, தனது வருணத்திற்குரிய நல்லாசாரத்தை இழந்தவனேனும், சற்கருமங்களை விட்டவனேனும், பஸ்மங் கொண்டு திரிபுண்டரந் தரித்துக் கொண்டவன் பூஜிக்கப்படு வோனாய் விடுவன். எவர்கள் பஸ்மதாரணத்தைத் தள்ளிக் கருமங்களைச் செய்கிறார்களோ அவர்களுக்குக் கோடி ஜன்ம மாயினும் சமுசாரத் துக்கமில்லாத மோட்சவழி கிட்டாது.*

**மஹாபாரதம்-சாந்திபருவம்**

''ஆயுஷ்டிகாமோதவா ராஜந்பூதிகரமாதவாநர:
நித்யம்வைதாரயேத் பஸ்மமோட்ச காமீசவைத்விஜ:''

*(இ.ள்.) தருமராஜனே! ஆயுள் விருத்தியடைய அவாவோரும், செல்வத்தை இச்சிப்போரும், வீடுபேற்றை விரும்புவோருமான துவிஜர் நாடோறும் பஸ்மதாரணம் செய்யவேண்டும்.*

**கூர்ம புராணம்**

''ஸ்ரஷ்டாஸ்ருஷ்டிச்சலே நாஹத்ரிபுண்ட்ர ஸ்யப்ரசஸ்ததாம்
ஸஸர்ஜஸலலாடம் ஹிதிர்யங் நோர்த்த்வம் நவர்த்துலம்
ததாபிமாநவா மூர்க்கா நகுர்வந்தி த்ரிபுண்ட்ரகம்''

**(இ-ள்.)** பிரமதேவர் சிருஷ்டி செய்கையிலேயே பஸ்ம மஹாத்மியத்தைக் கூறி, அதனையணிந்து கோணற்காகவே நெற்றியைக் குறுக்காகப் படைத்தார். மேனோக்காவும், வட்டமாகவும் படைத்தார் அல்லர். அப்படி செய்திருந்தும் மூர்க்கர் சிலர் நெற்றியிலே திரிபுண்டரம் அணிவதில்லை.

இவ்விபூதியினைப்பற்றி யஜுர்வேத காலாக்நிருத்ரம், தைத்திரீயம், யோகதத்வம், ஸாமவேத ஜாபாலி, ஸந்யாசம், வாசுதேவம், அதர்வவேத பஸ்மஜாபாலம், பிருஹஜ்ஜாபாலம், நாரதபரிவிராஜம், ராமரஹஸ்யம், சாண்டில்யம், திரிபுரதாபிநி, அதர்வசிரம் முதலிய உபநிஷத்துக்களும், யஜுர்வேத முதலியனவும் பூஜிக்கின்றன.

**தஸ்மாத்பரதராபக்தி: மமராமநவித்யதே**
**ஸர்வதாசிரஸா கண்டேருத்ரா க்ஷாந்தாரயேத்துய:**
**பஞ்சாக்ஷரீஜபரத:ஸேமேபக்த:ஸமேபரிய:** 09

**(பொ-ரை):** ஓ இராமா, அதனிலும் சிறந்ததாகிய பக்தி எனக்கில்லை எப்போதும் எவன் ருத்திராக்ஷங்களைச் சிரஸிலும் கண்டத்திலும் தரிக்கின்றானோ பஞ்சாக்ஷரஜபத்தை முக்கியமாய்க் கொண்டுமிருக்கின்றானோ அவனே எனக்குப் பக்தன் அவனே எனக்குப் பிரியன்.

**பிரமாணம்: ருத்ராட்ச ஜாபாலம்**

"ருத்ராட்சாஜாதாஸ்ஸர் வாநுக்ரஹார்த்தாயதேஷாம்
நாமோச்சாரணமாத்ரேணச
கோப்ரதாநபலம் தர்சநஸ்பர்சநாப்யாம்த்விகுணபலம்"

**(இ-ள்.):** அனைவருக்கும் அநுக்கிரகம் செய்யும்பொருட்டு உருத்திராட்சங்கள் உண்டாயின. அவற்றின் பெயரைச் சொன்ன மாத்திரத்திலேயே பத்துக்கோதானபலனும், அவற்றைக் காண்டல் தீண்டல்களுக்கு மேலும் மேலும், இரட்டிப்பாகும் பலனாம்.

**பாரசரபுராணம்**

மகாதேவச்சவிஷ்ணுச்சப்ரஹ்மாதேஷாம் விபூதய:
தேவாச்சாந்யேஸதா பக்த்யாகலுருத்ராட்சதாரிண:
பாபிஷ்டாநாம் மனுஷ்யாணாம் ருத்ராட்சாணாஞ்சத
ச்ரத்தாநஜாய தேஸாக்ஷாத்வேத ஸித்தேவிமுக்திதே

(இ-ள்.) : மகாதேவன் (குணருத்திரன்) விஷ்ணு பிரமன் மற்றைத்தேவர்கள் யாவரும் எப்போதும் உருத்திராட்சத்தைப் பக்தியுடன் தரிக்கின்றனர். பாவிகளான மனிதர்கட்கு, வேதத்தினாற் சிந்தித்ததும் முக்தியைக் கொடுப்பதுமான உருத்திராட்ச தாரணத்திற் சிரத்தை உண்டாவதில்லை.

**ருத்ராட்ச ஜாபாலம்**

ஸுப்தேபீதே ஸதாகாலம் ருத்ராட்சம் தாரயேந்நர:

(இ.ள்) உருத்ராட்சம் எக்காலமும் அணியத்தக்கது.

**மகாஸ்காந்த புராணம்**

நவிபூதிர்யஸ்ய பாலோநாங்க ருத்ராட்சதாரணம்
சம்போர்பவநே பூஜாஸ்விப்ரச்ச்வ பசாதம:
காதந்மாம்ஸம் பிபந்மத்யம் ஸங்க்ஷச்நந்த்ய ஜாமபி
பாதகேப்யோவிமுச்யேத ருத்ராட்சே ஸிரஸிஸ்திதே:

(இ-ள்.): எவனுடைய நெற்றியில் விபூதி இல்லையோ, உடம்பில் உருத்திராட்ச மணிகள் இல்லையோ, எவனுடைய கிருகத்தில் சிவபூஜை இல்லையோ, அந்தவிப்பிரன் நாய் மாமிசத்தை தின்கிறவனிலும் கீழ்ப்பட்டவனாவன், மாமிசத்தை உண்பவனாயினும், மதுவைக் குடிப்பவனாயினும், நீசஸ்திரியைப் புணர்பவனாயினும் அவனது தலையில் உருத்திராக்கம் இருப்பின் பாவத்தினின்று விடுபடுவன்.

உருத்திராட்சத்தைப்பற்றிப் பஸ்மஜாபாலம், பிருஹஜ்ஜா பாலம், ராமரஹஸ்யம், ருக்வேத அக்ஷமாலிகை, யஜுர்வேத தக்ஷிணாமூர்த்தி, ஸாமவேத ருத்ராக்ஷ ஜாபாலமென இத் தொடக்கத்து உபநிஷத்துக்களும், ருக்வேத ஸ்ரீருத்ர நமகமுமாம்.

இவற்றுள் ருத்ராட்ச ஜாபாலத்தில் உருத்திராட்ச மணிகளின் உற்பத்தி, அளவு, முகம், காரணமந்திரம், தாரணபலாதி விவரணமும், அட்சமாலிகையில் அந்த மணிகளினிறம், அந்த மாலைகளின் பேதம், மகிமை முதலிய விவரமும், பிருகஜ்ஜா பாலத்தால் உருத்திராட்ச உற்பத்தி, தாரணபலாதி, விவரமும், அருளிச் செய்யப்பட்டன.

**பஸ்மச்சந்நோபஸ்மசாயீஸர்வதாவிஜிதேந்த்ரிய:**
**யஸ்துருத்ரம்ஜபேந்நித்யம்சிந்தயேந்மாமநந்யதீ:**
**ஸதேநைவசதேஹேநஶிவஸ்ஸம்ஜாயதெஸ்வயம்**

*(பொ-ரை): விபூதி பூசியவனும், விபூதியைப் படுக்கை யிட்டுப் படுப்போனும், எப்போதும் அடங்கியுள்ள இந்திரியங் களையுடையோனுமாக யாதொருவன் ருத்திரத்தைத் தினந்தோறும் ஜபிக்கின்றவனும், வேறு சிந்தையில்லாதவனாக என்னைச் சிந்திப்பவனுமாயுளனோ, அவன் அதே தேஹத்தோடு சிவனாக ஆகின்றான்.*

**ஜபேத்யோருத்ரஸூக்தாநிததாதர்வசிர:பரம்**
**கைவல்யோபநிஷத்ஸூக்தம்ச்வேதாச்வரமேவச**
**தத: பரதரோபக்தோமமலோகேநவித்யதே**

*(பொ-ரை): யாதொருவன் ருத்திரஸூக்தங்களையும், அதர்வசிரத்தையும், கைவல்யோபநிஷத ஸூக்தத்தையும், சுவேதாச்வதரத்தையும் ஜபிப்பவனோ அவனிலும் சிறந்த பக்தன் என்னுலகில் இல்லை.*

**அந்யத்ர தர்மாத் அந்யஸ்மாத் அந்யத்ராஸ்மாத்க்ருதாக்ருதாத்**
**அந்ய த்ரபூதாத்பவ்யாத்சயத்ப்ரவக்ஷ்யாமிதத்சுருணு 09**

*(பொ-ரை): தர்மத்திலும், அதர்மத்திலும், வேறுவகையாய் உள்ளதும், இந்த காரிய காரணங்களிலும், சென்றதிலும், இனி வருவதிலும், காலவரையினில் அகப்படாதது மாகிய யாதொன்றைச் சொல்லுவேனோ அதனைக் கேட்பாயாக.*

**வதந்தியத்பதம்வேதா: சாஸ்த்ராணி விவிதாநிச**
**ஸர்வோபநிஷதாம்ஸாரம் தத்நோக்ருதமிவோத்த்ருதம் 10**

**யதிச்சந்தோப்ரஹ்மசர்யம் சாந்திமுநயஸ்ஸதா**
**தத்தேபதம்ஸங்க்ரஹேணப்ரப்ரவிஷ்யாமியத்பதம் 11**

*(பொ-ரை): வேதங்களும், பலவகை சாஸ்திரங்களும் எந்தபதத்தைச் சொல்லுகின்றனவோ, தயிரினின்று எடுக்கப்பட்ட வெண்ணெய்போல எது ஸகல உபநிஷதங்களின் ஸாரமாய் உள்ளதோ முநிவர் எதனை விரும்பி எப்போது ப்ரஹ்மசரியத்தை*

*அநுஷ்டிக்கின்றனரோ அப்பதத்தை உனக்குச் சுருக்கமாகச் சொல்லுகின்றேன்.*

**ஏததேவாக்ஷரம்ப்ரஹ்ம ஏததேவாக்ஷரம்பரம்**
**ஏததேவாக்ஷரம்ஜ்ஞாத் வாப்ரஹ்மலோகே மஹீயதே** **12**

*(பொ-ரை): இந்த அக்ஷரமே ப்ரஹ்மம் இவ்வக்ஷரமே பரம். இவ்வக்ஷரத்தையே அறிந்து பரமிவப்பேற்றை யடைகின்றான்.*

**சந்தஸாம்யஸ்துதே நூநாம்ருஷபத்வேநசோதித**
**இதமேவபதி: ஸேதுரம்ருதஸ்யசதாரணாத்** **13**

*(பொ-ரை): யாதொன்று வேதங்களாகிய கோக்களுக்கு வ்ருஷபமாகச் சொல்லப்பட்டுளதோ அவ்விதுவே பதியாம். அம்ருதத்தை (மோக்ஷ அம்ருதத்தை)த் தரிக்கின்றமையின் சேதும் இதுவே.*

**மேதஸாபிஹிதேகோசேப்ரஹ்மயத்பரமோமிதி** **14**

*(பொ-ரை): (மாம்ஸ விசேஷத்தினாற்) மேதஸால் மூடப்பட்டுள்ள இச்சடலத்தில் ஸர்வஸாக்ஷியாய் விளங்கும் பரப்ரஹ்மமே ஓம் என்பதனால் சொல்லப்படுவதாம்.*

**சதஸ்ரஸ்தஸ்யமாத்ரா: ஸ்யுரகாரோகாரகௌததா**
**மகாரஸ்சாவஸாநேர்தமாத்ரேதிபரிகீர்த்திதா** **15**

*(பொ-ரை): அந்தப் பிரணவத்திற்கு மாத்திரைகள் நான்காம் அகாரம் உகாரம் மகாரம் இறுதியில் அரைமாத்திரை எனச் சொல்லப்பட்டுள்ளன.*

**(இங்கு நான்கு மாத்திரை எனக்கூறியதில் உள்ள மாத்திரை எனும் சொல்லுக்கு அவயவம். அதாவது அம்சம் எனப் பொருள் கொள்க. அல்லாவிடில் இறுதியில் அரைமாத்திரை என்றது முற்றும்).*

**பூர்வத்ரபூஸ்சருக்வேதோப்ரஹ்மாஷ்டவஸவஸ்ததா**
**கார்ஹபத்யஸ்சகாயத்ரீ கங்காப்ராத: ஸவஸ்ததா** **16**

*(பொ-ரை): அகாரத்தில் பூ என்பதும், ருக்வேதம், ப்ரஹ்மனும், அஷ்டவஸுக்கள், கார்ஹபத்தியமெனும் அக்கிநீ,*

*காயத்ரீ, கங்கையும் காலைஸவனம் எனும் இவை அடங்கினவாகக் கொள்க.*

**த்விதீயாதுபுவொவிஷ்ணூருத்ரோநுஷ்டுப்யஜுஸ்ததா**
**யமுநாதக்ஷிணாக்நிஸ்சமாத்யந்திநஸவஸ்ம்ருத: 17**

*(பொ-ரை): இரண்டாவதாகிய மாத்திரையில் புவ: என்பதும் விஷ்ணுருத்திரர்களும், அநுஷ்டுப்சந்தஸும், யஜுர்வேதமும், யமுநாநதியும், தக்ஷிணாக்நியும், மத்தியானஸவனமும் அடங்கியது என்பதாம்.*

**த்ருதீயாசஸுவ:ஸாமாந்யாதித்யஸ்சமஹேச்வர:**
**அக்நிராஹவநீயஸ்சஜகதீசஸரஸ்வதீ 18**
**த்ருதீயம்ஸவநம்ப்ரோக்தம அதர்வத்வேநயந்மதம்**

*(பொ-ரை): மூன்றாவதாகிய மாத்திரையில் ஸுவ: என்பதும், ஸாமவேதமும், ஆதித்தியனும், மஹேச்வரனும், ஆஹவநியமெனும் அக்கிநீயும், ஜகதீ எனும் சந்தஸும், மூன்றாவதாகிய ஸாயம்ஸவனமும் அடங்கியுள்ளது. யாதொன்று அதர்வமெனக் கொள்ளப்பட்டதோ.*

**சதுர்த்தீயாவஸாநேர்த்தமாத்ராஸாஸோமலோககா 19**

**அதர்வாங்கிரஸ: ஸம்வர்த்தகோக்நிஸ்சமஹஸ்ததா**
**விராட்ஸப்யாவஸத்யெளசக துத்ரிர்யஜ்ஞுபுச்சக: 20**

*(பொ-ரை): யாதொன்று இறுதியிலுள்ள நான்காவதான அரைமாத்திரையுளதோ, அதனில் சந்திரலோகம், அதர்வாங்கிரஸம், ஸம்வர்த்தக அக்கிநீ, மஹர் என்பது விராட்தேவதை ஸப்யாவ ஸத்யாக்கிநிகள், சுதுத்ரு எனும் நரவேள்வியைப் புச்சமா(வாலா)கக் கொண்டிருத்தல் எனும் இவையடங்கியுள்ளன.*

**ப்ரதமாரக்தவர்ணாஸ்யாத்விதீயாபாஸ்வராமதா**
**த்ருதீயாவித்யுதாபாஸாசதுர்த்தீ சுக்லவர்ணிநீ 21**

*(பொ-ரை): முதலாவது மாத்திரை சிவந்தநிறமும், இரண்டாவது மாத்திரை மிக்கச் சொலிப்பதான சூரியநிற முடையதும், மூன்றாவது மாத்திரை மின்னல் போன்றதும், நான்காவது மாத்திரை வெண்ணிறமுடையதுமாம். இங்கு*

பிரணவத்தின் மாத்திரையளவும் மாத்திரையின் நிறமும் ஸர்வ ப்ரத்தியக்ஷம் என்பதல்ல. மற்று யோகிகளாலேயே அறியப் படுமெதென சாஸ்திரங்களின் துணிபென அறிக.

**ஜாதம்சஜாயமாநம்சததோங்காரேப்ரதிஷ்டிதம்**
**விஸ்வம்பூதம்சபுவனம் விசித்ரம்பஹுதாததா**
**ஜாதம்சஜாயமாநம்சதத்ஸர்வம்ருத்ர உச்யதே 22**

*(பொ-ரை): உண்டானதும் உண்டாகிறதுமாகிய ஸகலமும் ஓங்காரத்தில் பிரதிஷ்டிக்கப்பட்டுள்ளது. விசித்திரமானதும், பலவாறானதும், உண்டானதும் உண்டாகின்றதுமாகிய ஸகல புவனமும், பூதமும் ஆகிய இவையெல்லாம் ருத்திரன் என்று சொல்லப்படுகின்றது.*

*குறிப்பு:- (இங்கு சொல்லப்படுகின்றதென்பது வேதத்தில் என்பதறிக.)*

**தஸ்மிந்நேவபுந: ப்ராண: ஸர்வமோங்கார உச்யதே 23**

*(பொ-ரை): அந்த ருத்திரனிடத்திலேயே, எல்லாமாய் இருக்கிற, ஓங்காரமானது. பிராணன் என்று சொல்லப்படுகின்றது.*

**ப்ரவிலீநம் ததோங்காரே பரப்ரஹ்ம ஸநாதநம்**
**தஸ்மாதோங்காரஜாபீய: ஸமுக்தோநாத்ரஸம்ஶய: 24**

*(பொ-ரை): நித்தியமான அப்பரப் ப்ரும்மமானது அவ்வோங்காரத்தில் ஒன்றுபட்டு அடங்கியுள்ளது. ஆதலால் ஓங்காரஜபம் உடையோன் முக்தனாகின்றான். இதனில் ஸம்சயமில்லை. (ஸம்சயம்-சந்தேகம்)*

**த்ரேதாக்நே:ஸ்மார்த்தவஹ்நேர்**
**வாஶைவாகநேர்வா ஸமாஹிதம்**
**பஸ்மாபிமந்த்ரியோமாம்து ப்ரணவேநப்ரபூஜயேத் 25**

*(பொ-ரை): கார்ஹபத்தியம் ஆஹவநியம் தக்ஷிணாக்கினி எனும் மூன்று அக்கினியில் இருந்தாவது, ஸ்மார்த்த அக்கினியில் இருந்தாவது, சைவாக்கினியில் இருந்தாவது எடுக்கப்பட்ட விபூதியை ப்ரணவத்தினால் அபிமந்திரித்து என்னை எவன் நன்கு பூஜிப்பானோ,*

**தஸ்மாத்பரதரோ பக்தோமமலோகே நவித்யதே**
**ஶாலாக் நேர்தாவவஹ்நேர்வா பஸ்மாநீயாபி மந்த்ரிதம் 26**
**யோவிலிம்பதி காத்ராணி ஸஶூத்ரோபி விமுச்யதே**

*(பொ-ரை): எனக்கு அவனிலும் சிறந்த பக்தன் உலகில் இல்லை. வைதிகரது இல்லத்து (அடுப்பு) அக்நியிலிருந்தாவது காட்டுத் தீயினின்றாவது எடுத்து அபிமந்திரித்து விபூதியை எவன் அங்கங்களில் பூசிக்கொள்கின்றானோ அவன் சூத்ரனாயினும் முக்தி யடைகின்றான்.*

**குசபுஷ்பை: பில்வதளை: புஷ்பைர்வாதிரிஸம்பவை:**
**யோமாமர்ச்யதே நித்யம்ப்ரணவேநப்ரியோஹிஶ: 27**

*(பொ-ரை): குசபுஷ்பங்களினாலாவது, பில்வ தளங்களினாலாவது, மலையில் உண்டாகும் மலர்களினாலாவது என்னை எவன் தினந்தோறும் பிரணவத்தினால் பூசிக்கின்றானோ அவன் எனக்குப் பிரியனாகின்றான்.*

**புஷ்பம் பலம் ஸமூலம் வாபத்ரம் ஸலிலமேவவா**
**யோதத்யாத் ப்ரணவைர்மஹ்யம்தத் கோடிகுஹிதம்பவேத் 28**

*(பொ-ரை): மலரையாவது, கனியையாவது, வேருடன் கூடிய தளத்தையாவது, ஜலத்தையாவது எவன் எனக்கு ப்ரணவத்தினால் ஸமர்ப்பிப்பானோ அது எனக்கு கோடி பங்கு அதிகமாகும்.*

**அஹிம்ஸாஸத்யமஸ்தேயம ஶௌசமிந்த்ரியநிக்ரஹ:**
**யஸ்யாஸ்யத்ய யநம்நித்யம் ஸமேபக்த: ஸமேப்ரிய: 29**

*(பொ-ரை): எவனுக்கு ஹிம்சையின்மை, பொய்இன்மை, திருட்டின்மை, சுத்தம், ஸத்தியம், இந்திரியஜயம், அத்யயனம் அவை நித்தியமாய் உளதோ அவன் எனது பக்தன். அவன் எனது பிரியன்.*

**ப்ரதோஷே யோமமஸ்தாநம் கத்வாபூஜயதேதுமாம்**
**ஸபராம் ஶ்ரியமாப்நோதிபஶ்சாந்மயிவிலீயதே 30**

*(பொ-ரை): பிரதோஷகாலத்தில் எவன் என் ஆலயத்தை அடைந்து என்னையே பூஜிக்கின்றானோ அவன் சிறந்த*

ஐச்வரியத்தை அடைகின்றான். இறுதியில் என்னிடம் லய மடைகின்றான்.

**பிரதோஷ வரலாறு**

ஒருகாலத்தில், தேவர்களும், அசுரர்களும் திருப்பாற் கடலில் மந்தரமலையை மத்தாக நட்டு, ஆதிசேஷனை நாணாகப்பூட்டிக் கடையும்போது அக்கடலில் பஞ்சதருக்களும், காமதேனுவும், இலட்சுமியும், சந்திரனும், வெள்ளை யானையும், மற்றும் அனேகமான திரவியங்களும் உண்டாயின. இவற்றை யெல்லாம் தேவர்கள் கிரகித்துக் கொண்டார்கள்.

அப்போது ஆதிசேடன் உபத்திரவம் பொறுக்காமல் விஷத்தினைக் கக்கிவிட்டனன். அவ்விஷம் எப்பக்கத்திலும் வீசச் சமீபத்திலிருந்த விஷ்ணு கறுத்துவிட்டனர். சிறிது தூரத்திலிருந்த பிரமன் புகை நிறமாயினர். உடனே தேவர்கள் பயந்து சிவபெருமானை நோக்கி முறையிட, அவர் மனமிரங்கி அவ்விஷத்தினைக் கடுகளவாக்கித் திருவமுது செய்தருளிக் கண்டத்தில் நிறுத்திக் கொண்டனர்.

இவ்விஷம் உண்டான காலம் திரயோதசி தினம் இரஜனி முகவேளை அதாவது மஞ்சள் வெயில் காய்கிற சாயுங்காலம். இக்காலமே பிரதோஷகாலம்.

இப்பிரதோஷகாலத்தில் தேவர்கள் முதலியவர்கட்கு இடபவாகன ரூடராய்ச் சூலஞ்சுழற்றி யொருசாமம் திருநடனஞ் செய்து அனுக்கிரகித்தது என்றும், அஸ்தமித்த மூன்றே முக்கால் நாழிகையாகிய பிரதோஷகாலம் பார்த்த சிவதரிசனத்திற்குப் பரியாய பட்சகாலம் எனவும் சொல்லப்படும்.

இப்பிரதோஷகால நிர்ணயமானது சிவாலயங்கட்கும், சிவதரிசனம் பண்ணுகிறவர்களுக்கும், விரதம் அனுஷ்டிப்பவர்கட்கும், ஆத்மார்த்த பூசை பண்ணுகிறவர்கட்கும் விதித்திருக்கின்றது.

**பிரதோஷகாலத்தில் பிரமவிஷ்ணு முதலிய தேவர்கள் எல்லோரும் சிவபெருமான் சந்நிதியில் இருப்பார்கள் ஆகையால், அந்த வேளையில் சிவபெருமான் ஆலயத்தை நீங்கி வேறு ஆலயத்திற்குப் போகிறவர்கள் நரகத்தினையே அடைவார்கள்.**

விநாயகர், சுப்பிரமணியர், அம்பாள் இவர்கட்கும் சிவபெருமானுக்கும் சிறிதும் பேதமின்மையால் இவ்வாலயங் கட்குப் பிரதோஷகாலத்தில் போய்த்தரிசிக்கலாம்.

*இப்பிரதோஷ காலத்தில் சிவாலயத்தில் ஒரு தீபமேற்றி வைக்கின்றவர்கள் அடையும் பலனை அம்மம்மா! ஆதிசேடனாலும் சொல்லமுடியாது எனின் அநேக தீபமேற்றி வைப்போர் அடையும் பலனை யாரெடுத்துச் சொல்லவல்லவர். அச்சிவமாகவே விளங்குவார்களே யல்லது வேறில்லை.*

*பிரதோஷ காலத்தில் நந்தியம்பெருமான் கழுத்தில் ஒரு மாலையிடுவோர் சிவசாயுச்சியமே யடைவர். பிரதோஷகாலத்தில் நந்திதேவராகிய இடபதேவருடைய இரண்டு கொம்புகளின் மத்தியில் சிவலிங்க தரிசனஞ்செய்தல் வேண்டும். விசேஷமுண்டான காலம் சனிக்கிழமை யானதினால், சனிப்பிரதோஷம் மிகுந்த சிறப்புடைத்து.*

**பிரதோஷ பிரதட்சணம்**

*பிரதோஷ காலத்தில் சோம சூத்திரமாகப் பிரதட்சணஞ் செய்யவேண்டும். அதாவது முதலில் நந்திதேவரைத் தரிசித்துக் கொண்டு, அங்கிருந்தவண்ணமே இடமாகச்சென்று சண்டேசுர நாயனாரைத் தரிசித்துச் சென்றவழியே திரும்பிவந்து மறுபடி நந்திதேவரைத் தரிசித்து, பின்பு சிவலிங்கந்தரிசனஞ் செய்ய வேண்டும். இவ்வாறு ஒருபிரதட்சணம் செய்தால் அனந்த பலனுண்டு. ஒருவன் இவ்விரதத்தினை எக்காலமும் அனுஷ்டித்து வருவானாயின் அவனுக்கு மறுசென்மமில்லை.*

*ஒருவன் தான் வாழும் ஊரிலுள்ள சிவாலயத்தில் பிரதோஷ தரிசனம் செய்யாது அன்னம் உண்ணுவானேயானால் அவ்வன்னம் மலத்துக்குச் சமானமாகும். அவனுக்கு ஆபத்துகள் அடிக்கடி நேரிடும். நாளுக்கு நாள் குடும்பம் க்ஷீணித்துவிடும். முடிவில் அவமானமான மரணவேதனைப்பட்டு இறந்தபின் நரகத்தினை யடைவன்.*

*பிரதோஷத்தினைத் தன்னால் இயன்றளவு திரவிய சகாயத்தால் நடத்துபவனும், அதற்கு உதவிசெய்பவனும், அக்காலத்தில் தீபம் வைப்பவனும், அக்காலத்தில் தரிசிப்பவனும் அடையும் பலன் ஒரு சிவாலயத்தினை நூதனமாகப் பிரதிஷ்டை செய்ததனால் உண்டாகிய பெரும் புண்ணியத்தினை யடைவார்கள்.*

இத்தகைய அருமையான உயர்ந்த பிரதோஷத்தினுக்கு இடையூறு செய்பவர்கள் அடையும் கதியினை இவ்வளவெனச் சொல்லி முடியாது. கோடானு கோடிகாலம் நரகத்தில் வீழ்ந்து துன்பத்தையே யனுபவிப்பார்.

ஒருவனுக்கு நல்ல மனைவிவேண்டுமாயினும் பிரதோஷ தரிசனமே செய்துவரல் வேண்டும்.

இப்பிரதோஷம் சுக்கிலபட்சம் திரயோதசியாவது, கிருஷ்ண பட்சம் திரயோதசியாவது உதயாதி உதயாந்தம் அறுபதிநாழி கையிருப்பது உத்தமம். உதயாதி முப்பது நாழிகையிருப்பது மத்திமம். உதயாதி இருபத்தாறேகால் நாழிகைக்குமேல் ஒரு வினாடியாவது இருப்பது அதமம்.

துவாதசிகலந்த திரயோதசியென்பது முதலில் துவாதசி முப்பது நாழிகைக்குமேல் திரயோதசி பிரவேசித்து மறுநாள் இருப்பத்தாறே கால் நாழிகையிருக்குமேயானால் முதலில் பிரதோஷ கிரியைகள் நடத்தவேண்டியது. ஒருவேளை மறுநாள் உதயாதி இருபத்தாறேகால் நாழிகைக்கு மேல் ஒருவினாடி நாழிகையாவது இருக்குமேயாகில் அன்றைய தினமே நடத்தவேண்டியது. திரயோதசி உதயாதி இருபத்தாறே கால் நாழிகை முதல் இராத்திரி மூன்றேமுக்கால் நாழிகை வரைக்கும் நாழிகை ஏழரை. இந்த நாழிகை ஏழரையில் ரஜனிமுக காலத்தில் சம்பவிக்கும் பிரதோஷ காலத்தினை பொருட்படுத்திக் கொள்ள வேண்டியது.

நாள் ஒன்றிற்கு முகூர்த்தம் பதினாறு. இவற்றுள் மத்தியான முகூர்த்தம் எட்டு, மத்தியான முகூர்த்தம் எட்டில் உதயாதி முதல் ஏழு முகூர்த்தத்தைக் கழித்து எட்டாவது முகூர்த்தம் பிரதோஷ காலமாம். இந்த முகூர்த்த மூன்றேமுக்கால் நாழிகையை மூன்று பிரிவாகப் பிரிக்கப்பிரிவு ஒன்றுக்கு நாழிகை ஒன்றேகால் இம்மூன்று பிரிவுகளில் முதற்பிரிவிற் பிரதோஷம் நடத்துவது உத்தமம். இரண்டாம் பிரிவில் நடத்துவது மத்திமம். மூன்றாவது பிரிவில் நடத்துவது அதமம். இம்மூன்று பிரிவினால் உண்டாகும் பயன் ஒன்றுக்கொன்று பேதித்ததல்ல.

பிரதோஷ மென்றால் முற்பவத்திற்செய்த தோஷ நிவாரணம். அல்லது இராத்திரியின் முன்காலம் அதாவது ரஜனிமுகவேளை மஞ்சள் வெயில் காய்கிறசமயம்.

**அஷ்டம்யாம்ச சதுர்தஶ்யாம் பர்வணோருபயோரபி**
**பூதிபூஷித ஸர்வாங்கோ ய:பூஜயதிமாம்நிசி**
**க்ருஷ்ணபக்ஷே விசேஷேண ஸமேபக்த: ஸமேப்ரிய: 32**

*(பொ-ரை): அஷ்டமியிலும், சதுர்த்தசியிலும், இருபர்வங்களிலும் (பௌர்ணமி அமாவாசைகளிலும்) விசேஷமாக கிருஷ்ண பக்ஷத்திலும் உடம்பு முழுதும் விபூதிபூசியவனாய் எவன் என்னை இரவில் பூஜிக்கின்றானோ அவன் எனது பக்தன், அவன் எனது பிரியன்.*

**ஏகாதச்யாமபோஷ்யைவ ய: பூஜயதிமாம்நிசி**
**ஸோமவாரே விசேஷேண ஸமேபக்தோந நச்யதி 33**

*(பொ-ரை): ஏகாதசியில் உபவாஸம் இருந்தும், விசேஷமாக ஸோமவாரத்தன்றும் இரவில் எவன் என்னைப் பூஜிக்கின்றானோ அவன் என் பக்தன் ஜனனமரணக் கேடனை அடைகின்றதில்லை. (ஸோமவாரம் - திங்கட்கிழமை)*

**பஞ்சாம்ருதை: ஸ்நாபயேத்ய: பஞ்சகவ்யேநவாபுந:**
**புஷ்போதகை: குசஜலை ஸ்தஸ்மாந்நாந்ய: ப்ரியோமம 34**

*(பொ-ரை): எவன் என்னைப் பஞ்சாம்ருதங்களினாலும் பஞ்ச கவ்யத்தினாலும், புஷ்ப தீர்த்தங்களினாலும், தர்ப்ப தீர்த்தங்களினாலும் ஸ்நாநம் செய்விப்பானோ எனக்கு அவனிலும் அந்நியனாகிய பிரியன் இல்லை.*

**பயஸாஸர்பிஷாசாபி மதுநேக்ஷுரஸேநவா**
**பக்வாம்ரபல ஜேநாபிநாரி கேளஜலேநவா 35**

**கந்தோதகே நவாமாம்யோருத்ரமந்த்ரம் ஸமுச்சரந்**
**அபிஷிஞ்சேத்ததோநாந்ய: கஶ்சித் ப்ரியதமோமம. 36**

*(பொ-ரை): பாலினாலும், நெய்யினாலும், தேனினாலும், கரும்புச் சாற்றினாலும், பக்குவமாகிய மாங்கனியினாலும், இளநீராலும், சந்தன பரிமள தீர்த்தத்தாலும் ருத்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு எவன் என்னை அபிஷேகம் செய்வானோ அவனிலும் எனக்கு மிக்கப்பிரியன் எவனுமில்லை.*

**ஆதித்யாபிமுகோ பூத்வாஹ்யூர்த்வ பாஹுர்ஜலேஸ்தித:**
**மாம்த்யாயந் ரவிபிம்பஸ்தமதவாங்கிரஸம்ஜபேத் 37**

*(பொ-ரை): எவன் ஜலத்திலிருந்து கொண்டு சூரியனுக்கு எதிர்முகமாகவும் உயரக்கைகளைக் கூப்பிக் கொண்டும் சூரியபிம்பத்தில் உள்ளவனாகிய என்னைத் தியானித்துக்கொண்டு அதர்வவேத மந்திரத்தை ஜபிக்கின்றானோ,*

**ப்ரவிசேந்மேசரீரே ஸௌக்ருஹம் க்ருஹபதிர்யதா**

*(பொ-ரை): வீட்டுக்காரன் தனது வீட்டிற்குச் செல்லுவது போல இவன் எனது தேகத்தை அடைகின்றான்.*

**ப்ருஹத்ரதந்தரம் வாமதேவ்யம் தேவவ்ரதாநிச 38**

**தத்யோகயாஜ்யதேஹாம்ஶ் சயோகாயதிமமாக்ரத:**
**இஹஶ்ரியம் பராம்பூக்த்வா மமஸாயுஜ்யமாப்துயாத் 39**

*(பொ-ரை): ப்ருஹத்ரதந்தர மந்திரத்தையும், வாமதேவ மந்திரத்தையும், அதனில் பிரதிபாதிக்கப்படும் தேகங்களையும் என்னெதிரில் எவன் ஓதித் துதிக்கின்றானோ, அவன் இங்கு உத்தமமாகிய ஐச்வரியத்தைப் புசித்துப் பின்னர் என்னை அடைகின்றான்.*

**ஈஶாவாஸ்யாதிமந்த்ராந் யோஜபேத்நித்யம்மமாக்ரத:**
**மத்ஸாயுஜ்யமவாப் நோதிமமலோகே மஹீயதே. 40**

*(பொ-ரை): ஈசாவாஸ்யம் முதலிய மந்திரங்களை எவன் எனக்கு எதிரிலிருந்து தினந்தோறும் ஜபிக்கின்றானோ, அவன் எனது உலகில் பெருமை பெறுவதும் தவிர என்னோடு ஸாயுஜ்யத்தையும் அடைகின்றான்.*

**பக்தியோகோமயாப்ரோக்த: எவம் ரகுகுலோத்வஹ**
**ஸர்வகாமப்ரதோ மர்த்ய: கிமந்யச்ச்ரோது மிச்சஸி 41**

*(பொ-ரை): இரகுகுல ச்ரேஷ்டனே, இவ்வாறு நித்தியமும் ஸகல கோரிக்கைகளையும் தருவதுமாகிய பக்தியோகமானது என்னால் சொல்லப்பட்டது. இன்னம் யாதைக்கேட்க விரும்புகின்றனை.*

*(பதினைந்தாம் அத்தியாயம் முற்றிற்று.)*

# கீதாதிகாரி நிரூபணம் என்னும் பதினாறாம் அத்தியாயம்

*அதிகாரிநிருபம்-சிவபூசனைகளைச் செய்ய தகுதியுடையவர்களைப் பற்றி இந்த 16ம் அத்தியாயம் விளக்குகின்றது. எளிய முறையில் சிவவழிபாடு செய்து முக்திப் பேரருளான இறைவனை அடைய வழி கூறுகின்றது. சிவத்தைப்பற்றி அறியாத பாமரரும் எளிய முறையில் சிவமுக்தி அடைவதைப்பற்றி விளக்குகின்றது.*

**இராமர் வேண்டியதாவது:**

**பகவந்மோக்ஷ மார்கோயஸ்த் வயாஸம்ய குதாஹ்ருத:**
**தத்ராதிகாரிணம் ப்ரூஹிதத் ரமேஸம்ஸயோமஹாந் 01**

பொழிப்புரை: ஓ பகவனே உம்மால் யாதாமொரு மோக்ஷ மார்க்கம் நன்கு சொல்லப்பட்டதோ அதனில் அதிகாரியைச் சொல்லும்? அதனில் எனக்கு மிகவும் ஸந்தேஹம் உள்ளது.

**சிவபெருமான் அருளியதாவது**

**ப்ரஹ்மக்ஷத்ர விஸஶ்ஸூத்ரா: ஸ்த்ரியஶ்சாத் ராதிகாரிண:**
**ப்ரஹ்மசாரீக்ருஹஸ் தோவா நுபநீதோதவாத்விஜ: 02**

**வநஸ்தோவா மவநஸ்தோவாயதி: பாசுபதவ்ரதீ**
**பஹூநாத்ரகிமுக்தேந யஸ்யபக்திஶ்ஶிவார்சநே 03**
**ஸஏவாத்ராதி காரீஸ்யாந்நாந்யசித்த: கதம்சந**

(பொ-ரை): இதனில் ப்ராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்ரர்களும் ஸ்திரீகளும் அதிகாரிகளாம். ப்ரம்மசாரீ, கிருஹஸ்தன், உபநயனமாகாத பிராஹ்மணன், வானப்பிரஸ்தன், வனத்தில் இல்லாதவன், ஸந்நியாஸி, பாசுபதவ்ருதம் உடையோன் ஆகிய இவர்கள் அதிகாரிகளாம். மிக்கக் கூறுவதேன் எவனுக்குச் சிவார்ச்சனையில் பக்தியுளதோ அவனே மோக்ஷ மார்க்கத்தில் செல்லத்தக்கவன் வேறுசித்தம் உடையோன் அல்ல.

**ஜடோந் தோபதிரோமூகோ நிஶ்ஶௌச: கர்மவர்ஜித: 04**

**அஜ்ஞோபஹாஸாபக்தாஶ்ஶ பூதிருத்ராக்ஷதாரிண:**
**லிங்கிநோயஶ்சவாத வேஷ்டிதேநையாத்ராதிகாரிண: 05**

*(பொ-ரை): மஹாமூடன், குருடன், செவிடன், ஊமையன், ஸ்நாநாதி சௌசமில்லாதவன், விதிக்கப்பட்ட கர்மங்களை அனுஷ்டியாத வ்ராத்தியன், மூடர்களிடம் கருணையின்றி ஏளனம் செய்வோன், பக்தியில்லாதவன், விபூதி ருத்திராக்ஷ தாரிகளான சிவ சின்னகாரர்களை துவேஷிப்பவன் ஆகிய இவர்கள் இதனில் அதிகாரிகளே யல்ல.*

**யோமாம்குரும் பாசுபதம்வ்ரதம்த்வேஸ்டிநராதிப**
**விஷ்ணும்வாஸநமுச்யேத ஜந்மகோடி சதைரபி 06**

*(பொ-ரை): எவன், என்னையாவது, தனது குருவையாவது, பாசுபத விரதத்தையாவது, விஷ்ணுவையாவது, துவேஷிக்கின் றானோ ஓ அரசனே, அவன் கல்பகோடி சதங்களாலும் முக்தியடையான்.*

**அநேக கர்மஸக்தோபி ஶிவஜ்ஞானவிவர்ஜித:**
**ஶிவபக்திவிஹீநஶ்ச ஸமஸாரீநைவ முச்யதே. 07**

*(பொ-ரை): பற்பல கர்மங்களை அநுஷ்டிக்கின்றவன் ஆயினும் சிவஜ்ஞானமும் சிவபக்தியும் இல்லாத ஸம்ஸாரி யானவன் முக்தி அடைகின்றதே யில்லை.*

**ஆஸக்தா: பலஸங்கேநயேத்வ வைதிககர்மணி**
**த்ருஷ்டமாத்ர பலாஸ்தேது நமுக்தாவதிகாரிண: 08**

*(பொ-ரை): எவர்கள் பயனின் விருப்பத்தினால் வேத விரோதமாகிய கர்மங்களில் செல்லுகின்றனரோ அப்போதே காணப்படுவதாகிய பிரத்தியக்ஷமாத்திரப் பயனை உடைய வர்களாகிய அவர்கள் முக்திக்கு அதிகாரிகளல்ல.*

**அவிமுக்தே த்வாரகாயாம் ஶ்ரீசைலே புண்டரீககே**
**தேஹாந்தேதாரகம் ப்ரஹ்மலபதே மதனுக்ரஹாத் 09**

*(பொ-ரை): காசியிலாவது துவாரகையிலாவது ஸ்ரீசைலத்தி லாவது சிதம்பரத்திலாவது மரிப்பவன் எனது அனுக்கிரஹத்தால் தாரகப்ரும உபதேசத்தைப் பெறுகின்றான்.*

**(தாரகம் ஓம், இது பிரணவம். பிரணவமாவார் சிவபெருமான். ''அகாரம் ப்ரஹ்மாணம்'' ''உகாரா விஷ்ணும்'' ''மகாரம் ருத்ரம்''*

"ஓங்காரம் ஸர்வேச்வரம்" என்னும் ந்ருஸிம்ஹ மோத்தரதாபிநி உபநிஷத்தால் அறிக).

"அத்ரஹி ஜந்தோர் ம்ருமூர்ஷோ:" எனும் ஜாபாலோபநிஷத் வாக்யத்தால், பிராணோத் கிரமணகாலத்தில், காசிப்பதியின் கண்ணே மூர்ச்சிதர்களாகிய ஸர்வ பிராணிகளுக்கும் ஸ்ரீருத்ர பகவான் தாரகமாகிய பிரணவத்தை உபதேசிக்கிறார் என்பதாலும் உணர்க.

**யஸ்யஹஸ்தௌச பாதௌசமநஶ்சைவஸுஸம்யதம்**
**வித்யாதபஶ்ச கீர்த்திஶ்ச ஸதீர்த்தபலமஸ்நுதே.** 10

(பொ-ரை): எவனுக்கு கை, கால், மனம் இவை நியமிக்க அடக்க முள்ளனவாகவும் வித்தை, தவம், கீர்த்தி இவை ஸாத்விகங் களாகவும் இருக்கின்றனவோ அவனே தீர்த்தபயனை அடை கின்றான்.

(நுட்பம்: பூர்வம் காசி முதலிய இடங்களில் மரிப்பவனுக்கு மோக்ஷ ஹேதுவாகிய தாரகப்ரஹ்ம உபதேசம் செய்யப்படு கின்றதாகச் சொல்லப்பட்டதானது காசி முதலிய இடங்களில் பாவங்களைச் செய்துகொண்டு நியமம் தவறி மரிப்பவனுக்கும் நிகழுமோ எனும் சங்கை நிகழ இந்த சுலோகத்தினால் அவ்வுண்மை உபதேசிக்கப்பட்டது. அதாவது **காசி முதலிய இடங்களிலிருந்து கொண்டு விதிவழுவி நடப்பவனுக்கு அதோகதியே அன்றி வேறில்லை என்பதே இவ்வுண்மையானது.**

(அவர்கள் காசியில் விதிமுறை வழுவி ஆகார வியவஹாரங் களில் உழன்று கொண்டு வஸிக்கின்றார்களோ அவர்களுக்கு காசி நரகத்திற்கு சமானமாகவும் கங்கை அக்நியாற்றிற்கு சமானமாயும் ஆகின்றது. என்பது முதலிய வாக்கியங்களால் காசிகாண்டம் முதலியவைகளில் உபதேசிக்கப்படுகின்றது.)

**விப்ரஸ்யாநுபநீதஸ்ய விதிரேவமுதாஹ்ருத:**
**நாபிவ்யாஹாரயேத் ப்ரஹ்மஸ்வதாநி நயநாத்ருதே** 11

(பொ-ரை): உபநயனம் பெறாத அந்தணனுக்குப் பின் வருமாறு விதியாம். வேதத்தை உபநயன ஸம்ஸ்காரம் பெறாமல் சொல்லக் கூடாது.

**ஸஶூத்ரேணஸமஸ்தாவத் யாவத்வேதேநஜாயதே**
**நாமஸங்கீர்த்தநே த்யாநேஸர்வ ஏவாதிகாரிண:** 12

(பொ-ரை): எவன் எதுவரையில் உபநயன ஸம்ஸ்காரம் பெறவில்லையோ அதுவரையில் சூத்திரனுக்கு நிகராம். நாம உச்சாரணத்திலும் தியானத்திலும் எல்லோருமே அதிகாரிகள்.

**ஸம்ஸாராந்முச்யதே ஜந்து: ஶிவதாதாத்ம்யபாவநாத்**
**யதாதானம்தபோ வேதாத்யயநம்சாந்கர்மவா** 13
**ஸஹஸ்ராம ஶந்து நார்ஹந்திஸர்வதாத்யாநகர்மண:**

(பொ-ரை): ஜீவன் சிவதாதான்மிய பாவனையால் ஸம்ஸாரத்தினின்றும் முக்தனாகின்றான். விதிப்படியாகிய தானம், தவம், வேதஅத்யயனமும் மற்றுமுள்ள புண்ணியங்களும் தியானத்தின் ஆயிரத்தில் ஓர் பங்குக்கும் நிகராகா.

**ஜாதிமாச்ரமமங்காநி தேசம்காலமதாபிவா**
**ஆஸநாதீநி கர்மாணி த்யாநம் நாபேக்ஷதே க்வசித்** 14

(பொ-ரை): தியானமானது ஜாதி, ஆச்ரமம், அங்கங்கள், தேசம், காலம், ஆஸநம் முதலிய கர்மங்கள் இவை முதலியவைகளில் எதனையும் ஒருபோதும் கோருகின்றதில்லை அதாவது தியானத்திற்கு இவைகளுள் யாதேனும் வேண்டும் எனும் நியமம் இல்லை என்றறிக.

**கச்சந்திஷ்டந்சரந்வாபி ஶயாநோவரந்யகர்மணி**
**பாதகேநாபியுக்தோவா த்யாநாதேவவிமுச்யதே.** 15

(பொ-ரை): நடக்கின்றவனாயினும், நிற்கின்றவனாயினும், திரிகின்றவனாயினும், படுத்துக்கொண்டு இருக்கின்றவனாயினும், வேறு காரியத்தைச் செய்கின்றவனாயினும் தியானத்தாலேயே முக்தியடைகிறான்.

**நேஹாபிக்ரமநாசோஸ்தி ப்ரத்யவாயோநவித்யதே**
**ஸ்வல்பமப்யஸ்யதர்மஸ்ய த்ராயதேமஹதோபயாத்** 16

(பொ-ரை): இத்தியானத்திற்கு இடையூறு யாதும் நிகழுத லில்லை (மாறுபட்டால்), பிரத்தியவாயமும் இல்லை, இது

ஸ்வல்பமாய் அனுஷ்டிக்கப்படினும் அதனால் நிகழும் தர்மமானது பெரிய பயத்தினின்றும் ரக்ஷிக்கின்றது. (ஸ்வல்பம்-கொஞ்சம்)

**ஆஶ்சர்யே வாபயேஶோகே க்ஷுதேவாமமநாமய:**
**வ்யாஜேநரபிஸ்மரேந்மர்த்ய: ஸயாதிபரமாம்கதிம் 17**

(பொ-ரை): ஆஶ்சர்யம், பயம், சோகம், இவை நிகழும் போதாவது, தும்மல் நிகழும்போதாவது, வியாஜத்தினாலாவது எவன் எனது நாமத்தை ஸ்மரிக்கின்றானோ அவன் பரமகதியை அடைகின்றான்.

**மஹாபாபைரபிஸ்ப்ருஷ்டோதேஹாந்தேயஸ்துமாம்ஸ்மரேத்**
**பஞ்சாக்ஷரீம்வோச்சரதி ஸமுக்தோநாத்ர ஸம்ஶய: 18**

(பொ-ரை): மஹாபாபங்களினால் பற்றப்பட்டவனாயினும் எவன் மரணகாலத்தில் என்னை ஸ்மரிப்பானோ அல்லது பஞ்சாக்ஷரத்தை உச்சரிப்பானோ அவன் முக்தனாகின்றான். இதில் ஸந்தேகமில்லை. (ஸ்மரித்தல்-நினைத்தல்)

**விஶ்வம் ஶிவமயம் யஸ்து பஶ்யந்நாத்மாநமாத்மநா**
**தஸ்யக்ஷேத்ரேஷு தீர்த்தேஷு கிம்கார்யம்வாந்யகர்மஸு 19**

(பொ-ரை): எவன் தன்னையும் ஸகலத்தையும் சிவ ஸ்வரூபமாக அறிவினால் காண்கின்றானோ அவனுக்கு க்ஷேத்திரங்களிலாவது தீர்த்தங்களிலாவது வேறு கர்மங்களிலாவது செய்யவேண்டியது யாதுளது?

**ஸர்வேணஸர்வதாகார்யம்பூதிருத்ராக்ஷதாரணம்**
**யுக்தேநாப்யயுக்தேந ஶிவபக்தி மபீப்ஸதா 20**

(பொ-ரை): பக்தியை விரும்புவோனாயின் கர்ம அனுஷ்டானத்தோடு இருக்கின்றவனாயினும் அங்ஙனம் இராதவனாயினும் அவனால் விபூதிருத்திராக்ஷங்கள் அவசியம் தரிக்க வேண்டியது.

**நர்யபஸ்மஸமாயுக்தோ ருத்ராக்ஷாந்யஸ்துதாரயேத்**
**மஹாபாபைர பிஸ்ப்ருஷ்டோ முச்யதே நாத்ரஸம்ஶய 21**

(பொ-ரை): எவன் அக்நிஹோத்திர விபூதியை அணி கின்றவனாய் ருத்திராக்ஷங்களைத் தரித்துக் கொள்ளுகின்றானோ

*அவன் பாவங்களைச் செய்திருந்தவன் ஆயினும் அவைகளினின்று விடுபடுகின்றான். இதனில் ஸம்சயமில்லை.*

**அந்யாநிசைவ கர்மாணிகரோது நகரோதுவா**
**சிவநாம ஜபேத்யஸ்து ஸர்வதாமுச்யதேதுஸ:** 22

*(பொ-ரை): ஏனைய சைவஆசாரங்களைச் செய்தாலும் செய்யாவிடினும் சிவநாமத்தையே எவன் எப்போதும் ஜபிப்பானோ அவன் முக்தனாகின்றான்.*

**அந்தகாலேது ருத்ராக்ஷாந் விபூதிம்தாரயேததுய**
**மஹாபாபோபபரபௌகை ரபிஸ்ப்ருஷ்டோநராதம:**
**தம்ஜநம்நோபஸர்ப்பந்தி ஸர்வதா யமகிங்கரா:** 23

*(பொ-ரை): எந்த நராதமன் அந்திம காலத்தில் விபூதி ருத்ராக்ஷங்களைத் தரிக்கின்றானோ மஹாபாப உபபாப ராசிகளால் ஸ்பரிசிக்கப்பட்டவன் ஆயினும் அம்மனிதனை எவ்வாற்றாலும் யமகிங்கரர்கள் அணுகுகின்றது இல்லை.*

**பில்வமூலம்ருதாயஸ்து சரீரமுபலிம்பதி**
**அந்தகாலேந்தகஜனை: ஸதூரிக்ரியதேநர:** 24

*(பொ-ரை): எவன் அந்தக்காலத்தில் பில்வ விருட்சத்தின் அடியிலுள்ள மண்ணை சரீரத்தில் பூசிக்கொள்ளுகின்றானோ அம்மனிதன் யமதூதர்களால் தூரத்திலேயே தவிர்க்கப்படுகின்றான்.*

**இராமர் வேண்டியதாவது:**

**பகவந்பூஜித:புத்ர குத்ரவாத்வம் ப்ரஸீதஸி**
**தத்ப்ருஹிமமஜிஜ்ஞாஸா வர்ததேமஹதீவிபோ.** 25

*(பொ-ரை): ஓ பகவனே, தேவரீர் எதனிடம் பூஜிக்கப்படுகின்றீரோ, எதனிடம் அனுக்கிரஹிக்கின்றீரோ அதனைத் தெரிந்துகொள்வதில் எனக்கு மிகவும் விருப்பமுள்ளது. ஆதலின் சொல்லுங்கள்.*

**ஸ்ரீ சிவபெருமான் அருளினார்:**

**ம்ருதாவாகோமயேநாபி பஸ்மநாசந்தநேநவா**
**ஸிகதாபி: தாருணாவா பாஷாணேநாபிநிர்மிதா** 26

**லோஹேநவாதரங்கேண காம்ஸ்யகர்பாபித்தளை:**
**தாம்ரரௌப்ய ஸுவர்ணைர்வா ரத்னைர்நாநாவிதைரபி 27**

**அதவாபாரதே நைவகர்பூரேணுதவாக்ருதா**
**ப்ரதிமாசிவலிங்கம் வாத்ருவைரேதை: க்ருதம்துயது 28**

**தத்ரமாம்பூஜயேத்தேஷு பலம்கோடிகுணோத்தரம் 29**

*(பொ-ரை): மண், பசுவின் சாணம், விபூதி, சந்தனம், மணல், சடை , சிலை இவைகளினாலாவது இரும்பு, ஈயம், வெங்கலம், துத்திநாகம், பித்தளை, செம்பு, வெள்ளி, பொன் பலவிதமாயுள்ள ரத்நங்கள், பாதரஸம், கர்ப்பூரம் இவைகளினாலாவது செய்யப்பட்ட ப்ரதிமையாகிய லிங்கம் யாதொன்று உளதோ அதனில் என்னை பூஜிக்க வேண்டும். அதனால் உண்டாகும் பயன் உத்தரோத்தரம் கோடி பங்கு அதிகம். (சடை-மரம்)*

**ம்ருத்தாருகாம்ஸ்ய லோஹைச்சபாஷாணேநாபிநிர்மிதா**
**க்ருஹிணாப்ரதிமாகார்யாசிவம் சச்வத் அபீப்ஸதா 30**

**ஆயு: ஸ்ரீயம்குலம்தர்மம் புத்ராநாப்நோதிதை: க்ரமாத் 31**

*(பொ-ரை): அடிக்கடி சுபத்தை விரும்பும் இல்லறத்தோன் மண்ணினாலாவது, சடையினாலாவது, வெண்கலத்தாலாவது, இரும்பினாலாவது, சிலையினாலாவது, நிர்மிக்கப்பட்ட ப்ரதிமையை பூஜிக்கவேண்டும். அங்ஙனம் பூஜிப்பானாயின் முறையே ஆயுள், செல்வம், குலம், தர்மம், புதல்வர் இவைகளை அடைகின்றான்.*

**பில்வவ்ருக்ஷேதத்பலேவா யோமாம்பூஜயதேநர:**
**பராம்ஸ்ரீயம் இஹப்ராப்ய மமலோகேமஹீயதே. 32**

*(பொ-ரை): எந்தமனிதன் பில்வ விருக்ஷத்திலாவது, அதன்கனியிலாவது என்னை பூஜிக்கின்றானோ அவன் இம்மையில் மிக்கச்செல்வம் உடையோனாய் இருந்து, மறுமையில் என்னுலகிலேயே விளங்குவான்.*

**பில்வவிருக்ஷம்ஸமாச் ரித்யயோமந்த்ராந்விதிநாஜபேத்**
**ஏகேனதிவஸேநைவ தத்புரச்சரணம்பவேத் 33**

(பொ-ரை): எவன் பில்வவிருக்ஷத்தின் அடியில் உட்கார்ந்து மந்திரங்களை விதிப்படி செபிப்பானோ அவன் ஒரே தினத்தில் அம்மந்திரத்திற்கு புரப்பசரணஞ் செய்யத்தகும். (புரப்பசரணஞ் - ஸித்தி சமயத்தில் செய்யுங் கிரியை)

**யஸ்துபில்வவநேநித்யம்குடீம்க்ருத்வாவஸேந்நர:**
**ஸர்வேமந்த்ரா: ப்ரஸித்யநதிஜபமாத்ரேணகேவலம். 34**

**பர்வதாக்ரேநதீதீரே பில்வமூலேஶிவாலயே**
**அக்நிஹோத்ரேகேஶவஸ்ய ஸந்நிதௌசஜபேத்துய: 35**

**நைவாஸ்யவிக்நம்குர்வந்தி தானவாயக்ஷராக்ஷஸா:**
**தம்நஸ்ப்ரசந்திபாபாநி ஶிவஸாயுஜ்யம்ருச்சதி 36**

(பொ-ரை): எந்தமனிதன் பில்வவனத்திலேயே ஆச்ரமத்தை அமைத்துக்கொண்டு எப்போதும் வஸிப்பானோ, அவனுக்கு ஸகல மந்த்ரங்களும் கேவலம் ஜபத்தினாலேயே ஸித்தி ஆகின்றன. மலையின் சிகரத்திலாவது, நதிக்கரையிலாவது, பில்வ விருக்ஷத்தின் அடியிலாவது, பசிவாலயத்திலாவது, அக்நிஹோத்ர சாலையிலாவது விஷ்ணுவினது ஸந்நிதியிலாவது எவன் ஜபம் செய்வானோ அம்மனிதனுக்கு அசுரர்களும் யக்ஷ ராக்ஷஸர்களும் இடையூறைச் செய்யவே மாட்டார்கள். அவனை பாபங்கள் ஸ்பரிசிக்கின்றன வல்ல. அவன் சிவஸாயுஜ்யத்தை அடைகிறான்.

**ஸ்தண்டிலேவா ஜலே வஹ்நௌவாயாவாகாஶௌவவா**
**கிரௌஸ்வாத்மநி வாயோமாம்பூஜயேத் ப்ரயதோநர: 37**

**ஸக்ருத்ஸ்நம்பலமாப்நோதி லவமாத்ரேணராகவா**
**ஆத்மபூஜாஸமாநாஸ்தி பூஜாரகுகுலோத்வஹா 38**

(பொ-ரை): பூமியிலாவது, ஜலத்திலாவது, அக்நியிலாவது, வாயுவிலாவது, ஆகாசத்திலாவது, மலையிலாவது, தனது இருதய கமலத்திலாவது எந்த மனிதன் நியமத்தை உடையவனாய்க் கொண்டு என்னைப் பூஜிப்பானோ, இராகவா, அவன் ஸ்வல்ப பூஜையினாலும் ஸகல பலத்தையும் அடைகின்றான். ஓ இரகுகுல ஶ்ரேஷ்டா, தன்னிருதய கமலத்தில் இறைவனைக் குறித்துச் செய்யும் பூஜைக்கு நிகராகிய பூஜையில்லை.

**மத்ஸாயுஜ்ய மவாப்நோதி சண்டாலோப்யாத்ம பூஜயா
ஸர்வாந்காமாந் அவாப்நோதிமநுஷ்ய: கம்பலாஸனே. 39**

(பொ-ரை): புலையனாயினும் இருதய காலத்தில் என்னை பூஜித்தலால் என் ஸாயுஜ்யத்தை அடைகின்றான். கம்பள ஆஸனத்தில் உட்கார்ந்துகொண்டு ஜெபிப்பவன் விரும்பிய ஸகலமும் கிடைக்கப் பெறுகின்றான்.

**க்ருஷ்ணாஜிநேபவேந்முக்திர் மோக்ஷ ஸ்ரீர்வ்யாக்ரசர்மணி:
குசாஸநேபவேஜ்ஞானம் ஆரோக்யம் பத்ரநிர்மிதே 40**

**பாஷாணேதுக்கம் ஆப்நோதி காஷ்டே நாநாவிதாந்கமான்
வஸ்த்ரேண ஸ்ரீயமாப்நோதிபூமௌ மந்த்ரோநஸித்யதி. 41**

(பொ-ரை): மான்தோலில் ஜபித்தால் முக்தி நிகழும். புலித்தோலிலிருந்து ஜெபித்தால் மோக்ஷச் செல்வமாம். தர்ப்பையால் செய்யப்பட்ட ஆஸனத்தில் ஜ்ஞானம் நிகழும் இலையால் செய்த ஆஸனத்திலிருந்து ஜெபித்தால் ஆரோக்கியமாம். கருங்கல்லில் க்லேசம் நிகழும். கட்டையினிலிருந்து ஜெபிப்பவன் பலவகைப்பட்ட வியாதிகளை அடைவான். வஸ்திரத்தில் ஜெபிப்பவன் செல்வத்தை அல்லது காந்தியை அடைகின்றான். பூமியிலிருந்து ஜெபித்தால் மந்திரமானது சித்திக்கின்றது இல்லை.

**உதன்முகப்ரான்முகோவா ஜபம்பூஜாம்ஸமாசரேத்
அக்ஷமாலாவிதிம் வக்ஷ்யேஸ் ருணுஷ்வாவஹிதோந்ருப 42**

(பொ-ரை): வடக்குமுகமாகவாவது, கிழக்கு முகமாகவாவது ஜபத்தையும், பூஜையையும் செய்யவேண்டும், ஓ அரசனே அக்ஷமாலையைப் பற்றிய விதியைச் சொல்லுகின்றேன். சாவதானனாகக் கேள்.

**ஸாம்ராஜ்யம்ஸ்படி கோதத்யாத்புத்ரஜீவ: பராம்ஸ்ரீயம்
ஆத்மஜ்ஞானம் குசக்ரந்திருத்ராக்ஷ: ஸர்வகாமத: 43**

**ப்ரவாலை ஃஸ்சக்ருதாமாலாஸர்வலோக வசப்ரதா
மோக்ஷப்ரதாசமாலாஸ்யாத் ஆமலக்யா: பலைக்ருதா 44**

**முக்தாபலை: க்ருதாமாலா ஸர்வவித்யாப்ரதாயினீ**
**மாணிக்யரஜிதாமாலா த்ரைலோக்யஸ்யவஶங்கரீ 45**

**நீலைர்மரகதைர்வாபிக்ருதா ஶத்ருபயப்ரதா**
**ஸுவர்ணரஜி தாமாலாத் த்யாத்வை மஹதீம் ஶ்ரீயம் 46**

**ததாரௌப்யமயீமாலா கந்யாம்யச்சதிகாமிதாம்**
**உக்தானாம் ஸர்வகாமானாம் தாயீநீபாரதைக்ருதா 47**

(பொ-ரை): ஸ்படிக மணியானது ஸாம்ராஜ்யத்தைத் தரும். தாம்பிரமணி மிக்க செல்வத்தை அளிக்கும். குரம் எனும் ஓர் வகை நாணல் முடியானது ஆத்ம ஞானத்தை தந்து ருத்ராக்ஷமாலை ஸகல காமனைகளையும் தருவதாம். பவளமாலை ஸர்வலோகத்தையும் வசப்படுத்துவதாம். நெல்லிக்கனிமாலை மோக்ஷம் அளிப்பதாம். முத்துமாலை ஸர்வ வித்தைகளையும் தருவதாம். மாணிக்கமாலை மூவுலகையும் வசப்படுத்துவதாம். நீலமாலையும் மரகத மாலையும் பகைவருக்குப் பயத்தை விளைவிப்பன. ஸுவர்ணமணிமாலைப் பெருஞ்செல்வத்தைத் தரும். வெள்ளிமணிமாலை விரும்பிய கன்னிகையைக் கிடைக்கச் செய்வதாம். பாதரஸ மணிகளாலானாகிய மாலை இதுவரையிலும் கூறிய ஸகல காமனைகளையும் நிறைவேறச் செய்யும்.

**அஷ்டோத்தரசதம் மாலாதத்ரஸ்யாதுத்தமோத்தமா**
**சதசங்க்யோத்தமாமாலா பஞ்சாஶன்மத்தியமாமதா 48**

**சது: பஞ்சாஶதாயாத்வா ஹ்யதமாசப்தவிம்ஶதி:**
**அதமாபஞ்சவிம் சத்யா யதிஸ்யாச்சதநிர்மிதா 49**

**பஞ்சாஶத்க்ஷராண்யத்ராநு லோமப்ரதிலோமத:**
**இத்யேவம் ஸ்தாபயேத்ஸ்பஷ்டம் நகஸ்மைசித்ப்ரதர்சயேத் 50**

(பொ-ரை): இங்கு நூற்றெட்டு மணிகளாங்கிய மாலையானது மிகவும் உத்தமமாம். நூறுமணிகளடங்கிய மாலையும் உத்தமமாம், ஐம்பது மணிகள் அடங்கிய மாலையானது மத்தியமமாம், அல்லது ஐம்பத்துநாலு மணிகளால் ஆகியதும் மத்யமமாம், இருபத்தேழு மணிகளால் ஆகிய மாலையானது அதமமாம், இருபத்தைந்து மணிகளாலாகியதும் அதமமாம், நூறு

மணிகளால் நிர்மிக்கப்பட்ட மாலையாயிருப்பின் அம்மணிகளில் ஐம்பது அக்ஷரங்கள் ஏற்ற முறையாலும் இறக்க முறையாலும் அடங்கியவை என்ற ஸ்தாபித்துக்கொள்ளவேண்டும், ஒருவனுக்கும் விளக்கமாய்க் காண்பிக்கக் கூடாது.

**வர்ணைர்விந்யஸ்தயாயஸ்து க்ரியதேமாலயாஜப:**
**ஏகவாரேணதஸ்யை வபுரச்சர்யாகிருதாபவேத் 51**

*(பொ-ரை): அக்ஷரங்களினால் நியாஸஞ் செய்யப்பட்ட மாலையால் செய்யப்படும் ஜபமானது ஓர் முறைமாத்திரத்தினாலும் புரச்சரணஞ் செய்யப்பட்டதாகும்.*

**ஸவ்யபாணிம்குதேஸ்தாப்ய தக்ஷிணஞ்சசிவோபரி**
**யோநிமுத்ராபந்தஏவம் பவேத்ஆஸநமுத்தமம் 52**

**யோநிமுத்ராஸநேஸ்தித்வா ப்ரஜபேத்யஸ்ஸமாஹித:**
**யங்கஞ்சிதபிவாமந்த்ரம் தஸ்யஸ்யு: ஸர்வஸித்தய: 53**

**சின்னாருத்தா: ஸ்தம்பிதாச்ச மிலிதாமூர்ச்சிதாஸ்ததா**
**ஸுப்தாமத்தா ஹீநவீர்யா தக்தத்ரஸ்தாரிபக்ஷகா: 54**

**பாலாயௌவநமந்த்ராச்ச வ்ருத்தாமந்த்ராச்சயேமதா:**
**யோநிமுத்ராஸநேஸ்தித்வா மந்த்ராநேவம்விதாந்ஜபேத் 55**

**தஸ்யஸித்தயந்திதே மந்த்ராநாந்யஸ்யதுகதஞ்சந**

*(பொ-ரை): இடதுகையை ஆஸனத்திலும் வலதுகையை லிங்கத்தின்மேலும் வைத்திருத்தலாகிய இப்படிப்பட்ட ஆஸனமானது ருத்தங்களாகவாவது, ஸ்தம்பிதங்களாகவாவது மிலிதங்களாகவாவது, யோநிமுத்ராஸனத்தில் இருந்துகொண்டு ஏகாக்கிரசித்தம் உடையோனாய் யாதேனும் ஒருமந்திரத்தை ஜபிப்பானாயின் அவனுக்கு ஸகலஸித்திகளும் கைகூடும்.*

*எந்த மந்திரங்கள் சின்னங்களாகவாவது, யோநிமுத்ராபந்தனம் என்னும் உத்தமமான ஆஸனமாம்.*

*எவை மூர்ச்சிதங்களாகவாவது, ஸுப்தங்களாகவாவது, மத்தங்களாகவாவது, ஹீநவீர்யங்களாக வாவது, சத்துருபக்ஷங்களாகவாவது, பால்யத்தன்மையை யுடையவைகளாகவாவது,*

வ்ருத்தங்களாகவாவது உள்ளனவோ இத்தகைய மந்திரங்களை யோநிமுத்ராஸநத்திலிருந்து எவன் ஜபிக்கின்றானோ அவனுக்கே அம்மந்திர ஸித்தியன்றி மற்றவர்களுக்கு எவ்வாற்றாலும் அல்ல.

**ப்ராஹ்மம்முஹூர்த்தமார்ப்யாமத்யாஹ்நம்ப்ரஜபேந்மநும் 56**

**அதஊர்த்வம் க்ருதேஜாப்யே விநாசோபவதித்ருவம்**
**புரஶ்சர்யாவிதாவேவம் ஸர்வகாம்யபலேஷ்வபி 57**

**நித்யேநைமித்திகேவாபி தபஶ்சர்யாஸுவாபுந:**
**ஸர்வதைவஜப: கார்யோநதோஷஸ் தத்ரகஶ்சந 58**

*(பொ-ரை):* ப்ரஹ்ம முகூர்த்தம் (விடிய ஐந்து நாழிகைக்கு முன்னராகிய காலம்) முதற்கொண்டு மத்யான காலம் வரையிலுள்ள காலத்தில் மந்திரத்தை ஜபிக்கலாம். அதற்கு மேற்பட்ட காலத்தில் ஜபித்தால் கேடே ஏற்படும். நிச்சயம் இவ்விதமே புரஸ்சரணக் கிரியையிலும் ஸகல காம்யவிதியிலும் என்க. நித்தியவிதியிலோ நைமித்திகவிதியிலோ தபஸ்செய்தலிலோ எப்போதுமே ஜபம் செய்யலாம். அதனில் குற்றம் யாதுமில்லை.

**யஸ்துருத்ரம் ஜபேத்நித்யம் த்யாயமாநோமமாக்ருதிம்**
**ஷடாக்ஷரம்வாப்ரணவம் நிஷ்காமோநிர்ஜிதேந்த்ரிய: 59**

**ததாதர்வசிரோமந்த்ரம் கைவல்யம் வாரகூத்தம**
**ஸதேநைவசதேஹேந ஶிவ:ஸஞ்ஜாயயதேஸ்வயம். 60**

*(பொ-ரை):* எவன் காமமற்றவனும், இந்திரியங்களை வென்றவனும், என்வடிவத்தை த்யானம் செய்கின்றவனுமாய் இருந்து கொண்டு தினந்தோறும் ருத்திரத்தையாவது ஷடாக்ஷரத்தையாவது, பிரணவத்தையாவது, அதர்வ சிரோமந்திரத்தையாவது, கைவல்ய உபநிஷத்தையாவது ஜபிப்பானோ ரகுகுலஸ்ரேஷ்டனே, அவன் அத்தேஹத்தோடு கூடவே தானே சிவனாகின்றான்.

**அதீதே சிவகீதாம்யோ நித்யமேதாம் ஜபேத்துய:**
**ஶ்ருணுயாத்வா ஸமுக்த: ஸ்யாத்ஸம் ஸாராந்நாத்ரஸம்ஶய: 61**

*(பொ-ரை):* இச்சிவகீதையை தினந்தோறும் அர்த்தவிசாரம் செய்கின்றானோ அல்லது ஜபிக்கின்றானோஅல்லது சிரவணமாவது செய்கின்றானோ அவன் ஸம்ஸாரத்தினின்றும் விடுபடுகின்றான். இதனில் ஸம்ஶயமில்லை.

**ஸூதர் கூறுகின்றார்**

ஏவமுக்த்வாமஹா தேவஸ்தத்ரைவாந்தாதீயத
ராம: க்ருதார்த்தமாத்மான மமந்யதததைவஸ: 62

*(பொ-ரை): இவ்வாறு சொல்லி மஹாதேவன் அவ்விடத்திலேயே அந்தர்த்தானமாயினர். ராமனும் தன்னை க்ருதார்த்தன் என்றெண்ணினார்.*

**ஏவம்மயாஸமாஸேந சிவகீதாஸமீரிதா**
**ஏதாம்யப்ரஜபேந்நித்யம் ச்ருணுயாத்வாஸமாஹித: 63**

**ஏகாக்ரசித்தோயோமர்த்ய : தஸ்யமுக்தி: கரேஸ்திதா**
**அதச்ருணுத்வம்முநயோநித்ய மேதாம்ஸமாஹிதா: 64**

**அநாயாஸேநவாமுக்தி: பவிதாநாத்ரஸம்சய:**
**காயக்லேசோமன: க்ஷோபோதநஹ: நிர்நசாதுந: 65**

**நபீடாச்ரவணாதேவயஸ்மாத் கைவல்யமாப்நுயாத்**
**சிவகீதாமதோநித்யம் ச்ருணுத்வம்ருஷிஸத்தமா: 66**

*(பொ-ரை): இங்ஙனம், சிவகீதை முழுதும் என்னால் சொல்லப்பட்டது. இதனை எவன் ஒருமனமுடையோனாய் தினந்தோறும் ஜபிப்பானோ, அல்லது சிரவணஞ்செய்வானோ அவனுக்கு முக்தி கையிலுள்ளது. முனிவர்களே, ஆதலால் இதனைத்தினந்தோறுஞ் சிரவணஞ் செய்யுங்கள், இதனால் எளிதில் முக்தி கிடைக்கும், இதனில் ஸம்சயமில்லை. காயக்கிலேசமாவது மனக்கிலேசமாவது தனக்குண்டாவதில்லை. தனக்கு எந்தத் தொந்தரவுமில்லை. யாதொரு காரணத்தால், சிரவணத்தினாலேயே கைவல்யம் அடையலாமோ ஓ சிவவரர்களே, ஆதலால் இச்சிவகீதையைத் தினந்தோறும் சிரவணஞ் செய்யுங்கள்.*

**ரிஷிகள் சொல்லுகின்றார்கள்**

**அத்யப்ரப்ருதிநஸ் ஸூதத்வமாசாரிய: பிதாகுரு:**
**அவித்யாயா: பரம்பாரம் யஸ்மாத்தாரயிதாஸிந: 67**

**உத்பாதகப்ரஹ்மதாத்ரோ: கரீயாந்ப்ரஹ்மத: பிதா**
**தஸ்மாத்ஸூதாத்மஜத்வத்த: ஸத்யம்நரந்யோஸ்திநோகுரு: 68**

(பொ-ரை): ஓ ஸூதமுனிவரே! இன்றுமுதல் நீரே எங்களுக்கு ஆசாரியர், பிதா, குரு யாரொரு காரணத்தால் எங்களை அவித்யையின் முடிவாகிய கரையைத் தாண்டச் செய்தவரோ, பிறப்பித்தவர் பிரஹ்மஜ்ஞானம் அருளியவரெனும் இவ்விருவர் களில் பிரஹ்மஜ்ஞானம் அருளியவரே சிறந்த பிதா. ஓ ஸூதபுத்திரரே, ஆதலால் உம்மிலும் அன்னியராகிய குரு ஒருவருமில்லை இது ஸத்யம்.

**வியாசர் கூறுகின்றார்**

**இதயுக்த்வாப்ரயயு: ஸர்வே ஸாயம்ஸந்த்யா முபாஸிதும்**
**ஸ்துவந்த: ஸூதபுத்ரந்தே ஸந்துஷ்டாகோமதிதடம்** 69

(பொ-ரை): இவ்வாறு கூறி அந்த ரிஷிகள் எல்லோரும் ஸூதபுத்திரரை, ஸ்தோத்திரஞ் செய்து கொண்டு, சந்தோஷம் உடையோர்களாய் ஸாயங்கால ஸந்தியா வந்தனஞ் செய்வதற்காகக் கோமதி நதிக்கரையை நோக்கி விரைவினிற் சென்றார்கள்.

*(பதினாறாவது அத்தியாயம் முற்றிற்று.)*

## சிவகீதை ஸம்பூர்ணம்.





உ

# சிவகீதை - உரை - மேற்கோள் நூல்கள்

யசுர்வேத சதருத்திரீயம்
நாராயணீயா
யாஜ்ஞிக்யுபநிடதம்
சுவேதாச்சுவதரோபநிடதம்
அதர்வசிகோபநிடதம்
அதர்வசிரோபநிடதம்
திருமந்திரம்
சிவஞானசித்தியார் - சுபக்ஷம்
ஔவைக்குறள்
திருக்கருவையந்தாதி
திருவாசகம்
இராமாயணம்
திருவிளையாடற்புராணம்
பைங்களோபநிடதம்
மஹோபநிடதம்
அந்நபூர்ணோபநிடதம்
துரீயாதீதாவதூதோபநிடதம்
ஸர்வஞானோத்தரஆகமம்
தேவிகாலோத்தரம்
சதுர்வேததாற்பர்ய ஸங்கிரக
ச்ருதி சூக்திரத்நமாலை
ஜாபாலியுடநிடதம்
தைத்திரீயோபநிடதம்
பௌஷ்கராகமம்
காமிகம்
சிவஞானபோதம்
கூர்மபுராணம்
சிவபுராணம்

யசுர் வேதம்
மாண்டூக்கியோபநிடதகாரிகை
சிகரிணீமாலை
கடவல்லியோபநிடதம்
சூதஸம்ஹிதை-
யஞ்ஞவைபவகண்டம்
தரிசநோபநிடதம்
உருத்திரஇருதய உபநிடதம்
அமிருதபிந்தூபநிடதம்
தேஜோபிந்தூபநிடதம்
திரிசிகிப்பிராம்மணோபநிடதம்
தக்ஷிணாமூர்த்தியுபநிடதம்
கந்தோபநிடதம்
சாண்டில்லியோபநிடதம்
பிருகதாருண்ணியம்
கைவல்லியோபநிடதம்
ருக்குவேதம்
பராசரபுராணம்
வாயுஸம்ஹிதை
சிவானந்தலகரி
பிருஹஜ்ஜாபலோபநிடதம்
ருத்ராட்சஜாபாலம்
மகாஸ்காந்தபுராணம்
தாயுமானவர்பாடல்
மகாபாரதம்
தேவாரம்
பட்டினத்தார்பாடல்

